ஆராய்ச்சிப் பேரறிஞர்

# தி. வை. சதாசிவ பண்டாரத்தார்

பதிப்பாசிரியர்

முனைவர் சா கிருட்டினமூர்த்தி

முனைவர் ச. சிவகாமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

தமிழறிஞர் வரிசை - 3

ஆராய்ச்சிப் பேரறிஞர்

# தி.வை. சதாசிவ பண்டாரத்தார்

பதிப்பாசிரியர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் ச. சிவகாமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA

திங்கள் (தொடர்) ஆய்வுக் கருத்தரங்கம் - தமிழறிஞர் வரிசை - 3
ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார்
(23-07-2003)


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Ārāyccip Pērariñar Ti. Vai. Catāciva Paṇṭārattār** |
| Editors | : | Dr. S. Krishnamoorthy<br>Director<br>IITS, Taramani, Chennai - 600 113.<br>Dr. S. Sivakami<br>Associate Professor<br>IITS, Taramani, Chennai - 600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113.<br>Ph: 22542992 |
| Publication No | : | 491 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 kg TNPL Map litho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | viii + 144 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 45/- (Rupees Forty Five Only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Chennai - 600 004. |
| Subject | : | Biography and Criticism on<br>T.V. Sadhasiva Pandarathar |

முனைவர் சா. **கிருட்டினமூர்த்தி**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஒல்லும்வகையெல்லாம் தமிழை வளர்ப்பதில் அயராது பாடுபட்டுவருகிறது.வாரக்கருத்தரங்கு,திங்கள் கருத்தரங்கு, ஆண்டுக்கருத்தரங்கு, அறக்கட்டளைக் கருத்தரங்கு போன்ற பல்வேறு கருத்தரங்குகளைத் தொடர்ந்து நடத்தி அக்கருத்தரங்கக் கட்டுரைகளை நூலாக வெளியிட்டுத் தமிழுக்கு வளம் சேர்த்து வருகிறது. தமிழாய்வுக்கு உடனடித் தேவை என்ன என்பதை உணர்ந்து அதைச் செயல்படுத்திவருவதே இதற்குக்காரணமாகும்.

இந்நிறுவனம் தொடக்கக் காலத்திலிருந்து பல்வேறு பொருண்மைகளில் கருத்தரங்குகளை நடத்திவருவதைத் தமிழுலகம் நன்கு அறியும். தமிழுக்கென்று அமைந்த மரபையும் பாரம்பரியத்தையும் எடுத்துக்காட்டும் வகையில் தமிழ் இலக்கியக் கொள்கை என்ற தொடர்கருத்தரங்கை இந்நிறுவனம் நடத்திவந்தது. தமிழர் கலைச் செல்வங்கள் என்ற தலைப்பில் தொடர் கருத்தரங்காகத் தமிழ் மரபினை உணர்த்தும் வகையிலும் கருத்தரங்குகளை நடத்திவந்தது. இவையன்றியும் பல்வேறு இலக்கியப் பொருண்மைகளில் கருத்தரங்குகளை நடத்திவந்தபெருமை இந்நிறுவனத்திற்கு உண்டு. இந்நிறுவனம் தன் அளவிலும் பிற நிறுவனங்களோடு சேர்ந்தும் இத்தகைய கருத்தரங்குகளை நடத்தித் தமிழாய்வுக்குச் சிறப்புச் சேர்த்து வந்துள்ளது. இக்கருத்தரங்குகளைத் தொடர்ந்து தமிழறிஞர்களை மையப்படுத்திய நிலையில் தொடர்கருத்தரங்கு ஒன்றைத் தொடங்க எண்ணியது. இவ்வகையில் **'தமிழறிஞர் வரிசை'** என்ற பெயரில் தொடர் கருத்தரங்கை நடத்துவதன்மூலம் அறிஞர் பலரின் அரிய தமிழ்த்தொண்டுகளை எல்லாம் இவ்வுலகிற்கு எடுத்துக்காட்ட முடியும் என்ற நிலையில் இத்தகைய தொடர்கருத்தரங்கை நடத்த முடிவு செய்யப்பட்டது.

வரலாறு எழுதப்படாத தமிழறிஞர்களுக்கு ஒரு வரலாற்றை உருவாக்குவதன் மூலம் அத்தமிழறிஞர்களைப் பற்றிய செய்திகள் ஆவணப் படுத்தப்படும். அவ்வாறு ஆவணப்படுத்தப்படுவதால் இத்தமிழறிஞர்கள் இம்மண்ணில் பிறந்த பயனும், இம்மண்ணிற்கும், மொழிக்கும், இனத்திற்கும்

ஆற்றிய அரும்பெரும் பணிகளும் பின்வருவோரால் போற்றப்படும் நிலை உருவாகும். இதனால், இத்தமிழறிஞர் வரிசைக்கருத்தரங்கை வாழ்க்கை வரலாற்றுக் கருத்தரங்காக அமைக்காமல் ஆய்வுக்கருத்தரங்கமாக அமைத்துக்கொள்ள முடிவு எடுக்கப்பட்டது. அவ்வகையில் தமிழுக்கு உழைத்து மறைந்த அறிஞர்கள் பலநூறுபேர் நம்முன் வந்தனர். அவர்கள் அனைவரைப் பற்றியும் இத்தொடர் கருத்தரங்கம் அமையவேண்டும் என்பது எங்கள் அவா. எனவே அனைவரையும் பட்டியலிட்டுப் பகுதி பகுதியாக இத்தொடர் கருத்தரங்கை நடத்த முடிவு செய்யப்பட்டது. அதில் முதல் கட்டமாகப் பதினாறு அறிஞர்கள் தெரிவுசெய்யப்பட்டனர்.

இத்தமிழறிஞர்களின் முதல் பட்டியலைக் கொண்டு தமிழறிஞர்களைப் பற்றிய கருத்தரங்கு நடைபெறும் நாள், கட்டுரை வழங்க வேண்டிய நாள் பற்றிய குறிப்புகளுடன் முதல் அட்டவணை தயார் செய்யப்பட்டது.

இப்பதினாறு தமிழ் அறிஞர்களைப் பற்றியும் கட்டுரைகள் வழங்கத் தமிழகத்தில் உள்ள பல்வேறு கல்லூரிகள், பல்கலைக்கழகங்களில் பணி புரியும் ஆசிரியர்கள் அழைக்கப்பட்டனர்.

ஒரு திங்களுக்கு ஒரு தமிழறிஞர் என ஒருவரைப் பற்றிய கருத்தரங்கில் 5 அல்லது 6 பேர் ஆய்வு செய்யவேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் கட்டுரைகள் கோரப்பட்டன. ஒருவரைப் பற்றிப் பலர் ஆய்வுசெய்து கட்டுரை வழங்குவதால் அவ்வறிஞருடைய பன்முக ஆளுமையை வெளிக்கொணர முடியும். அத் தமிழறிஞர்களின் வாழ்க்கை வரலாறு முதலில் அமையவேண்டும். பதிப்பு, மொழிபெயர்ப்பு, திறனாய்வு போன்ற நிலைகளில் அவ்வறிஞர் பற்றிய ஆய்வுகள் தொடர்ந்து இடம்பெறவேண்டும் என்ற நோக்கில் கட்டுரைகள் பெறப்பட்டன. இக்கருத்தரங்கில் மிகுந்த விருப்பத்துடன் ஆய்வாளர்கள் கட்டுரை வழங்க முன்வந்தமை உண்மையிலேயே எங்களுக்கு வியப்பு அளித்தது. முறையாகத் திட்டமிடப்பட்டுச் செயல்படத் தொடங்கிய **இத்திங்கள் தொடர் ஆய்வுக்கருத்தரங்கு – தமிழறிஞர்வரிசை** புதுப்பொலிவுடன் எண்ணிய வண்ணம் தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. இம்முதல் பட்டியலைத் தொடர்ந்து இரண்டாவது பட்டியல்,மூன்றாவது பட்டியல் எனத் தமிழறிஞர் வரிசை ஆண்டுக் கணக்கில் நடைபெறும் தொடர் கருத்தரங்காக உருவெடுத்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்றைய, நாளைய தலைமுறையினர்க்கும் தமிழ் உலகிற்கும் ஒரு சிறந்த ஆவணமாக அமைய இருக்கும் இத்தமிழறிஞர்வரிசைக் கருத்தரங்கக்

கட்டுரைகளைத் தொடர்ந்து நூலாக வெளியிடுவதில் இந்நிறுவனம் பெருமை கொள்கிறது. எப்போதும் ஒரு பணியைத் திட்டமிட்டு எதிர்கால நோக்கில் செயல்படுத்தினால் அத்திட்டம் வெற்றியடைவது உறுதி என்பதற்குச் சான்றாக இத்தமிழறிஞர் வரிசைத் தொடர் கருத்தரங்கு அமையலாம்.

இத்தமிழறிஞர் வரிசையின் மூன்றாம் கருத்தரங்காக, சதாசிவ பண்டாரத்தார் பற்றிய கருத்தரங்கு அமைகின்றது. இக்கருத்தரங்கிற்கு அறுவர் கட்டுரை வழங்கியுள்ளனர். இக்கட்டுரைகள் **ஆராய்ச்சிப் பேரறிஞர் சதாசிவ பண்டாரத்தார்** என்ற பெயரில் நூலாக வெளிவருகின்றது. இவர்தம் வரலாற்று ஆய்வுப் புலமையையும், ஊர்ப்பெயராய்வுப் போக்கையும், இலக்கிய ஆய்வுச் சிந்தனைகளையும் இக்கட்டுரைகள் தெற்றெனப் புலப்படுத்துகின்றன.

இந்நூல் தமிழ் ஆய்வாளர்க்கும், ஆர்வலர்க்கும் ஓர் அரிய பெட்டகமாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

இத்தொடர் கருத்தரங்கிற்கு ஒருங்கிணைப்பாளராக இருந்து சிறப்புடன் நடைபெற முழு முயற்சியுடன் செயல்பட்ட இலக்கியம் மற்றும் சுவடிப்புல இணைப் பேராசிரியர் முனைவர் ச.சிவகாமி அவர்களுக்கு என் நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறேன். இக்கருத்தரங்கு சிறப்புடன் நடைபெற அனைத்து உதவிகளையும் செய்த நல் உள்ளங்களுக்கு நன்றி. இத்தொடர் கருத்தரங்கக் கட்டுரைகள் நூலாக்கம் பெற இசைவளித்த நிறுவனப் பதிப்புக்குழுவினர்க்கு நன்றி.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வியமைச்சர் திருமிகு செ. செம்மலை** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும், **சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளிஅச்சுக்கோப்புச் செய்த திருமதி இரா. வெண்ணிலாவிற்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைன்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை

*22-4-04* **இயக்குநர்**

# கட்டுரையாளர்

முனைவர் **முகிலை இரெ. இராசபாண்டியன்**
*தமிழ் இணையப் பல்கலைக்கழகம்*
*சென்னை - 600 113.*

முனைவர் **ம. இளங்கோவன்**
*விரிவுரையாளர், தமிழ்த்துறை*
*டி.ஆர்.பி.சி.சி.சி. இந்துக்கல்லூரி (மாலை)*
*பட்டாபிராமம், சென்னை - 600 072.*

திருமதி இரா. கமலா
*தேர்வுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை*
*ஆக்சிலியம் கல்லூரி, வேலூர் - 6.*

முனைவர் **வேல். கார்த்திகேயன்**
*தமிழ் விரிவுரையாளர்*
*சிந்திக் கல்லூரி, சென்னை - 600 077.*

முனைவர் **அ.ம. சத்தியமூர்த்தி**
*இணைப் பேராசிரியர்*
*தமிழ்த்துறை, அரசு தன்னாட்சிக் கல்லூரி*
*கும்பகோணம் - 612 001.*

முனைவர் **வ. ஜெயா**
*இணைப் பேராசிரியர், தமிழியல் துறை*
*பாரதியார் பல்கலைக்கழகம், கோயம்புத்தூர் - 641 046.*

# உள்ளே

# வாழ்க்கை வரலாறு

ம. இளங்கோவன்

திருப்புறம்பயம் வைத்தியலிங்கம் சதாசிவபண்டாரத்தார் வரலாற்றுப் புகழ்மிக்க, தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டம், திருப்புறம்பயம் என்னும் சிற்றூரில் 15-08-1892ஆம் நாள் பிறந்தார். அவரது பெற்றோர் வைத்தியலிங்கம்-மீனாட்சி ஆவர்.

## கல்வி

தொடக்கக் கல்வியையும் நடுநிலைக் கல்வியையும் உள்ளூரிலும் புளியஞ்சேரியிலும் கற்றார். அதன் பிறகு குடந்தை நகரப்பள்ளியில் பள்ளி இறுதித் தேர்வில் சிறப்பாக வெற்றி பெற்றார். இவருக்கிருந்த தமிழ்க்கல்வி நாட்டம் காரணமாகத் தமிழ் இலக்கிய இலக்கணங்களைத் தாமே படித்து நல்ல புலமை பெற்றார். உயர்நிலைப் பள்ளியில் பயிலும் போது பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (பல சங்க நூல்களுக்கு உரை எழுதிப் பதிப்பித்தவர்), வலம்புரி சு. பாலசுப்பிரமணியப்பிள்ளை ஆகிய தமிழறிஞர்களின் தொடர்பு இவருக்கு ஏற்பட்டது. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் தமிழ் இலக்கியத்திலும் தமிழ்க்கல்வெட்டுத் துறையிலும் மிகுந்த புலமையும் ஈடுபாடும் மிக்கவர். அவரிடம் பெற்ற பயிற்சியினால் பண்டாரத்தாரவர்களுக்கு மேற்கண்ட இரு துறைகளிலும் நல்ல புலமையும் ஆராய்ச்சித் திறனும் ஏற்பட்டன.

## பணி

குடந்தை வாணாதுறை உயர்நிலைப் பள்ளியில் 1917ஆம் ஆண்டில் தலைமைத் தமிழ் ஆசிரியராகப் பொறுப்பேற்று 1942சூலைத் திங்கள் வரையில் நூற்றுக்கணக்கான மாணவர்களுக்குத் தமிழறிவு புகட்டி வந்தார். இக்காலத்தில் இவரிடம் தனித்தமிழ் நூல்கள் பாடங்கேட்டுச் சிறப்புற்றோர் பலர். அவர்களுள் திநா. சுப்பிரமணியன், எசு.கே. கோவிந்தசாமி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்.

அதன்பிறகு அண்ணாமலைப் பல்கலைக்கழக நிறுவனர் அரசர் அண்ணாமலையாரின் அழைப்பிற்கு இணங்கிப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறையில் 1942இல் இவர் பணியாற்றத் தொடங்கினார். இப்பணி 1960 வரை நீடித்தது.

*கட்டுரைகள்*

மதுரைத் தமிழ்ச் சங்கம் வெளியிட்டு வந்த செந்தமிழ், கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் வெளியிட்ட தமிழ்ப்பொழில் ஆகிய இரண்டு திங்கள் வெளியீடுகளிலும் இவர் இலக்கியம், வரலாறு பற்றிய கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வந்தார். தி.வை. சதாசிவ பண்டாரத்தார் திருப்புறம்பயம் என்றே அவரது பல கட்டுரைகள் வெளியாயின. குடந்தை வாணாதுறை உயர்நிலைப்பள்ளியின் தலைமைத் தமிழாசிரியராகப் பொறுப்பேற்றிருந்த போது தமது பெயருடன் வாணாதுறை என்றே கட்டுரைகள் எழுதி வந்தார்.

கரந்தைத் தமிழ்ச்சங்கத் தலைவர் தமிழவேள் த.வே. உமாமகேசுவரனார் ஊட்டிய ஊக்கத்தால் தமிழ்ப்பொழிலில் பல கட்டுரைகள் இவரால் எழுதப்பட்டன. கட்டுரைகள் பெரும்பாலும் தமிழக மன்னர் வரலாறு, ஊர்ப்பெயர் ஆய்வு, ஊர்ப்பெயர்ப் பொருத்தம், கல்வெட்டுப் பதிப்பு, கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டு இலக்கியங்களைக் கால நிர்ணயம் செய்தல், சைவசமயச் சான்றோர்கள் வாழ்ந்த ஊர்களை நிர்ணயம் செய்தல் போன்ற பொருள்களில் அமைந்தன. குறிப்பாகப் **பாண்டியர் வரலாறு** என்ற நூல் தொடக்கத்தில் செந்தமிழிலும், தமிழ்ப் பொழிலிலும் தொடர் கட்டுரைகளாக வெளிவந்து பின் நூல் வடிவம் பெற்றதாகும்.

செந்தமிழில் வெளியான பண்டாரத்தாரின் கட்டுரைகள் வருமாறு:

1. சோழன் கரிகாலன் கி.பி. 55-95
2. சோழன் செங்கணான்
3. திருவிளையாடற்புராணம் 64 ஆவது படல ஆராய்ச்சி
4. அதிகமான் நெடுமானஞ்சி
5. தொண்டைமான் சாசனம்
6. சோழர் குடி
7. இளங்கோவடிகள் குறித்துள்ள சரிதங்கள்
8. கல்லாடமும் அதன் காலமும்
9. திருவைகாவூர் சாசனங்கள்
10. முதற்கண்டராதித்த சோழ தேவர்
11. பெருமிழலைக் குறும்ப நாயனாரது திருப்பதி
12. கல்வெட்டுக்களால் அறியப்படும் தமிழ்ப்புலவர்கள்

13. உலாக்கொண்ட மூன்று சோழ மன்னர்கள்
14. பாண்டியர் வரலாறு (பத்துத் தொடர்)
15. ஏர் என்னும் வைப்புத்தலம்
16. கல்வெட்டுக்களில் நாட்டோடு இணைத்து வழங்கப் பெறும் எண்கள்
17. இளம்பூரணஅடிகளும் மணக்குடவரும்
18. கல்வெட்டுக்களால் அறியப்பெறும் மூன்று தமிழ் நூல்கள்
19. பழையாறை நகர்
20. மாற்பிடுகு பெருங்கிணறு
21. கொல்லம் ஆண்டு
22. நம்பியாண்டார்நம்பி காலம்
23. கல்வெட்டுக்களிலேயே காணப்படும் சில குழுவின் பெயர்கள்
24. திருச்சிராப்பள்ளி
25. மிழலை நாடும் மிழலைக் கூற்றமும்
26. தேவாரம் என்னும் பெயர் வழக்கு
27. செருத்துணையாரும் புகழ்த்துணையாரும் அவதரித்த திருப்பதிகள்

## கட்டுரைகளில் காணலாகும் சில குறிப்புகள் வருமாறு

கும்பகோணத்திற்கு 5 மைல் வடக்கேயுள்ள திருப்புறம் பயத்திற்கு மேற்கே இரண்டு மைல் தொலைவில் கொள்ளிட நதியின் தென்கரையில் உள்ள பாடல்பெற்ற சிவத்தலமான திருவைகாவூர் சிவன் கோயிலில் மூன்றாம் குலோத்துங்கனால் (1178-1216) உருவாக்கப்பட்ட சாசனங்களைப் பதிப்பித்துள்ளார்.

கல்லாடம் - கடவுள் வாழ்த்தோடு 103 ஆசிரியப்பாக்களால் ஆனது. ஆலவாயுறை இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அகப் பொருள் துறையில் கல்லாடர் என்னும் ஓர் நல்லிசைப் புலவரால் இயற்றப்பட்ட இவ் அரிய நூல் சொற் பொருளழகு வாய்ந்தது. கல்லாடர் என்ற பெயரில் கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் பின்னர் விளங்கிய வேறொருவர் ஆவார் என்றும் உரையாசிரியர் காலத்திற்குப் பிற்பட்டவர் என்றும் விளக்கியுள்ளார். இக்கட்டுரை 'கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் நான்காவது ஆண்டு நிறைவு விழாவில் சிதம்பரம் மகா-ள-ள-ஸ்ரீ திவான்பகதூர் சர். ராம.மு. இராமசாமிச் செட்டியார்

அக்கிராசனத்தின் (தலைமையின்) கீழ் நடைபெற்ற சபையில் (கருத்தரங்கில்) படிக்கப்பட்டது' என்ற குறிப்பும் உள்ளது.

கல்வெட்டுகளில் காணப்படும் பதினொரு புலவர்கள்: 1. உத்தண்டவேலாயுத பாரதி, 2. கொடிக்கொண்டான் பெரியான் ஆதிச்சதேவன், 3. காரனை விழுப்பரையன், 4. கவிராயர் ஈசுவர சிவ உடையார், 5. காசிக்கலியன் கவிராயன், 6. வீராண்ட பல்லவரையர், 7. பெருநம்பி, 8. பாச்சில் வேள் நம்பன், 9. ஆசிரியர் அநிருத்தர், 10. கோட்டாற்று இளம்பெருமானார், 11. அமருண்ணிலையாயின குவாவங்காஞ்சன் ஆகியோர் பற்றிய குறிப்பினைக் கட்டுரையில் விளக்கியுள்ளார்.

சிவனடியார் 63 பேருள் ஒருவரான குறும்பநாயனாரது திருப்பதியான பெருமிழலை என்பது இரண்டு இடங்களில் இருப்பதாகவும், ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் படிக்காசு பெற்ற தலமாகிய திருவீழிமிழலை என்னும் திருப்பதியும் மேற்கண்ட பெருமிழலையும் ஒன்றா என்ற ஐயம் எழுப்பி, மிழலை நாட்டு மிழலையே, வெண்ணிநாட்டு மிழலையே என்று சுந்தரர் குறிப்பிடுவதனால் இரண்டு மிழலைகள் இருந்திருக்க வேண்டும் என்ற ஊகம் ஏற்பட்டுத் திருநீடூர், மாயூரம், வைப்பூர், நாகைப்பட்டினம் முதலான நகரங்களை உள்ளடக்கிய சோழநாட்டுக் குணக்கடல் சார்ந்த பகுதியே மிழலை நாடெனப்பட்டது என்ற முடிவிற்கு வந்து மிழலை நாட்டுப் பெருமிழலையே குறும்பநாயனாரது திருத்தலம் என்ற முடிவினைக் கூறியுள்ளார்.

பண்டைக்காலங்களில் சோழ நாட்டை மிக்க புகழுடனும் சிறப்புடனும் ஆண்டு வந்த சோழ அரசர்களுள் சிலர் சரித்திரத்தை, யான் அறிந்தவரை நம் நாட்டார்க்குத் தெரிவிப்பது என் கடமையாதலின் ஈண்டு, சோழன் கரிகாலன் சரித்திரத்தை ஒருவாறு சுருக்கி எழுதப் புகுந்தேன் என்று முன்னுரையில் பண்டாரத்தார் கூறுவதால் அவரது கடமையுணர்வு வெளிப்படுகிறது. முதற்கயவாகுவின் தந்தை காலத்தில் இவன் இலங்கைக்குப் படையெடுத்துச் சென்று 1200 சிங்களவர்களைச் சிறைப் பிடித்துச் சோழ தேசத்திற்குக் கொண்டு வந்து காவிரியின் இருமருங்கும் கரையெடுப்பித்தான். கடியலூர் உருத்திரங்கண்ணனார் பட்டினப்பாலை பாடி 16 லட்சம் பொன் பரிசில் பெற்றார் போன்ற செய்திகள் அக்கட்டுரையில் காணப்படுகின்றன.

சோழன் செங்கணான் என்பவன் "தென்னவனாய் உலகாண்டசெங்கணான்" என்று சுந்தரர் கூறிய படி அவர் ஒரு சிவனடியார் என்பது புலப்படும்.

அதியமான் நெடுமான் அஞ்சியின் நாடு எது என்பதை வரையறுக்கும் பொருட்டு, இப்பொழுது தென்கன்னடம் ஜில்லாவிலுள்ள குதிரை மூக்கு மலையே இவனுடைய குதிரைமலையா யிருக்கலாம் என்று கருத இடமுண்டு என்று கூறுகின்றார்.

தொண்டைமான் சாசனம் என்ற கட்டுரையில் இத்தாமிர சாசனம் திருச்சி டி.மு. கோர்ட்டில் 1853 ஆம் வருடம் தாக்கல் செய்யப்பட்டுள்ளது. இதன் நகல் ஒன்று திருச்சி நேஷனல் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதராயிருந்து சில வருடங்கட்கு முன்னர்க் காலஞ்சென்ற ஸ்ரீமத்-தி.ச. ஆறுமுக நயினாரவர்கள் வீட்டிலிருந்து கிடைத்தது என்ற குறிப்புடன் அச்சாசனம் பதிப்பக்கப்பட்டுள்ளது.

செருத்துணையார், புகழ்த்துணையார் ஆகிய இரு சைவசமயக்குரவர்களும் அவதரித்த திருப்பதிகள் பற்றிய குறிப்பில் சோழ மண்டலத்திலுள்ள மருகல் நாட்டுத் தஞ்சாவூர் அதாவது நன்னிலந் தாலுகாவிலுள்ள இத்தஞ்சாவூரே நம்பியாண்டார் நம்பியும் சேக்கிழாரடிகளும் கூறிய மருகல் நாட்டுத் தஞ்சாவூராகும். இதுவே செருத்துணை நாயனார் அவதரித்த திருப்பதி என்பது நன்கு துணியப்படும் என்றும் சைவசமயக் குரவர்களாகிய திருஞான சம்பந்தரும் சுந்தர மூர்த்திகளால் குறிக்கப்பெற்றதும் இக்காலத்தில் அழகாப்புத்தூர் என்று வழங்கப்படுவதுமாகிய அரிசிற்கரைப் புத்தூரே 63 நாயன்மார்களில் ஒருவரான புகழ்த்துணைநாயனார் அவதரித்த திருப்பதி என்றும் துணிந்துள்ளார்.

## தமிழ்ப் பொழில் இதழில் வெளியான பண்டாரத்தாரின் கட்டுரைகள் வருமாறு

பொழிலில், செந்தமிழில் வந்த கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.

1. திருப்புறம்பயத்துக் கல்வெட்டுக்கள் (செந்தமிழ்)
2. மழவர் வரலாறு
3. ஓரி
4. சம்புவராய மன்னர்
5. முதலாம் குலோத்துங்க சோழன்
6. பாண்டியர் வரலாறு
7. திருமலை வெண்பா
8. திருக்கழுக்குன்றத்துக் கல்வெட்டுக்கள்
9. கல்வெட்டுக்களால் அறியப்படும் சில தமிழ்ப்புலவர்கள்

10. உலாக்கொண்ட மூன்று சோழ மன்னர்கள்
11. பெருமிழலைக் குறும்ப நாயனாரது திருப்பதி
12. புறநாட்டுப் பொருள்கள்
13. சில கல்வெட்டுக்கள் (கும்பகோணம் நாகேசுவரரது திருக்கோயிலில் உள்ள சில கல்வெட்டுக்கள்)
14. கல்வெட்டுக்கள் (கோவிந்த புத்தூரிலுள்ள திருவிசய மங்கைக்கல்வெட்டுக்கள்)
15. காளமேகப் புலவரது காலம்
16. பழைய காலத்திய இருபெருங்கிணறுகள் (மாற்பிடுகு இரு பெருங்கிணறு, இராசராசன் கிணறு)
17. முதுகண்ணும் தலைக்கோலும்
18. ஏர் என்னும் வைப்புத்தலம்
19. விரையாக்கலியும் விடேல் விடுகும்
20. சிராமலை அந்தாதி
21. கூத்தரால் குறிக்கப்பெற்ற சில தலைவர்கள் (தொண்டைமான், முனையர்கோன், சோழர்கோன், மறையோன் கண்ணன், வாணன், காலிங்கர்கோன், செஞ்சியர் கோன் காடவன், வேணாடர்வேந்து, அநந்தபாலன், வத்தவன், சேதியர்கோன்)
22. அறந்தாங்கி அரசு
23. நந்தனாரது ஆதனூர்
24. திருக்கைக் கோட்டி (திருமுறைகள் வைத்துப் பூசிக்கப்படும் கோயில்மண்டபம்)
25. மிழலை நாடும், மிழலைக் கூற்றமும்
26. திருச்சிராப்பள்ளி
27. தூங்கானை மடம்
28. இருபெரும் புலவர்கள் (விசாகப் பெருமாளையர், சரவணப்பெருமாளையர்)

**நூல்கள்**

பண்டாரத்தார் தமிழ்நாட்டு மன்னர் வரலாற்றில் ஈடுபாடு கொண்டிருந்ததனால் **முதற்குலோத்துங்க சோழன், பாண்டியர் வரலாறு** என்னும் இரு நூல்களையும் வெளியிட்டார். இவை இரண்டும் அறிஞர்களின் பாராட்டினைப் பெற்றன.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறையில் பணியாற்றிய காலப் பகுதியில், **சோழர் வரலாறு (மூன்று பாகங்கள்), தமிழிலக்கிய வரலாறு (இருண்ட காலம்), தமிழிலக்கிய வரலாறு (13, 14, 15ஆம் நூற்றாண்டுகள்)** ஆகியவற்றை எழுதி வெளியிட்டார். சோழர் வரலாறு தமிழ் எழுத்தாளர்கள் இடையே நல்ல வரவேற்பைப் பெற்றது. கல்கி போன்ற சிலர் மேற்கண்ட நூலின் பின்னணியில் 'பொன்னியின் செல்வன்' போன்ற வரலாற்றுப் புதினங்களைத் தமிழில் வெளியிட்டுள்ளனர்.

## நூல்களின் பட்டியல் வருமாறு

1. முதற்குலோத்துங்க சோழன்
2. பாண்டியர் வரலாறு
3. பிற்காலச் சோழர் சரித்திரம் (3 தொகுதி)
4. காவிரிப்பூம்பட்டினம்
5. கல்வெட்டுக்களால் அறியப்பெறும் உண்மைகள்
6. பாண்டியர் பெருமாட்சி
7. இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும்.

மாதவி மன்றத்தின் செயலாளர் நா. தியாகராசன் வேண்டுகோளின் படி எழுதப்பட்ட நூல் காவிரிப்பூம்பட்டினம் ஆகும்.

தமிழிலக்கிய வரலாறு (கி.பி. 250-600) என்ற நூலின் முன்னுரை பண்டாரத்தாரின் ஆய்வுப்புலமையை நன்கு வெளிப்படுத்தும்.

பாண்டியரது தலைநகராகிய மதுரையம்பதியில் நடைபெற்ற கடைச்சங்கத்தின் பின்னரும் சைவசமயக் குரவர்களாகிய திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் தோன்றிய காலத்திற்கு முன்னரும் அமைந்த ஒரு காலப்பகுதியே தமிழ் இலக்கிய வரலாற்றில் இருண்ட காலம் என்று கூறப்படும். அது கி.பி. 250 முதல் கி.பி. 600 வரையில் அமைந்த ஒரு காலப்பகுதியாகும். இவ்விருண்ட காலப்பகுதியில் தோன்றிய இலக்கியங்களை உணர்ந்து கோடற்குத் தக்க ஆதாரங்களின்மை அறிஞர் பலரும் அறிந்ததே. எனினும் கடைச் சங்க காலத்திற்குப் பின்னர்த் தமிழ்நாட்டில் ஏற்பட்ட அன்னியர் ஆட்சியில் வடமொழியில் எழுதப்பெற்ற சில சைன நூல்களும், பாலி மொழியில் இயற்றப்பெற்ற சில செப்பேடுகளும் இக் கால நிலையை அறிந்து கொள்வதற்குப் பெரிதும் பயன்பட்டன. அன்றியும்

கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட தமிழ் நூல்களிலும், பேராசிரியர், நச்சினார்க்கினியர் முதலான உரையாசிரியர்களின் உரைகளிலும் காணப்படும் குறிப்புகளும் சில தமிழ்நூல்களின் காலங்களை உணர்தற்குத் துணை புரிந்தன.

தமிழ்நாட்டில் கிபி. ஏழாம் நூற்றாண்டின் முதற்பகுதியிலிருந்து தான் கல்வெட்டுகள் கிடைத்துள்ளமையால் அந்நூற்றாண்டிற்கு முற்பட்டுள்ள இருண்டகாலப் பகுதியில் நிலவிய நூலாசிரியர்களின் காலங்களை ஆராய்ந்து காண்பதற்கு அவை பயன்படவில்லை. ஆயினும் கிடைத்த அகச் சான்றுகளையும் புறச்சான்றுகளையும் உறுதுணையாகக் கொண்டு இவ்விலக்கிய வரலாறு எழுதி முடிக்கப்பட்டதாக முன்னுரை கூறுகிறது. இதில் அவரது முயற்சியும் பன்மொழிப் புலமையும் தருக்க முறையும் சிறப்பாகப் புலப்பட்டுள்ளன.

## கல்வெட்டுகளால் அறியப்பெறும் உண்மைகள்

அறிஞர் சதாசிவ பண்டாரத்தாரின் இடையறாத உழைப்பால் தமிழ்நாட்டு வரலாறு பெரிதும் விளக்கமுற்றது. கல்வெட்டு ஆராய்ச்சியாளர்களுக்கு வாய்த்திருக்க வேண்டிய வரலாற்றறிவு, ஆராய்ச்சித்திறன், மொழிப்புலமை ஆகிய அனைத்தும் அவர் குறைவற வாய்க்கப் பெற்றிருந்தார். அவற்றோடு இடையறாத ஆர்வமும் உழைப்பும் அவருடைய வெற்றிக்குக் காரணமாய் அமைந்தன.

இலக்கியங்களின் காலத்தையும் இலக்கியங்களில் விளங்கப்பெறாத பல இடங்களையும் அவர் கல்வெட்டுகளின் துணையைக் கொண்டு விளக்கிக் காட்டினார். தமிழ் மொழியின்பால் அவருக்கிருந்த அளவற்ற ஈடுபாடும் அடிக்கடி அவர் எழுத்துகளில் வெளிப்பட்டு நின்றதென்றாலும் அது அவருடைய ஆராய்ச்சி நேர்மையை அலைத்துவிடவில்லை. இதனைச் சைவ சமய அடியார்களான மாணிக்கவாசகர், சேக்கிழார் முதலியவர்களின் காலங்களை வரையறுப்பதனின்று அறியலாம். பிற்கால வரலாற்று அறிஞர்களுக்கெல்லாம் முன்னோடியாக விளங்கியவர், தம் இறுதி நாள் வரையிலும் அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆராய்ச்சித் துறையில் பணி ஆற்றினார்.

## பண்டாரத்தாரின் கல்வெட்டாய்வு

சதாசிவபண்டாரத்தார் திருப்புறம்பயத்துக் கல்வெட்டுக்கள், தொண்டைமான் சாசனம், திருவைகாவூர் சாசனம்,

கல்வெட்டுக்களிலேயே காணப்படும் சில குழுக்களின் பெயர்கள், கல்வெட்டுக்களில் நாட்டோடு இணைத்து வழங்கப்பெறும் எண்கள், கல்வெட்டுக்களால் அறியப்பெறும் மூன்று தமிழ்நூல்கள், கல்வெட்டுக்களால் அறியப்படும் சில தமிழ்ப்புலவர்கள் ஆகிய கட்டுரைகள் இயற்றியுள்ளார். அவற்றிலிருந்து பண்டாரத்தாரின் கல்வெட்டுக்களைப் படிக்கும் ஆற்றல், பதிப்பிக்கும் பயிற்சி, கால நிர்ணயம் செய்யும் வரலாற்று வரைவுமுறை முதலியனவற்றை அறிந்த அவர்தம் புலமை வெளிப்படுகின்றது.

## பண்டாரத்தாரின் வரலாற்றாய்வு

பண்டாரத்தாரின் பாண்டியர் வரலாறு, பிற்காலச்சோழர் வரலாறு போன்ற நூல்கள் பாடப்புத்தகங்களாகச் சென்னைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம் முதலியவற்றில் வைக்கப்பட்டிருந்தன. முதற் குலோத்துங்க சோழன் பற்றிய முழுமையான வரலாற்றை 'முதற்குலோத்துங்க சோழன்' என்ற நூலில் வரைந்துள்ளார். வரலாற்று நூல்களைக் கல்வெட்டு, இலக்கியம், சாசனம், செப்பேடுகள் முதலியனவற்றைக் கொண்டு எழுதிய அறிஞராக விளங்குகிறார். ஆனால் வரலாற்றைச் சமூகவியல், மொழியியல், இலக்கியம், பொருளியல், அகழாய்வு முதலிய துறைகளை இணைத்து முழுமையாக, சரியாக எழுத வேண்டியது இன்றியமையாததாகிறது. இந்த வகையில் பண்டாரத்தாரின் பணி முன்னோடிப் பணியாகும்.

## தமிழ்ப் பல்கலைக்கழகக் கனவு

கரந்தைத் தமிழ்ச்சங்கம் வாயிலாகத் தமிழ்ப் பல்கலைக்கழகம் காண வேண்டும் என்ற கனவைத் தமிழகம் விழிக்காமுன்னமே வெளியிட்ட அறிஞர்களில் இவரும் ஒருவர் என்பது வெளிப்படையாகப் புலப்படுகிறது. கரந்தைத் தமிழ்ச் சங்கத்துப் பதினான்காம் ஆண்டு விழாக் காலத்தில் எண்ணித் துணிந்த முடிவுகள் (25-10-1925):

**அவைத்தலைவர்: பண்டிதமணி மு. கதிரேசஞ்செட்டியார்**

இக்கரந்தைத் தமிழ்ச் சங்கத்து ஆண்டுத் திருவிழாக் காலங்களில் கூடிய பெரியோர்கள் வேண்டியவாறே தமிழ்மொழிக்கென ஒரு தனிப் பல்கலைக்கழகத்தை நிறுவுதற் பொருட்டு நமது மாகாண வளர்ச்சி நெறி அமைச்சர் திருவாளர் திவான் பகதூர் தி.நா.சிவஞானம் பிள்ளை அவர்களும் மற்றைப் பெரியோர்களும் வேண்டிய நன்முயற்சிகளைச் செய்து வருதலை

நோக்கி இப்பெருங்கூட்டத்தார் பெருமகிழ்வு எய்துகின்றனர். இந்த நன்முயற்சி விரைவில் கைகூடுமாறு தமிழராவார் ஒவ்வொருவரும் போதிய உதவிகளைச் செய்ய முன்வரவேண்டும் என்று அவர்களைப் பெரிதும் வேண்டிக் கொள்கின்றனர்.

முன்மொழிந்தோர்: ஊ.சா. வேங்கடராமையர், தமிழ்ப்பண்டிதர், கும்பகோணம்.

வழிமொழிந்தோர்: டி.வி. சதாசிவபண்டாரத்தார், தமிழ்ப்பண்டிதர், கும்பகோணம்.

தமிழ்ப் பல்கலைக்கழகம் குறித்த இவ்வேண்டுகோள் தமிழ்ப்பொழில் துணர் 1 மலர் 10 (குரோதன-தை). 23-1-1926 அன்று நடந்த மாநாடு என்ற குறிப்புடன் வெளியாகியுள்ளது.

அன்று விதைத்த விதை இன்று தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகமாகச் சிறக்கிறது என்பதிலிருந்து அவரது தீர்க்க தரிசனம் புலப்படுகிறது.

## சிறந்த தமிழ்ப்பற்றாளர்

அவரது வரலாற்று நூல்களிலும், கட்டுரைகளிலும் வடமொழிச் சொற்கள் பெரிதும் கலவாமல் நடைமுறைத் தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ள தன்மையை அறியமுடிகிறது. தமிழ்மொழியின்பால் அவருக்கிருந்த ஈடுபாடு புலப்படும் வகையில் அவரது எழுத்துப் பணி அமைந்துள்ளது.

## இறுதிவரை எழுத்துப்பணி

இவர் உடல்நலிவுற்று 02-01-1960 இல் அண்ணாமலை நகரில் இயற்கை யெய்தினார். தம் இறுதிக்காலம் வரை ஆய்வும் எழுத்துமாகவே வாழ்ந்தார். அழுத்தமான சீர்திருத்த உணர்வும், ஆழ்ந்த தமிழ்ப்பற்றும் இன உணர்ச்சியும் கொண்ட இவர் தமிழ், தமிழர் முன்னேற்றத்துக்காக உழைத்த இயக்கங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டவராக விளங்கினார். தமிழக அரசியல் வரலாற்றில் நுணுக்கமான பல செய்திகளை இவர் அவ்வப்போது கூறுவது உண்டு. தமிழர் தலைவர் பலரின் தொடர்பும் குறிப்பாகத் தந்தை பெரியார்பால் அளவற்ற ஈடுபாடும் கொண்டவர். நடுவு நிலைமையில் இருந்து உண்மைகாணும் பேரார்வம் இவருக்கு இருந்ததனால் உண்மைச் செய்திகள் பலவற்றை இவர் பேசியும் எழுதியும் வந்தார். இந்நிலை அறிஞர் பலரால் பெரிதும் போற்றப்பட்டது. இவர்தம் மறைவுக்குப்பின்னர்க் கட்டுரைகள் சிலவற்றைத் தொகுத்து

இலக்கியமும் கல்வெட்டுக்களும், கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள் ஆகிய இரண்டு தொகுப்பு நூல்கள் வெளியாகி உள்ளன.

பாராட்டுகள்

பண்டாரத்தாரின் தமிழ்த் தொண்டைப் பாராட்டித் தமிழ் எழுத்தாளர் சங்கம் 7-4-1956 இல் கேடயம் வழங்கிச் சிறப்பித்தது.

மதுரைத் திருவள்ளுவர் கழகம் இவருக்கு நடத்திய பாராட்டு விழாவில் செட்டிநாட்டரசர் முத்தையவேள் தலைமையேற்றுப் பொன்னாடை போர்த்தினார்.

பேராசிரியர் கார்மேகக் கோனார் இவருக்கு **ஆராய்ச்சிப் பேரறிஞர்** என்னும் பட்டத்தை வழங்கி அதற்குரிய பொற்பதக்கத்தையும் அளித்தார் (29-3-1956).

புதிய முறையில் '**செம்பியன்மாதேவித் திருக்கோயில் வரலாறு**' இவரால் எழுதப்பெற்றது. அந்நூல் கோயில் குடமுழுக்கு விழாவில் 13-5-1964 இல் வெளியிடப்பட்டது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக அந்நாள் விளங்கிய டி.எம். நாராயணசாமி பிள்ளை, பதிவாளர் டி.டி.மீனாட்சி சுந்தரனார், அறநிலைய ஆணையர் சர்க்கரை சேர்வை ஆகியோர் பங்கு கொண்ட அவ்விழாவில் இவ்வறிஞர்க்குப் பொன்னாடையும் போர்த்தப்பட்டது.

தம் ஆசிரியர் திரு. பாலசுப்பிரமணியப்பிள்ளையுடன் இணைந்து '**சைவசிகாமணிகள் இருவர்**' என்ற நூலையும் இவர் வெளியிட்டுள்ளார்.

மேலும் 1930 இல் தனி நூலாக வெளியான சோழர் வரலாறு பற்றி "திருவாங்கூர் இராஜ்ஜியத்தின் கல்வெட்டுப் பரிசோதகர் காலஞ்சென்ற திரு. T.A. கோபிநாதராயர், M.A., 'சோழ வமிச சரித்திரச்சுருக்கம்' படித்த போது நம் தமிழகத்தில் பண்டைக் காலத்தில் அரசாண்ட சேர சோழ பாண்டியரது வரலாறுகளை இயன்றவரையில் விரிவாக அறிந்துகொள்ள வேண்டுமென்ற விருப்பம் உண்டானது. இது தமிழ்ப்பொழிலில் 2,3, ஆம் துணர்களில் வெளியிடப்பட்டது." என்று கூறுகிறார். இந்நூலுக்கு, உ.வே.சா. 1930இல் எழுதிய முன்னுரை

| | |
|---|---|
| Mahamahopadyaya | Tyagaraja Vilas |
| V.Swaminathaiyar | Tiruvetteswaranpet |
| Madras | 2-8-1930 |

கும்பகோணம் வாணாதுறை ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி சதாசிவ பண்டாரத்தார் இயற்றிய முதற் குலோத்துங்க சோழன் சரித்திரத்தை முற்றும் படித்துப் பார்த்தேன். இயற்றியவர் நெடுங்காலமாகச் சிலாசாஸனங்கள் சங்கச் செய்யுட்கள் முதலியவற்றை ஆராய்ந்தவரென்பதை இது புலப்படுத்துகின்றது. தமிழ்மொழி இக்காலத்தில் பல துறைகளிலும் வளர்ச்சியுற்று வருகின்றதென்பதற்கு இந்நூலாசிரியரது கல்வி முறையையே ஓர் இலக்காகக் கூறலாம். இச்சரித்திரத்திலுள்ள விஷயங்கள் விளங்கும்படி நன்றாக முறைப்படுத்தி எளிய நடையில் எழுதப்பட்டுள்ளன. தமிழரசர்களுடைய சரித்திரங்களை அறிந்து கொள்வது இன்றியமையாததாதலால் இந்தப் புத்தகம் பொதுவாக யாவருக்கும் சிறப்பாகப் பள்ளிக்கூடப்பிள்ளைகளுக்கும் மிகப் பயன்படுமென்று எண்ணுகிறேன்.

இங்ஙனம்
வே. சாமிநாதையர்

## பண்டாரத்தார் வழங்கிய கையறுநிலைச் செய்யுள்

*20-7-1947*ஆம் நாள் யாழ்நூல் இயற்றிய விபுலானந்தர் மறைவு குறித்துச் சதாசிவபண்டாரத்தார் இயற்றிய இரங்கற்பா அவரின் கவிதையுள்ளத்தை, சொல் வீச்சினை விளக்கமாகக் காட்டுகிறது. அக்கவிதை வருமாறு:

அந்தோ! விபுலானந்த அறிஞ நீ யவனிதுறந் தகன்றா யென்னுஞ்
சிந்தாகுலச் செய்தி செவிமடுக்க யாஞ்செய்பவஞ் செப்பற் பாற்றோ
எந்தாய் நின் னருண் முகத்தை யென்றுகொலோ காண்பே
மென்றேங்கி
நந்தாத பெருந்துயருள் நனிமூழ்கியிஞ்ஞான்று நடுக்குற்றே மால்.

உற்றாரை யான்வேண்டேன் ஊருடன்பேர் வேண்டே
னென்றுரைத்தா யந்நாள்
கற்றாரை யான்வேண்டே னென மொழியு மொரு
நிலையைக் காணே னென்று
சொற்றாய்நீ கலைஞரெலாம் துயர்க்கடல்வீழ்ந் தரற்ற
நிலந்துறத்தல் நன்றோ
கற்றோர்க்கோர் உறுதுணையாம் விபுலாநந்தப் பேர்கொள்
கலைவல்லோனே.

இந்நாளில் துறவியென இயம்பிடுவோர் எழின் மாடத் தினிதே
தங்கி

உன்னாத பொருளில்லை உஞற்றாத செயலில்லை யுன்னைப்
போலப்
பன்னாளு மக்கட்குப் பணிபுரிந்து மகிழ்வுற்றோர் பாரில் யாவர்
பன்னாடும் போற்றுமெங்கள் விபுலானந் தப்பேர்கொள்
பரவல்லோனே.

முத்தமிழும் பயின்றிந்நாள் முறையாக வாய்ந்தோர் யார்
மொழியின்
என்றோர்க்கு உத்தமநீ யுள்ளாயென் றுணர்த்தி மிக விருமாந்தேம்
ஓரா
தெம்மை இத்தலத்தே விட்டகன்றாய் இதுவோநின் தண்ணளிதான்
இயம்பாய் ஐயா வித்தகனே விழுத்தவத்து விபுலாநந் தப்பேர்கொள்
மேன்மையோனே.

எங்கள் தமிழ்த் தாய்க்கந்நாள் எழிற்சிலம்பொன் றளித்த பிரான்
இளங்கோவேந்தன் துங்கவிபு லாநந்தத் தூயோனே யிவ்வுலகில்
தோன்றிய முன்னாள் சங்கமிருந் தாய்ந்த விசைத் தமிழதனை
யாழ்நூலாய்த்
தந்த பின்னே புங்கமிகுந்த திருக்கயிலை புகுந்தனனால்
மற்றிதனைப் புலங்கொள்வீரே.

பொழில்: 23. (1947 - 48).

இதில் மணிவாசகரின்

**"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்"**

என்ற வரிகளின் சாயலில் இயற்றப்பட்ட வரிகள் வியக்கச் செய்கின்றன. வேறு எவருக்கும் இரங்கற்பா இயற்றாத இவர் விபுலாநந்தரின் அறிவுச்சால்பை உணர்ந்து அவர் இறந்தபோது இயற்றிய பாடல் இவர்தம் செய்யுட்திறம் புலப்பட நிற்கிறது. முறையான கவிஞரின் வரிகளைப் போன்று சிறப்பான சொல்லாட்சி காணப்படுகின்றது.

## பண்டாரத்தாரின் மறைவு குறித்த இரங்கற் செய்திகள்

தென்னாட்டு ஆராய்ச்சிப் பேரறிஞர் என மாதவி மன்றத்தாரால் புகழப்பட்ட சதாசிவபண்டாரத்தார் அண்ணாமலை நகரில் 02-1-1960 ஆம் நாள் சனிக்கிழமை இறைவன் திருவடி நீழல் அடைந்தார்.

"புதிய முறையில் 'செம்பியன் மாதேவித் திருக்கோயில் வரலாறு' இவரால் எழுதப்பெற்றது. அந்த நூல் கோயில் குடமுழுக்கு விழாவில் 13-5-1964-இல் வெளியிடப்பட்டது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக அந்நாள் விளங்கிய நாராயணசாமிப்பிள்ளை, பதிவாளர் டி.டி.மீனாட்சி சுந்தரனார், அறநிலைய ஆணையர் சர்க்கரை சேர்வை ஆகியோர் பங்குகொண்ட அவ்விழாவில் இவ்வறிஞர்க்குப் பொன்னாடையும் போர்த்தப் பட்டது" என்ற வாழ்வியல் களஞ்சியம் தொகுதி: 8; ப: 345இல் வரும் குறிப்பில் 13-5-1954 என்றிருக்க வேண்டுமோ என்ற ஐயம் எழுகிறது. இக்குறிப்பை அக்கட்டுரை எழுதிய அவரது மகனார் ச. திருஞான சம்பந்தம் கவனித்திருக்கக் கூடும். அதற்கான திருத்தம் சரிபார்க்கப்பட்டு மேற்கொள்ளப்பட வேண்டும்.

பண்டாரத்தாரது அனைத்து நூல்களையும் பேராசிரியர் வெள்ளைவாரணனார் மெய்ப்புத்திருத்திப் பதிப்புப்பணிக்குப் பெருந்தொண்டு செய்துள்ளார்.

1960 ஜனவரி பிப்ரவரி மாத இதழில் தமிழ்ப்பொழில் அவரது மறைவு குறித்து வெளியிட்ட இரங்கற் செய்தி வருமாறு:

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து வரலாற்றாராய்ச்சித் துறையில் பலவாண்டுகள் பணியாற்றித் தென்னக மன்னர் மக்களாயவர் பற்றிய வரலாற்றுண்மைகளைத் தெள்ளிதின் விளக்கும் நூல்கள் பலவற்றின் ஆசிரியரான தி.வை. சதாசிவ பண்டாரத்தாரவர்கள் (2-1-1960) சனிக்கிழமை இறைவன் திருவடி நிழலடைந்தமை குறித்து வருந்துகிறோம். சென்ற திங்களிதழில் பாரதியாரை (நாவலர் சோமசுந்தரப் பாரதி) யிழந்தமை குறித்து வருந்தினோம். ஒரு திங்களளவிற்குள் தமிழகத்தின் இருபெரும் பேராசிரியர்களை இழக்க நேரிட்டமையை எவ்வாறு ஆற்றுவது? அறிஞருலகம் இவ் வீரிழப்புக்களாலும் மிகவும் துன்பமடைந்துள்ளது.

கவிஞர் பாரதிதாசனார் நாவலரின் இழப்பைக் குறிப்பிட்ட போது "சாவிற்குப்பசி யென்றால் எவ்வளவோ பதர்கள் நாட்டிலுள்ளனவே! அவைகளையுண்டு பசியடங்கலாகாதா? விதை நெல்லையல்லவா விழுங்கிவிட்டது" என்று குறிப்பிட்டார். ஆம்! உண்மை! அண்மையில் மறைந்த நாவலரும் பண்டாரத்தாரவர்களும் தாங்கள் மேற்கொண்ட துறைக்கு வித்தாக விளங்கியவர்கள். அவர்கள் ஆய்ந்து கண்ட துறைகளில் பல அறிஞர்கள் தோன்றுவதற்கு முதலாகவிருந்தவர்கள். ஆகவே! "வித்தைச் சாவு விழுங்கிவிட்டது" என்று கவிஞர் கூறும் உரைநடைக் கவிதையினை நாமும் இவண்

கூறுகின்றோம். சங்க காலக் கவிஞரொருவர் பேராற்றல் வாய்ந்த மன்னனொருவனின் இழப்பை இங்ஙனமே "நனி பேதையே! நயனில் கூற்றம், விரகின்மையின் வித்தட்டுண்டனை" என்றார்.

பண்டாரத்தாரவர்கள் தென்னாட்டு வரலாற்றை விரித்தற்கு வேண்டிய எல்லாத் துறையையும் அறிந்த மூதறிஞராகத் திகழ்ந்தார். வரலாறு எழுதுவாருக்கு ஆங்கிலம், இலக்கியம், கல்வெட்டு ஆயதுறைகள் மிகவும் இன்றியமையாதவை. இத்துறைகளில் பண்டாரத்தாரவர்கட்கு நல்ல பயிற்சியும் புலமையுமிருந்தது. எல்லாவற்றிற்கும் மேலாகத் தென்னாட்டு வரலாற்றை நன்கு புதுக்கி உண்மைகாண வேண்டுமென்னும் ஆர்வம் பண்டாரத்தாரவர்களிடம் நிறையவிருந்தது. அவர்தம் வாழ்நாளின் குறிக்கோள் இதுவாகவிருக்க வேண்டுமென வரையறுத்துக் கொண்டார். பொருளீட்டுதற்கும் புகழ்பட வாழ்தற்கும் தாம் விரும்பிய கல்வித் துறை கிடைக்கப் பெறாமையால் கிடைத்த துறையை மேற்கொண்டு தேர்வளவில் ஆய்ந்து தேர்வெழுதிப் பின்னர் அத்துறையில் எவ்வகையான மனச்சார்புமின்றி வீணே காலந்தள்ளும் அறிஞர் இக்காலத்தில் பலருளர். எழுதும் சிலரும் தமிழருக்கொவ்வாத் தகைமைகளைத் தமிழருடையதெனக் காட்டுவாரும் தமிழகத்தின் தனிச்சிறப்புகளைக் கூறவும் அதனைப் பேணவும் மனமின்றி மற்றவருக்கு உரிமையாக்கிக் குழறுபடி செய்வோருமாக உள்ளனர். இந்நிலையில் நடுநின்று உண்மைகண்டு உலகுவப்பக் கூறும் பண்டாரத்தார் போன்ற வரலாற்றராய்ச்சியாளரை யிழந்தது தமிழர்கட்குப் பேரிழப்பாகும்.

நம் சங்கத் தலைவர் காலஞ்சென்ற தமிழவேளவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள். பண்டாரத்தாரவர்கள் வரைந்த "பாண்டியர் வரலாறு" என்னும் நூல் பகுதிபகுதியாகத் "தமிழ்ப் பொழில்" வாயிலாக வந்தமையைத் தமிழுலகு அறியும். சங்க ஆண்டு விழாக்களில் பங்கு கொண்டு விரிவுரையாற்றியுள்ளனர். பதிப்பாசிரியர் குழுவில் ஒருவராக இருந்து வரலாற்றுத் தொடர்பான நெறியில் பொழிலின் மேம்பாட்டிற்கு அவ்வப்போது அறிவுரை வழங்கியும் கட்டுரை வழங்கியும் தொண்டாற்றினார். கரந்தைத் தமிழ்ச் சங்கத்து இராசேந்திரன் செப்பேடுகளில் கண்ட செய்திகளைப் பொழிலில் விளக்கி வந்தார்கள். இங்ஙனம் தமிழவேள் காலந் தொடங்கி மறையுங்காறும் சங்கத்தொடும் சங்க வெளியீடாகிய தமிழ்ப்பொழிலுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்கள்.

தமிழ் கூறும் நல்லுலகிற்கு வேந்தர் முரசு முழங்குதானை மூவரென்றாலும் தமிழ்ப்புலவராயினாரெல்லாரும் பாண்டிய

மன்னர்களைப் பெரிதும் போற்றியுள்ளமையை அறிஞர் அறிவர். நம் பண்டாரத்தாரவர்களும் பாண்டிய மன்னர்களின் வரலாற்றையே முதற்கணெடுத்து ஆய்ந்து விளக்கினர். சோழர் வரலாற்றிலும் ஐயாஅவர்கட்கு அளவற்ற ஈடுபாடுண்டு. பிற்காலச் சோழப் பேரரசு தோன்றிய வரலாற்றை அவர்கள் விளக்கும் திறம் நம்முள்ளத்தைக் கவருமியல்பினதாகும். வரலாறு எழுதுவார் கையாளும் உரைநடை படிக்கச் சலிப்பாகவிருக்கும். ஐயா அவர்களின் நடை கதை சொல்லுவது போலத் தொடர்புபட்டு இழுமெனச் செல்லும் இயல்புடையது. இதற்குக் காரணம் ஐயா அவர்கள் தாம் எழுதுதற்கு மூலமாக அறிந்த செய்திகளைத் தம்முடையதாக்கிக் கொண்டு தாம் கூறுவது போலக் கூறும் வளஞ்சான்ற புலமைத்திறமாகும். பாண்டியர் சோழர்கால அரசியல் பற்றிய ஐயா அவர்களின் பொதுவான குறிப்புக்கள் மக்களாட்சி மலர்ந்துள்ள இக்காலத்தில் அரசியல் துறையில் நல்ல உதவி செய்ய வல்லதாகும். இத்தகு சிறப்புக்கள் அமைந்த பண்டாரத்தாரவர்களின் இழப்புக்கு வருந்துவதோடு அவர் வழி நின்று தமிழர்க்கும் தமிழுக்கும் தொண்டு செய்வதே நம்மனோர் கடனாமெனவும் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

(பொழிற்றொண்டன்: 1960. ஜன-பிப்: 35 : 10)

**கரந்தைத் தமிழ்ச்சங்கம்**, தஞ்சை - இரங்கற்கூட்டம்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து வரலாற்றாராய்ச்சித் துறையில் பல ஆண்டுகளாகப் பணிபுரிந்து வந்தவரும் நம் சங்க அன்பரும் சிறந்த கல்வெட்டாராய்ச்சியாளருமான தி.வை. சதாசிவ பண்டாரத்தாரவர்கள் 02-01-1960இல் இறைவன் திருவடி நீழலடைந்தமை குறித்துக் கரந்தைத் தமிழ்ச் சங்கப் பெருமன்றத்தில் சங்கத் தலைவர் ச. சுயம்பிரகாசமவர்கள் தலைமையில் 6-1-1960 இல் புதன்கிழமை மாலை இரங்கற் கூட்டம் நிகழ்ந்தது. சங்கத் தலைவரவர்கள் முன்னுரையாகக் காலஞ்சென்ற பண்டாரத்தாரவர்களின் இழப்பு நாட்டிற்கு ஈடு செய்ய முடியாததாகுமென மொழிந்தனர். மேலும் அண்மையில்தான் பாரதியாரை இழந்து வருந்தினோம், அதனின்றும் தெளிவதற்குள் பண்டாரத்தாரவர்களை இழந்தது மிக்க துன்பந்தரவல்லதாக வுள்ளதென்றனர். பண்டாரத்தாரவர்கள் தமிழவேள் காலந்தொட்டுச் சங்கத்தொடும் தமிழ்ப் பொழிலொடும் தொடர்பு கொண்டு விளங்கியமையை யாவருமறிவரென்று கூறினர்.

உமாமகேசுவர உயர்நிலைப் பள்ளியாசிரியர் திரு. சம்பந்தசாமி பிள்ளை சங்கத்தொடு அவர்க்கிருந்த பழமைத்

தொடர்பினை விளக்கினர். புலவர் கல்லூரி விரிவுரையாளர் திரு. கோவிந்தராசன் பேசும் போது, குடந்தையில் வாணாதுறை உயர்நிலைப்பள்ளியில் பண்டாரத்தாரவர்கள் ஆசிரியராகவிருந்த போது தனக்கு ஆசிரியராகத் திகழ்ந்தாரெனக் குறிப்பிட்டனர். ஆங்கிலத்திலுள்ள வரலாற்று நுணுக்கங்களை நன்கு தேர்ந்து தமிழில் வரலாற்றுத் துறையில் நன்கு பயன்படுத்தியவரென்றனர். வரலாறெழுதுவாருக்கு நடுநிலை வேண்டும். பண்டாரத்தாரவர்கள் மிகவும் நடுநிலையுடையவர். வரலாற்றில் மறுப்பிற்கும் வெறுப்பிற்கும் இடமில்லை. இதனைப் பண்டாரத்தார் வரலாற்று நூற்களில் காணலாம். இன்னும் சில ஆண்டுகளிருந்திருந்தால் பாண்டியர் சோழர் வரலாறுகளை வரையறைப்படுத்தியது போலப் பல்லவர் பற்றிய பல புதிய நுணுக்கங்களை நாமறியக்கூடும். தம்மிடம் பயின்ற மாணவர்கள் கல்வெட்டுத் துறையில் பயிற்சி பெறத் தம்மாலானவற்றைச் செய்துதவும் தண்ணளியாளரென்றனர். புலவர் கல்லூரி விரிவுரையாளர் ச. பாலசுந்தரம் தமிழ்ப் பொழிலொடு அவருக்கிருந்த தொடர்பினை விளக்கிப் பேசினார். உயர்நிலைப் பள்ளியாசிரியர் இராமமூர்த்தி பேசுகையில் தென்னக வரலாற்றை எழுதியவர் பலரென்றும் அவர்கள் எழுதிய குறிக்கோள் வேறு பண்டாரத்தாரெழுதிய குறிக்கோள் வேறென்றும் விளக்கினர். தென்னாட்டு வரலாறு வரலாற்றாசிரியர்களால் ஒதுக்கப்பட்டது, ஆனால் தென்னக வரலாறு இந்திய வரலாற்றுக்கு அடிப்படை யானதென முதற் குரல் கொடுத்து உருவாக்கிய பெருமை நம் பண்டாராத்தாரவர்களைச் சாருமென்றார்.

மேலும் பேசுகையில் வரலாற்றிற்கு இலக்கியங்கள் மிகவும் பயன்படவல்லனவென்றும், ஓர் இலக்கியம் தான் தோன்றிய காலச் சூழ்நிலையை நன்கு விளக்கவல்ல தென்றும், தென்னாட்டு வரலாற்றை எழுதிய பலருக்குத் தமிழிலக்கிய இலக்கணப் புலமை கிடையாதென்றும் அவ்வகையில் பண்டாரத்தாரவர்கள் தமிழ்ப் புலமையும் கல்வெட்டாய்வுப் புலமையும் ஆங்கிலப் புலமையும் பெற்ற பேரறிஞராகத் திகழ்ந்தாரெனவும் குறிப்பிட்டனர். வீரராகவ உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் ஏகாம்பரநாதரவர்கள் உரையாற்றும் போது பண்டாரத்தார், அமுதலிங்கம் பிள்ளை போன்றவர்கள் புலமையும் திறமையும் பயன்படச் செய்தவர் தமிழவேளவர்களாவரென்று மொழிந்தனர். எளிமையாகப் பழகும் இயல்பினர். இனிமையாகச் சுருக்கமும் தெளிவும் பொருந்தப் பேசும் பண்பினரென்று மொழிந்தனர். இடைவிடாது எதனையும் ஆய்ந்து கொண்டிருப்பதையே தமது பொழுதுபோக்காகவுடையவர்; செயற்கையில் ஆராய்ச்சியாளராகப் பலர் திகழுமிந்நாளில்

பண்டாரத்தார் போன்ற பிறவி ஆராய்ச்சியாளரை யிழந்தது வருந்துதற்குரியதாகுமென்றனர்.

## கையறு நிலை

ச. பாலசுந்தரம்
கரந்தைத் தமிழ்ச் சங்கம்

முழங்குகடல் சூழ்குமரி நாட்டினிலே
முகிழ்த்தறிவு மொய்ம்பு தாங்கி
வழங்குமொழி யாவினுமுன் வளம்படைத்து
வியங்குமெழில் மாட்சி ஏந்தித்
தழங்கு நறுஞ் செந்தமிழிற் சமைந்த வர
லாறிலெனும் சழக்கு நீங்க
ஒழுங்குபெற ஓதியுல கொப்பவர
லாறுரைத்த ஒருவ அந்தோ!

மறைந்ததனால் மறைந்ததனால் வண்டமிழின்
மாட்சியெலாம் மறந்து சீர்த்தி
குறைந்திருந்த தமிழரெலாம் குமுறிஎழத்
தமிழர்பழங் கோளெ டுத்து
நிறைந்த பெரும் புலமையறிவாய் வுரையால்
வரலாற்றின் நிலைமை யாவும்
அறைந்ததமிழ் அறிஞ சதாசிவப் பெரியோய்
மறைந்தனையோ அந்தோ! அந்தோ!

தேவேந்தி அறம்புரிந்த செப்பேடு
கல்வெட்டுச் செலவு நூல்கள்
பாவேந்தர் உரைத்ததொகைப் பாக்களோடு
பைந்தமிழ்நூற் பரப்பில் நீந்தி
மூவேந்தர் ஆட்சிபிறர் முயற்சியெலாம்
உரைத்ததமிழ் முதல்வ உன்னைச்
சாவேந்திச் சென்றதெனில் தமிழர்படுந்
துயரெடுத்துச் சாற்றப் போமோ.

தகுதியறிந் தெந்தமிழவேள் நினது
சால்புணர்த்தத் தமிழ்ப்பொ ழிற்கண்
பகுதிபெறப் பாண்டியர்தம் பண்டைவர
லாறெழுதப் பணித்து நட்பின்
மிகுதியினால் மேம்படுத்த மேலோய் சொல்
லெளிமையறம் மேவி ஆன்றோர்

தொகுதியிலே விளங்கியநற் தோன்றலுனை
இழந்ததுயர் சொல்லப் போமோ!

முருகியசெந் தமிழ்அண்ணா மலையரசர்
முயன்றமைக்க முறையால் நாளும்
பெருகியபல் கலைக்கழகத் தாராய்ச்சித்
துறையிலரும் பேரா சானாய்ப்
பரவுநறும் புகழ்வளர்க்கும் பண்டாரத்தார்
எனவே பாரோர் போற்ற
அரியபல தொண்டாற்றி அமைந்தபுகழ்
அண்ணால்நீ மறைந்தாய் அந்தோ!

என இரங்கற் செய்திகளில் பண்டாரத்தாரின் உண்மைப் புகழை வெளிப்படுத்தியுள்ளனர் அறிஞர் பெருமக்கள்.

அவர் இன்னும் சிலகாலம் இருந்திருந்தால் பல்லவர்தம் பெருவரலாற்றையும் எழுதி முடித்திருப்பார் என்ற ஆதங்கம் அறிஞரிடையே நிலவியது.

தற்காலத்தில் அத்தகைய புலமைசான்ற பெரியோர் இருக்கின்றனர் எனில் அது அவர்தந்த அறிவுச் செல்வத்தின் விளைவு எனல் மிகையன்று.

## தொகுப்புரை

திருப்புறம்பயம் வைத்தியலிங்கம் சதாசிவ பண்டாரத்தார் அறிஞரிடம் பாடம் கேட்டுத் தமிழ்மொழி, கல்வெட்டு, வரலாறு, ஆங்கிலம், சமஸ்கிருதம் ஆகிய பெருந்துறை அறிவு பெற்று வரலாறு எழுதிய தமிழ்ப்பேராசிரியராய் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை அலங்கரித்தவர்.

அவர்தம் இடையறா ஆய்வு முயற்சி பலருக்கு வழிகாட்டியாக அமைந்தது.

இவர்தம் வாழ்வில் சந்தித்த பலருடனும் சிறந்த நட்பு பூண்டு விளங்கினார். இத்தகைய அறிஞர் பலரையும் இக்காலத்தில் நினைவுகூர்வது அன்னாரது புகழைத் தற்காலத்தவர் அறிதற்கும் அன்னாரது முயற்சியில் விளைந்த நூல்கள், கட்டுரைகள் பலவற்றைப் படித்து மேலாய்விற்குத் துணை ஏற்பதற்கும் உறுதுணையாய் இருக்கும்.

****

# இலக்கிய வரலாற்று நூல்கள்

இரா. கமலா

பண்டாரத்தார் வரலாற்றுக் கல்வெட்டுகளை ஆராய்ந்து பல உண்மைகளைக் கண்டறிந்து உணர்த்தியவர். களப்பிரர் ஆட்சியின் தொடக்கத்தில் கடைச்சங்கம் அழிவுற்றது என்று தம் ஆராய்ச்சியின் மூலம் திட்டவட்டமாகக் கூறுகிறார். கி.பி. ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் சோழர்களின் தலைநகரம் பழையாறை என்றும் தாம் ஆராய்ந்து கண்ட உண்மைகளால் உறுதிபட விளக்குகிறார். சுந்தரர் இராசசிம்ம பல்லவன் காலத்தவர் என்ற உண்மையையும் உரைக்கிறார்.

இவர்தம் புலமையை மெச்சி மதுரைத் திருவள்ளுவர் கழகம் இவருக்கு **ஆராய்ச்சிப் பேரறிஞர்** என்ற பட்டத்தை வழங்கியுள்ளது. இவர் எழுதிய இலக்கிய வரலாற்று நூல்களை இக்கட்டுரையின் கண் காண்போம்.

இவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய காலத்தே அந்நாளில் ஆராய்ச்சித் துறைத்தலைவர் அ. சிதம்பரநாதன் செட்டியார் தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதும் பணியை ஐவருக்குத் தந்த போது அவர்களுள் ஒருவரான இவர் கி.பி. 250லிருந்து கி.பி. 600 வரை உள்ள காலத்தில் தோன்றிய நூல்களை ஆராய்ந்து எழுதியுள்ளார்.

தமிழ் இலக்கிய வரலாறு எழுத வேண்டும் என்ற ஆர்வத்தினாலும், கல்லூரி மாணவர்களுக்குத் தமிழ் இலக்கிய வரலாறு ஒரு பாடமாக இருந்தமையாலும் தமிழ் இலக்கிய வரலாற்றை (13, 14, 15 நூற்றாண்டுகள்) மீண்டும் எழுதியதைத் தம் நூற் பதிப்பின் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். கி.பி. 250இலிருந்து கி.பி. 600 வரை உள்ள காலப்பகுதியாகிய இருண்ட காலத்தில் தோன்றிய நூல்களை முதலில் பார்ப்போம்.

இருண்ட காலப் பகுதியில் தோன்றிய நூல்களை அறிந்து கொள்வதற்குத் தக்க ஆதாரங்கள் கிடைக்கவில்ல. இருந்தபோதும் கடைச்சங்கத்திற்குப் பின் வடமொழியில் தோன்றிய ஜைன நூல்கள், பாலி மொழியில் எழுதப்பெற்ற பௌத்த நூல்கள், பிராகிருத

மொழியிலும், வடமொழியிலும் எழுதப்பெற்ற செப்பேடுகள், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்களின் குறிப்புகள், இவற்றைக் கொண்டு, நூல்கள் எழுந்த காலம், நூலாசிரியர்கள் பற்றிய செய்திகள் இவற்றை அகச்சான்றுகள், புறச்சான்றுகள் கொண்டு இலக்கிய வரலாற்றைப் படைத்துள்ளார். கடைச்சங்கத்தின் இறுதிக்காலமும், அது அழிந்ததற்கான காரணங்களும், அன்னியர் ஆட்சியில் ஏற்பட்ட மாறுதல்களும், அப்போது எழுந்த நூல்கள் பற்றியும் விரிவாகத் தம் நூலில் கூறியுள்ளார்.

## இருண்ட காலத்தில் எழுந்த நூல்கள்

இக்காலத்தில் நீதி நூல்களே மிகுதியாக எழுதப் பட்டிருக்கின்றன. வேற்று நாட்டவர் தமிழகத்திற்கு வந்தனர். கடார, நாட்டவர், அருணதேயத்தார், சோனகர், யவனர், வடவாரியர் போன்றவர்களுடன் தமிழர் பழகிய பழக்கத்தால், தம் நாகரிகம், பழக்க வழக்கங்களில் மாறுபட ஆரம்பித்தனர். தமிழர் தம் பழக்கவழக்கங்கள் மாறிய காரணத்தால்தான் திருவள்ளுவர், நல்லாசிரியன்மார்கள், தமிழர்களை நல்வழிப்படுத்த நற்றமிழில் நீதிநூல்களைப் பாடினர். திருக்குறளின் சிறந்த கருத்துகளால் ஈர்க்கப் பெற்ற அரசர்களும், மக்களும் அந்நூலைப் பயில ஆரம்பித்தனர். எனவே திருக்குறளைப் போன்று நீதி நூல்களைச் சமணர்களும் இயற்றத் தொடங்கினர். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் புத்த சமயம் வீழ்ச்சியடைந்தது. களப்பிரர்களும் தம்முடைய சமயமான புத்தசமயத்தைத் துறந்து சமண சமயத்தைப் பின்பற்றத் தொடங்கினர். மதுரையில் பூஜ்யபாதருடைய மாணவர் வச்சிரநந்தி என்ற சமண முனிவர் கி.பி. 470 ஆம் ஆண்டில் திராவிட சங்கம் ஒன்றை நிறுவினார். இந்தச் சங்கத்துள் இருந்த சமண முனிவர்கள், சமண சமயத்தவர்கள், பழமொழி, சிறுபஞ்சமூலம், ஏலாதி முதலான நூல்களை இயற்றினர். உரையாசிரியர்களால் எடுத்தாளப் பெற்ற மேற்கோள் நூல்களும், புறத்திரட்டில் காணப்படும் நூல்களில் சிலவும் இருண்டகாலப் பகுதியில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பர். அப்பரும் ஞானசம்பந்தரும் தம் பாக்களில் குறித்திருக்கும் எலிவிருத்தம், கிளி விருத்தம், நரி விருத்தம் போன்ற நூல்களும் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முன் இயற்றப்பெற்றிருத்தல் வேண்டும்.

பண்டாரத்தார் தம் இலக்கிய வரலாற்று நூலில் நூல் வரலாறு, நூலாசிரியர் வரலாறு, நூல் இயற்றப்பெற்ற காலம், நூலால் நுவலப்படும் செய்திகள் இவற்றை விளக்கிச் செல்கின்றார். சில இடங்களில், சிறப்புப் பாயிரப் பாடல்கள், நூலுள் காணக்கிடக்கும்

அகச் சான்றுகள், மற்றும் பிற சான்றுகளாலும் நூலெழுந்த காலத்தையும் விளக்கிக் காட்டுகிறார்.

## கி.பி. 200இலிருந்து 600 வரை தோன்றிய நூல்கள்

நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், ஏலாதி கார்நாற்பது, திணைமொழி ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை, முதுமொழிக்காஞ்சி ஆகிய பதினெண்கீழ்க்கணக்கு நூல்களையும் காரைக்கால் அம்மையார் இயற்றிய அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை, திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள், திருமூலருடைய திருமந்திரம், முத்தொள்ளாயிரம், கிளிவிருத்தம், நரி விருத்தம், எலி விருத்தம் என்ற நூல்களையும் பற்றி இங்குக் காண்போம்.

### நான்மணிக்கடிகை

பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் யாரால் தொகுக்கப் பட்டவை என்பது தெரியவில்லை. குணசாகரர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் ஆகியோர் மட்டுமே இந்நூல்களைக் குறிப்பிட்டுள்ளனர்.

நான்மணிக்கடிகை என்ற இந்நூலைப் பாடியவர் நாகனார் ஆவார். இவர் விளம்பி என்ற ஊரில் தோன்றியவர். இவர் தம் புலமைத் திறத்தினாலும், அனுபவ அறிவினாலும் உணர்ந்த உண்மைகளையும் நீதிகளையும் மக்கள் புரிந்து கொள்ளும் வண்ணம் பாடியவர். இந்நூல் தொல்காப்பியம் கூறும் அம்மை என்ற வனப்பின்பாற் பட்டது. "மதி மன்னு மாயவன் வாண்முக மொக்கும்" என்ற கடவுள் வாழ்த்துப் பாடல் இவர் வைணவ சமயத்தைச் சார்ந்தவர் எனப் புலப்படுத்துகிறது. ஊன் உண்ணாமை, கொல்லாமை என்ற கொள்கைகள் இவர்தம் உள்ளக் கிடக்கை என்பதை

*"ஊனுண்டல் – செய்யாமை செல் சாருயிர்க்கு"*

*(நா.கடிகை. 38)*

*"இனிதுண்பான் என்பான் உயிர் கொல்லா துண்பான்"*

*(நா.கடிகை. 59)*

*"விலைப் பாலிற் கொண்டூன் மிசைதலும் குற்றம்*
*கொலைப் பாலுங் குற்றமேயாம்"* *(நா. கடிகை. 26)*

என்ற பாடல் வரிகளிலிருந்து அறியலாம். மேலும் எஞ்ஞான்றும் நெஞ்சில் நிலைநிறுத்தக் கூடிய அறங்களாகிய அல்லவை செய்யாமை,

வெகுளிவிடல், கல்லாமையின் இழிவு, அறம், புகழ், தாய்மையின் மேன்மை இவற்றை ஆசிரியர் நாகனார் அறிவுறுத்திச் செல்கின்றார்.

## இன்னா நாற்பது

இந்நூலைப் பாடியவர் கபிலர். இவர் பாரியின் நண்பர் அல்லர். நக்கீரனாரைப் போலச் சமயப் பொது நோக்குடையவர் என்பதை இவர்தம் பாடல்கள் மூலம் அறியலாம். பதினொன்றாம் திருமுறையில் காணப்படும் மூத்தநாயனார் இரட்டைமணிமாலை, சிவபெருமான் இரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி ஆகிய நூல்களைப் பாடிய கபிலதேவ நாயனார் இவரிலிருந்து வேறானவர். இவற்றைப் பாடிய கபிலதேவ நாயனார் கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்தவர். உள்ளத்தில் கொள்ள வேண்டிய உண்மைகளாக

*"உண்ணாது வைக்கும் பெரும் பொருள் இன்னா"* (பா. 17)

*"இன்னா – ஈன்றாளை ஓம்பா விடல்"* (பா. 18)

*"ஊனைத் தின்று ஊனைப் பெருக்குதல் முன் இன்னா"* (பா. 23)

என்பவற்றை எடுத்துக்காட்டுகிறார்.

## இனியவை நாற்பது

இந்நூலின் ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதன் சேந்தனார். இவர் கபிலரைப் போலச் சமயக்கொள்கையில் பொதுநோக்குடையவர். கபிலருக்குப் பின் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின் வாழ்ந்தவர்.

*"மானமழிந்தபின் வாழாமை முன்னினிதே"* (பாடல் 14)

*"அறம்புரிந் தல்லவை நீக்கலினிதே"* (பாடல் 22)

*"வருவாய் அறிந்து வழங்கல் இனிதே"* (பாடல் 23)

என்ற வரிகள் நெஞ்சில் நிலைத்து நிற்க வேண்டியவையாம். கடவுள் வாழ்த்துப் பாடலில் திருமாலொடு நான்முகனையும் இவர் வாழ்த்திப் பாடியுள்ளமை அறியத்தக்கது.

## திரிகடுகம்

இதன் ஆசிரியர் நல்லாதனார். ஆதன் என்ற பெயர் தொல்காப்பியர் காலத்தில் வழக்கில் இருந்துள்ளது. கடைச்சங்க காலத்தில் இப்பெயர் மிகுதியாக வழங்கியிருக்கிறது. எனவே இவர் தென் பாண்டி நாட்டில் உள்ள திருநெல்வேலியைச் சார்ந்த திருத்து என்ற ஊரினராதல் வேண்டும். இதனை,

"செல்வத் திருத்துளார் செம்மல் செருவடுதோள்
நல்லாத னென்னும் பெயரானே – பல்லார்
பரிவொடு நோயவியப் பன்னி யாராய்ந்து
திரிகடுகஞ் செய்த மகன்"

என்ற பழம்பாடல் குறிக்கின்றது. இப்பாடல் வையாபுரிப்பிள்ளை யவர்களால் புதிதாகக் கண்டு வெளியிடப்பெற்ற பாடலாகும்.

மறத்தற்கரிய அறிவுரைகளாக

"தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்" (பா. 12)

"வருவாயுள் கால் வழங்கி வாழ்தல்" (பா. 21)

"கண்ணுக்கணிகலம் கண்ணோட்டம்" (பா. 52)

"நெஞ்சம் அடங்குதல் வீடாகும்" (பா. 43)

என்ற பாடல் வரிகள் அமைந்துள்ளன.

## ஆசாரக்கோவை

இந்நூல் அம்மை என்ற வனப்பின் பாற்பட்டது. வடமொழியில் உள்ள ஸ்ம்ருதி போன்றதொரு நூலாகும். வடமொழி நூல்களை ஆதாரமாகக் கொண்டும், அறிஞர்கள் தம் அனுபவத்தால் உணர்த்தியுள்ள உண்மைகளையும் ஆசாரங்களையும் இவ்வாசிரியர் பெருவாயின் முள்ளியார் விளக்குகிறார். இவருடைய முன்னோர்கள் கயத்தூரில் இருந்தவர்கள். இவர் வாழ்ந்த ஊர் பெருவாயில் என்பது புதுக்கோட்டை நாட்டில் குளத்தூர் தாலுக்காவில் இருந்திருத்தல் வேண்டும் என்பதைப் புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. ஆசாரங்கட்கு வித்துகளாக நன்றியறிதல், பொறையுடைமை, இன்சொல்கூறல், எவ்வுயிர்க்கும் இன்னாதவற்றைச் செய்யாமை, கல்வி, ஒப்புரவாற்றல், அறிவுடைமை, நல்லினத்தாரோடு நட்டல் ஆகியவற்றை ஆசிரியர் கூறியிருப்பது அறியத்தக்கது.

## பழமொழி

இது திருக்குறள், நாலடியார் என்பவற்றோடு எண்ணத்தக்க நூல் ஆகும். அந்நூல்களில் காணப்படாத அரிய உண்மைகளை இந்நூல் உரைக்கின்றது.

இந்நூலினை ஆராய்ந்தால் தமிழ்மொழியின் பழைமையும் தமிழ் நாகரிகத்தின் அருமை பெருமைகளும் புலப்படும். மனுநீதிகண்ட சோழன், பல்யானை செல்கெழுகுட்டுவன் (பா. 31),

தூங்கெயில் எறிந்த தொடித்தோட்செம்பியன், கரிகாலன், பொற்கைப் பாண்டியன், பாரி, பேகன் என்ற அரசர்களைப் பற்றிய செய்திகள் வரலாற்றா ராய்ச்சியாளர்க்குப் பெரிதும் பயன்படக்கூடிய செய்திகளாகும்.

இந்நூலாசிரியர் முன்றுறையரையனார். இவர் முன்துறை என்ற இடத்தில் வாழ்ந்த அரையர், குறுநில மன்னராதல் வேண்டும். அல்லது அரையர்பட்டம் பெற்ற ஓர் அரசியல் அதிகாரியாக இருந்திருத்தல் வேண்டும். இவர் தீர்த்தச் சிறப்பு வாய்ந்த பேராற்றங்கரையின் முன்துறையில் அமைந்த ஊரினராதல் வேண்டும். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வச்சிரநந்தியால் நிறுவப் பெற்ற தமிழ்ச்சங்கத்தை ஆதரித்தவர்களுள் இவரும் ஒருவராயிருத்தல் வேண்டும். இந்நூலுக்குச் செல்வகேசவராயமுதலியாரும், நாராயண ஐயங்காரும் (முதல் 200 பாடல்களுக்கு) உரை எழுதியுள்ளனர். இந்நூலில் காணப்படும் பழமொழிகள்

"குலவிச்சை – கல்லாமற் பாகம் படும்" (பா. 21)

"கற்றலிற் கேட்டலே நன்று" (பா. 61)

"தமக்கு மருத்துவர் தாம்" (பா. 56)

"கெட்டார்க்கு நட்டோர் இல்" (பா. 59)

"நுணலுந்தன் வாயால் கெடும்" (பா. 184)

என்பன போன்றவை அறிந்து கோடற்குரியனவாகும்.

## சிறுபஞ்சமூலம்

இந்நூல் அம்மை போன்ற வனப்பின்பாற்பட்டது. இந்நூலாசிரியர் காரியாசான் ஆவார். இவர் சமண சமயத்தவர் இவருடைய ஆசிரியர் மாக்காயனார் என்பதை இவர்தம் பாயிரப் பாடலினால் அறியலாம். கணிமேதாவியாரும், இவரும் கி.பி. 470 இல் மதுரையில் தமிழ்ச் சங்கம் நிறுவிய வச்சிரநந்தியின் மாணாக்கர் ஆவர். இவர் வடமொழியும் ஆயுர்வேதப் பயிற்சியும் உடையவர் என்பதை ஆராய்ச்சியாளர் உரைப்பர். ஒரு கவிஞனுக்குரிய இலக்கணத்தைப் பாடல் ஒன்றில் (பா. 33) குறிப்பிடுகின்றார். மெய்யுணர்வு பெற்றால்தான் வீடுபேறு பெறமுடியும் என்பதை,

"தானத்தாற் போகம் தவத்தால் சுவர்க்கமாம்
ஞானத்தால் வீடாகும் நாட்டு (பா. 36)

என்று உறுதியாய்க் கூறுகிறார். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலேயே தோல் கன்றைக் காட்டிப் பால் கறக்கும் வழக்கம் இருந்ததையும்

(பா. 84) 'குழவி பலி கொடுப்பான் - எண்பதின் மேலும் வாழ்வான்' என்ற தொடரில் பலி என்ற சொல் குழந்தைக்குக் கொடுக்கும் சோறு என்ற பொருளிலும் காட்டியுள்ளார்.

## ஏலாதி

இந்த நூல் அம்மை என்ற வனப்புடையது. இதன் ஆசிரியர் கணிமேதாவியார் என்ற சைனர் ஆவார். இவர் கொல்லாமை, புலாலுண்ணாமை போன்றவற்றைப் பல இடங்களில் வலியுறுத்திக் கூறியுள்ளார். எளியோர்க்கு உணவும், உடையும் வழங்குவோர் அடையும் பயனைப் பன்முறை எடுத்துக் கூறியுள்ளார். இவர் சிறுபஞ்சமூலத்தின் கருத்துகளையும், சொற்பொருளையும் அப்படியே தம் நூலில் கையாண்டிருப்பதால் இவர் சிறு பஞ்சமூலத்தை நன்கு பயின்றிருத்தல் வேண்டும். வடமொழிப் பெயர்களான தத்தன், சகோடன், புத்திரி, புத்ரன், உபகிருதன் போன்ற பெயர்களைக் காட்டியிருக்கிறார். தமிழ் அறத்திற்கும் பழைய நாகரிகத்திற்கும் முரண்பட்ட செய்திகள் (ஏலாதி - பா. 30) சிலவற்றையும் இந்நூலுள் எடுத்துக் கூறியுள்ளார்.

## ஐந்திணை ஐம்பது

இந்நூல் சிறந்த நடையும் பொருள் வளமும் மிக்கது என்பதை 'ஐந்திணை யைம்பது மார்வத்தின் ஓதாதார் செந்தமிழ் சேராதவர்' என்ற பாயிரப்பாடலால் அறியலாம். இந்நூலின் ஆசிரியர் மாறன் பொறையனார். இவர் தந்தையார் மாறனாவார். மாறன் என்பது பாண்டியனையும் பொறையன் என்பது சேரனையும் குறிப்பதால் இவர் தென்பாண்டி நாட்டவராதல் வேண்டும். இவர் அரசியலில் வரவு செலவுத் தொடர்புடைய ஓர் அதிகாரியா யிருந்திருத்தல் வேண்டும் என்பதைப் பாயிரப்பாடல் கொண்டு சிலர் கூறுவர்.

> **'சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதென் றெண்ணிப்**
> **பிணைமா னினிதுண்ண வேண்டிக் கலைமாத்தன்**
> **கள்ளத்தின் ஊச்சுஞ் சுரமென்பர் காதலர்**
> **உள்ளம் படர்ந்த நெறி'** **(பா. 38)**

என்ற பாடல் ஆசிரியரின் புலமைத் திறத்திற்கு எடுத்துக்காட்டாகும்.

## திணைமொழி ஐம்பது

இதன் ஆசிரியர் கண்ணன் சேந்தனார். இவருடைய தந்தையார் கடைச்சங்க காலச்சோழன் போரவைக் கோப்பெரு

நற்கிள்ளியைப் பாடிய சாத்தந்தையார் என்பர் சிலர். இதனை வலியுறுத்தும் சான்றுகள் இல்லை.

நூலில் உள்ள தெளிவுடைமைக் கருத்துகளுக்குச் சான்றாக

'வானுயர் வெற்ப இரவின் வரவேண்டா
யானை யுடைய சுரம்' (பா. 1)

"அரிபரந்த வுண்கண்ணாள் ஆற்றாமை நும்மின்
தெரிவார் யார் தேருமிடத்து" (பா. 12)

என்ற பாடல்கள் அமைந்திருக்கின்றன.

## ஐந்திணை எழுபது

இதன் ஆசிரியர் மூவாதியார். இந்நூலின் கடவுள் வாழ்த்துப் பாடல் யானை முகக் கடவுளைக் குறிக்கிறது. இந்தப் பாடல் ஆசிரியர் மூவாதியாரால் இயற்றப்பெற்றதன்று. விநாயகர் வழிபாடு ஏழாம் நூற்றாண்டில்தான் தொடங்கியது. இவர் ஐந்திணை ஐம்பதை நன்கு கற்றிருத்தல்வேண்டும். ஐந்திணை ஐம்பதில் உள்ள சில தொடர்களைத் தம் பாடலில் அமைத்துள்ளார்.

'கள்ளர் வழங்குஞ் சுரமென்பர் காதலர்
உள்ளம் படர்ந்த நெறி' (பா. 36)

என்ற வரிகள் ஐந்திணை ஐம்பது நூலில் உள்ள வரிகளை ஒத்திருப்பதை அறியலாம்.

## திணைமாலை நூற்றைம்பது

இதன் ஆசிரியர் ஏலாதியைப் பாடிய கணிமேதாவியாவார். சங்கப்பாக்களில் புலமை மிக்கவர். 'கோடாப் புகழ் மாறன் கூடலனையான்' என்று இவர் கூறியிருப்பதால் இவர் பாண்டியனால் ஆதரிக்கப் பெற்றவர் என அறியலாம். இவர் தம் பாடல்களில் அளகம், வகுளம் முதலான வடசொற்கள் பயின்று வருவதால் இவர் கடைச்சங்கத்திற்குப் பிற்பட்டவர். காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு. அகப்பாடல்களின் சிறப்பை அறியாதவர்க்கு உணர்த்தும் வண்ணம் இந்நூலை இவர் இயற்றியிருத்தல் வேண்டும்.

இதனைக் கீழ்வரும் பாயிரப் பாடலால் அறியலாம்.

'முனிந்தார் முனிவொழியச் செய்யுட்கண் முத்துக்
கனிந்தார் களவியல் கொள்கைக் – கணிந்தார்
இணைமாலை யீடிலா வின்றமிழால் யாத்த
திணைமாலை கைவரத் தேர்ந்து" என்பதாம்.

### கைந்நிலை

இந்நூலின் ஆசிரியர் மாறோக்கத்து முள்ளி நாட்டு நல்லூர்க் காவிதியார் மகனார் புல்லங்காடனார். மாறோகம் என்பது கொற்கை சூழ்ந்த நாடு. இவர் தம் நூலுள் ஆசை, இரசம், கேசம், இடபம் உத்தரம் என்ற வடமொழிச் சொற்கள் காணப்படுவதால் இவர் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் ஆவார். இவருடைய தந்தை காவிதியார் என்ற பட்டம் பெற்றிருந்தமையால், பாண்டியர்க்கு வழிவழியாய் அமைச்சுரிமை பூண்ட தொல்குடியினர் என்பது தெரிகிறது.

இன்னிலை என்ற நூலைப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகக் கொள்ள முடியாது. பழைய உரையாசிரியர்கள் இந்நூலின் செய்யுட்களைக் காட்டவில்லை. 'நாலடி நானாற்பது' என்பது எட்டுத்தொகையைக் குறிக்கும், பழம் பாடலில் 'மெய்ந்நிலைய காஞ்சியொடு', 'இன்னிலை சொல் காஞ்சியொடு', என்ற பாட வேறுபாடுகள் காணப்படுவதால் இந்த நூலைப் பதினெண் கீழ்க்கணக்குள் ஒன்று என்று சொல்வதற்கில்லை.

### கார்நாற்பது

திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணை எழுபது ஆகிய நூல்களுக்கு முற்பட்ட நூல் இது. கார்த்திகை விளக்கு பற்றிக் கூறுகின்றது இந்நூல்.

### காரைக்கால் அம்மையார் நூல்கள்

காரைக்கால் அம்மையார் அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டைமணிமாலை, திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் ஆகியவற்றைப் பாடியுள்ளார். சங்கரன், வேதியன், உமை, அரன், ஈசன், கமலம் முதலான வடசொற்களைக் கையாண்டிருப்பதால் இவர் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில், வடமொழி மிகப் பரவிய காலத்தில் வாழ்ந்தவராதல் தேற்றம். அற்புதத்திருவந்தாதியில் உள்ள,

> 'அறிவானும் தானே அறிவிப்பான் தானே
> அறிவாய் அறிகின்றான் தானே – அறிகின்ற
> மெய்ப்பொருளுந் தானே விரிசுடர் பார் ஆகாயம்
> அப்பொருளுந் தானே அவன்'

என்ற பாடல் சிவபெருமானின் தன்மைகளை உணர்த்துகின்றது. இவர் திருஞானசம்பந்தர்க்கு முற்பட்டவர் என்பதைப் பெரிய புராணத்தின் வாயிலாகவும் அறியலாம். சேக்கிழார் திருஞானசம்பந்தர்

புராணத்தைக் கூறுகின்ற பொழுது இவர் காரைக்கால் அம்மையார் வாழ்ந்த திருவாலங்காட்டில் அடி வைப்பதற்கு அஞ்சினார் என்று கூறுவர் (புராணம் - 1008).

## திருமந்திரம் – திருமூலர்

இவர் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். தேவாரம், திருவாசகம் பாடிய சமய குரவர்களுக்கு முற்பட்டவர். ஒரு சமயம் திருஞானசம்பந்தர் திருவாவடுதுறைக் கோயிலுக்குச் சென்றபோது அங்குப் பலி பீடத்திற்கருகில் தமிழ் மணம் கமழ்ந்தபொழுது, அங்கு அகழ்ந்து பார்த்த பொழுது திருமந்திரம் கிடைத்ததாகச் செவி வழிச் செய்தி ஒன்று உண்டு. திருமூலர் ஒரு சிவயோகி ஆதலால் அவர் நீண்ட காலம் வாழ்ந்திருந்தார் என்பதை,

'ஒப்பில் ஏழுகோடி யுகமிருந்தேனே' (திருமந்திரம். 74)

'இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி' (திருமந்திரம். 80)

என்ற வரிகள் உணர்த்துகின்றன. பிற்காலச் சொல்வழக்குகள் ஆகிய ஒட்டியாணம், கடுக்கன், மல்லாக்கத் தள்ளல், வட்டி, பொதுக்கென, சிதம்பரம் போன்ற சொற்கள் இந்நூலின் இடைச்செருகலாகும். 'ஐந்து கரத்தனை' என்ற விநாயகர் பாடலும் பிற்காலத்தில் யாரோ ஒருவரால் எழுதி இடையில் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

## முத்தொள்ளாயிரம்

இந்நூலின் ஆசிரியர் யார் எனத் தெரியவில்லை. புறத்திரட்டிலிருந்து நமக்குக் கிடைத்த பாடல்கள் 109. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டினராகிய முன்றுறையரையனார்க்குப் பின் வாழ்ந்தவர். உபாயம், ஆகம், நேமி, சமம் என்ற வடசொற்களைக் கையாண்டிருப்பதால் வடமொழி பெருமையுடன் திகழ்ந்த கி.பி ஆறாம் நூற்றாண்டினராதல் வேண்டும்.

## கிளிவிருத்தம், எலி விருத்தம், நரி விருத்தம்

இந்நூல்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் காலத்தில் சமணர்களால் ஓதப்பெற்ற நூல்கள் என்பதைத் தேவாரப் பாக்களால் அறிகிறோம். வீரசோழியமும் நரிவிருத்தம் என்ற நூலைக் குறிப்பிடுகின்றது. திருத்தக்கதேவர் இயற்றிய நூலினின்றும் இந்நூல் மாறுபட்டது. திருத்தக்கதேவரின் நூலினைப் போலவே யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, பொய், கொலை, களவு, கள், காமம் என்ற ஐந்து பெருஞ் தீச்செயல்கள் புரிந்தவர்கள்

அழிந்ததையும், இவற்றை ஒழித்தவர்கள் உயர்நிலை உற்றதையும் இந்நூல் கூறுகின்றது.

## கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் தோன்றிய நூல்கள்

இந்த நூற்றாண்டில் ஆங்காங்கிருந்த குறுநில மன்னர்கள் தம் விருப்பப்படி ஆட்சி புரிந்தனர். பாண்டியர்கள் வலிமை பெற்றுத் தம் அரசை மதுரையில் நிறுவிக் குறுநில மன்னர்களைத் தம்மடிப்படுத்தினர். சோழர்களுக்குத் துணையாகச் சென்ற ஹொய்சாளர்களை வென்றனர். இக்காலத்தில் முதல் மாறவர்மன் - சுந்தரபாண்டியன், முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன், முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் ஆகியோர் தமிழகத்தை ஆட்சி புரிந்தனர். அது காலை அடிக்கடிப் போர்கள் நிகழ்ந்தமையால் நாட்டில் அமைதி நிலவ வாய்ப்பில்லை. சிறந்த புலவர்கள் தோன்றி இலக்கியங்களைப் படைக்கவில்லை. சிவஞானபோதம், சிவஞான சித்தியார் போன்ற நூல்கள் இந்த நூற்றாண்டில் இயற்றப் பெற்றிருத்தல் வேண்டும்.

## திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம்

மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கநாதப் பெருமானின் அருட்செயல்களைக் கூறும் இந்நூல் உத்தரமகா புராணம் என்ற வடநூலின் ஒரு பகுதியாகிய சாரசமுச்சயம் என்பதன் மொழி பெயர்ப்பாகும் என்பதை ஆசிரியரே உணர்த்துகிறார் (பாடல் 35). பரஞ்சோதியாரின் திருவிளையாடல் புராணம் தோன்றிய பிறகு இந்நூலைப் படிப்பார் குறைந்தனர் என்பது அறிஞர் கருத்தாம். இந்நூலுக்கும் பரஞ்சோதியாரின் திருவிளையாடல் புராணத்திற்கும் வேறுபாடுகள் பல உள்ளன. இந்நூல் கல்லாடத்துடன் ஒத்துள்ளது. மாணிக்கவாசகர்தம் பதிகங்கள் இன்னின்ன சமயங்களில் பாடப்பெற்றன என்பதை எடுத்துக் காட்டும் இந்நூலின் ஆசிரியர் செல்லி நகர் பெரும்பற்றப்புலியூர் நம்பி ஆவார். முதலில் செல்லி நகரில் இருந்து பின் இவர் வேம்பத்தூர் சென்றிருக்க வேண்டும். கி.பி. 1228இல் வாழ்ந்த ஆனந்த தாண்டவ நம்பியே பெரும்பற்றப்புலியூர் நம்பியாயிருத்தல் வேண்டும்.

## நளவெண்பா

புகழேந்தியார் மகாபாரதத்தை முதனூலாகக் கொண்டு நளனின் சரிதத்தை இனிய வெண்பாக்களில் பாடியுள்ளார். இவர் வைணவர் என்பதை இவர் தம் பாக்களால் அறியலாம். இவர் முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் காலமாகிய கி.பி. 13-ஆம்

நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் செஞ்சிக் கலம்பகம் என்ற நூலைப் பாடினார் என்பதைத் தொண்டை மண்டலச் சதகப் பாடலால் அறியலாம். இவர் பெயரால் வழங்கும் அல்லியரசாணி மாலை, புலந்திரன் களவு மாலை, இரத்தினச்சுருக்கம் எனப்படும் உவமான சங்கிரகம் என்ற நூல்களெல்லாம் இவரால் இயற்றப் பெற்றவை அல்ல.

### சிவஞானபோதம்

இந்நூலை இயற்றியவர் மெய்கண்டார். இது வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட நூல் என்று சொல்வார்தம் கூற்றுகளைப் பண்டாரத்தார் மறுக்கிறார். மெய்கண்டார்தம் காலம் கிபி. 1232 எனக் கல்வெட்டுச் சான்றுகளால் விளக்குகிறார்.

### சிவஞான சித்தியார்

இந்நூலாசிரியர் அருணந்தி சிவாச்சாரியார் ஆவார். இதன் பரபக்கத்திற்கு மூவரும் சுபக்கத்திற்கு அறுவரும் உரையெழுதியுள்ளனர்.

### இருபா இருபஃது

இதன் ஆசிரியர் அருணந்தி சிவாச்சாரியார் ஆவார். இவர் மெய்கண்டதேவரின் முதல் மாணாக்கர். இவர் தம் ஆசிரியரை வழிபட்டு வினவும் முகத்தால் சைவ சித்தாந்த உண்மைகளை விளக்கிக் கூறுகிறார்.

### உண்மை விளக்கம்

இது சைவ சித்தாந்த சாத்திர நூல்களுள் ஒன்று. ஆசிரியர் - திருவதிகை மனவாசகங் கடந்தார். முப்பத்தாறு தத்துவங்களின் உயிர், பதி, பாசம், திருக்கூத்தின் பொருள், ஐந்தெழுத்துண்மை, நடராசப் பெருமானின் திருவடிவு ஆகியவற்றை ஆசிரியர் விளக்கிச் செல்கின்றார்.

### பாரதம்

13ஆம் நூற்றாண்டில் இயற்றப் பெற்றுத் தற்போது கிடைக்காத நூல்களுள் ஒன்று பாரதம். இதனை இயற்றியவர் அறநிலை விசாகன் என்பது கல்வெட்டினால் அறியக் கூடிய செய்தியாகும்.

இந்த நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த உரையாசிரியர்கள் சேனாவரையர், பரிமேலழகர் ஆகியோர் சேனாவரையர் மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1268 - 1311) ஆட்சிக் காலத்தில் வாழ்ந்தவராதல் வேண்டும். பரிமேலழகர் உரையே திருக்குறள்

உரைகளிற் சிறந்ததாகத் திகழ்கிறது. இவர் காஞ்சியில் வாழ்ந்த வைணவர்.

### தஞ்சைவாணன் கோவை

இந்நூலைப் பாடியவர் பொய்யா மொழியார். இவர் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். இறையனார் அகப்பொருள் உரைக்கு இவர் தம் நூல் இலக்கியமாக அமைந்துள்ளது.

## பதினான்காம் நூற்றாண்டில் எழுந்த நூல்கள்

தமிழ்மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழர்களின் ஆட்சி இந்த நூற்றாண்டில் அழிந்து விட்டது. பிற சமயத்தவரும், வேற்று மொழி பேசும் வேந்தர்களும் ஆகிய முகமதியரும், விசயநகர அரசர்களும் தமிழகத்தை ஆட்சி புரிவாராயினர். இக்காலத்தில் தமிழ் மக்கள் சமயக் கொள்கைகளிலும், பொருளுடைமையிலும் பலவாறு அல்லற்பட்டனர். இச்சூழ்நிலையில் சிறந்த நூல்கள் மிகுதியாகத் தோன்றுவதற்கு இடமில்லை. இருந்த போதும் தோன்றிய சில நூல்களைக் காண்போம்.

### சிவப்பிரகாசம்

இந்நூலாசிரியர் கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார். இது சிவஞானபோதம், சிவஞானசித்தியார் ஆகிய நூல்களைப் பின்பற்றி எழுதப்பெற்ற ஒரு சித்தாந்த நூலாகும். இந்நூலாசிரியர் கி.பி. 1313ஆம் ஆண்டில் சங்கற்ப நிராகரணம் என்ற நூலை எழுதியுள்ளமையால் இவர் காலம் 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

### திருவருட்பயன்

இந்த நூலை இயற்றியவரும் கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியாரே ஆவார். சைவ சித்தாந்த நூல்களில் ஒன்றாகிய இது நூறு வெண்பாக்களைக் கொண்டது. இது பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருள்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியும்நெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை, அஞ்செழுத்தருள் நிலை, அணைந்தோர் தன்மை ஆகிய பத்துப் பகுதிகளைக் கொண்டது.

### வினா வெண்பா

இந்நூலை இயற்றியவரும் கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியாரே ஆவார். இந்நூல் தம் ஞானாசிரியர் மறை

ஞானசம்பந்தரைச் சித்தாந்தக் கருத்துகளுக்கு விளக்கம் கேட்கும் வகையில் வினவுவது போல் அமைக்கப்பெற்றுள்ளது.

### போற்றிப் பஃறொடை வெண்பா

இது தம் ஞானாசிரியரின் அருள், அருள்மொழிகள், அருட்செயல்கள் ஆகியவற்றை வியந்து போற்றும் வகையில் கொற்றவன் குடி உமாபதிசிவாச்சாரியாரால் எழுதப் பெற்ற நூலாகும்.

### கொடிக்கவி

இது தில்லையில் கொடியேற்று முகத்தான் சில சித்தாந்த உண்மைகளைக் கூறும் நூல். ஆசிரியர் கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்.

### நெஞ்சு விடுதூது

உமாபதி சிவாச்சாரியாரால் தம் ஞானாசிரியரிடத்துத் தம் நெஞ்சைத் தூதாக விடுக்கும் முறையில் இயற்றப் பெற்ற நூலாகும். 258 அடிகளில் கலிவெண்பாவினால் இயன்ற நூலாகும். இன்னவரிடத்துச் செல்லக் கூடாது எனத் தம் நெஞ்சிற்குக் கூறி உலகாயதர், மாயாவாதிகள், பௌத்தர், சமணர், பிரபாகர் ஆகிய புறச்சமயவாதிகளின் கொள்கைகளை ஆசிரியர் சுருங்கச் சொல்லியிருக்கிறார்.

### உண்மைநெறி விளக்கம்

இந் நூலின் ஆசிரியர் உமாபதி சிவாச்சாரியார் என்பர் பலர். இதனை மறுத்து இதன் ஆசிரியர் சீர்காழித் தத்துவனார் என்று சிலர் கூறுகின்றனர்.

### சங்கற்பநிராகரணம்

தில்லையில் சிவாகமங்களைக் கற்றுணர்ந்த எண்மர் ஆனித்திருவிழாவில் கி.பி. 1235ஆம் ஆண்டில் கூடியிருந்தபோது மாயாவாதி ஒருவர் தம் மதக் கொள்கைகளை விரித்துரைக்க, அவற்றை எண்மருள் ஒருவர் தம் மதத்தை நிலைநாட்ட, மற்றவர் மறுத்தனர். அதுபோழ்து உமாபதிசிவாச்சாரியார் குற்றங்களை உணர்த்தி எல்லோரும் தெளியும் வகையில் உண்மையை நிலைநாட்ட இந்த நூலை இயற்றினார் என்பர்.

மேலும் கோயிற்புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறைகண்ட புராணம், சேக்கிழார் புராணம் ஆகிய இந்நூல்களையும் இவரே இயற்றினார் என்பர். இவற்றுள்

கோயிற்புராணம் மட்டுமே உமாபதிசிவாச்சாரியாரால் இயற்றப் பெற்றது என்பது பண்டாரத்தார்தம் கருத்தாகும்.

### தில்லைக் கலம்பகம்

இந்த நூல் இரட்டைப் புலவர்களால் பாடப்பெற்றது. இந்நூல் பக்திச்சுவையுடன் பல உண்மைகளைக் கூறும் நூலாகும். நில்லாத எழுபிறப்பும் (தில்லைக் கலம்பகம் பா. 29) என்ற பாடல் மூலம் மகுடாகமபூசையே தில்லையில் நிகழ்ந்து வருவது என்பது அறியத்தக்கது. சமயக்குரவர் நால்வரின் பாக்களின் பெருமையை,

> "மெய்யருந்தவர் கோவை எழுதிச் சிவந்தன................
> தெள்ளு செந்தமிழ் மூவர் கவியைச் சுமந்தன
> தில்லை யம்பல வாணர் கனகப் புயங்களே'

என்ற பாடல் வரிகளால் உணரலாம்.

### வில்லிபாரதம்

இதன் ஆசிரியர் வில்லிபுத்தூராழ்வார். ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராட பருவம், உத்தியோக பருவம், துரோணபருவம், கன்ன பருவம், சல்லிய பருவம், சௌப்திக பருவம், எனப் பத்துப் பருவங்களை 4339 விருத்தப் பாக்களில் பாடியுள்ளார். இந்நூலினைப் பாடும்படி பணித்த வரபதி ஆட்கொண்டானுடைய பேரும் புகழும் நிலவும் வண்ணம் நன்றி பாராட்டும் வண்ணம் அவனை நான்கு இடங்களில் இவர் புகழ்ந்து பாடியுள்ளார். மிகுதியான வடமொழிச் சொற்களைக் கையாண்டு எழுதப்பெற்ற முதல் தமிழ் நூல் இதுவே எனப் பண்டாரத்தார் மனம் நொந்து கூறுகிறார்.

### தேசிகப் பிரபந்தம்

இத்தொகுப்பு பத்தொன்பது பிரபந்தங்களைக் கொண்டது. இதில் 24 நூல்கள் உண்டு என வைணவ அறிஞர் கூறுகின்றனர் மற்ற ஐந்து நூல்களும் தற்போது கிடைக்கவில்லை. இவர் காலத்தில் திருவரங்கப் பெருங்கோயில் முகமதியர் படையெழுச்சியால் பல இன்னல்களுக்குள்ளாயிற்று என்ற குறிப்பை நூல் ஆசிரியர் வேதாந்த தேசிகர் காட்டுகிறார்.

### கப்பற்கோவை

அச்சில் வெளிவராத நூல்களுள் இதுவும் ஒன்று. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இதனைக் கருமாணிக்கன் கோவை என்றும்

கூறுவர்.

‘சுளையார் பொழில்துவரைத் தொண்டைமான் கப்பல் சூழ் துறைவா
இளையாள் வருந்துவ தென்னையென் றாளன்னை யாமிருந்து
விளையாடு சிற்றிலை வெண்டலைத் தெண்டிரை வேலை எற்றும்
வளையா லழித்ததென் றாளென்செய் வாள்பின்னை வாணுதலே’

என்ற பாடல் சொல்நயமும் பொருள்நயமும் அமையப்பெற்று ஆசிரியர் தம் புலமைத் திறத்தை விளக்குகின்றது.

## கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டு தோன்றிய நூல்கள்

இக்காலத்தில் தமிழகம் முழுதும் அந்நியர் ஆளுகைக்கீழ் இருந்தது. கன்னடமே ஆட்சி மொழியாக இருந்தது. சிறந்த நூல்கள் தோன்றுவதற்கு வாய்ப்பு இல்லை. எனினும் ஆண்டவனிடம் அன்பு கொண்ட அடியாரால் பாடப்பெற்ற நூல்கள் சிலவற்றை ஈண்டுக் காண்போம்.

### திருப்புகழ்

வாக்கிற்கருணகிரி, கருணைக்கருணகிரி எனப் பாராட்டப் பெற்றவர் அருணகிரிநாதர். ‘ஐய அருணகிரி அப்பா உனைப் போல் மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்’ என்பர் தாயுமானவர். கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த இவர் பிரபுட தேவமாராயன் காலத்தவர். இவர் பதினாயிரம் பாடல்களைப் பாடியதாகக் கூறுவர். 1307 பாக்களே கிடைத்துள்ளன. இவர்தம் பாக்களில் வடசொற்கள் மிகுதியாகக் காணப்படும்.

### திருவகுப்பு

இந்த நூலை அருணகிரியார் இயற்றியுள்ளார். சபாஷ், சலாம், ராவுத்தன் என்ற இந்துஸ்தானிச் சொற்களை இந்நூலில் இவர் கையாண்டுள்ளார்.

### திருவானைக்கா உலா

இந்நூல் சிவபெருமான் மீது காளமேகப் புலவரால் பாடப்பெற்ற உலாப் பிரபந்தம். இவர் திருமலைராயன் காலத்தில், கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் வாழ்ந்தவர்.

## கந்தர் அந்தாதி

இவை முருகப் பெருமான் மீது பாடப்பெற்ற கட்டளைக் கலித்துறையில் அமைந்த பாடல்களாகும். ஆசிரியர் அருணகிரிநாதர். இவர் கந்தர் அந்தாதி, கந்தர் அனுபூதி என்ற நூல்களையும் பாடியவர்.

> 'கந்தர் அனுபூதி பெற்றுக் கந்தரனுபூதி சொன்ன
> எந்தையருள் நாடி யிருக்கு நாள் எந்நாளோ'

எனத் தாயுமானவர் இவரைப் பாராட்டுகிறார். அருணகிரியார் கிளி உருவத்துடன் இருந்து இந்நூலைப் பாடினார் என்ற கருத்தையும் பண்டாரத்தார் மறுக்கிறார்.

## ஓங்குகோயிற் புராணம்

இந்நூல் திருவம்பலமுடையார் மறைஞானசம்பந்தரால் இயற்றப்பெற்ற நூலாகும். இக்காலத்தில் கிடைக்காத நூல்களில் இதுவும் ஒன்று. இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள திருப்புத்தூரில் உள்ள திருத்தணியாண்டநாயனார் கோயிலில் காணப்படும் கல்வெட்டால் இப்புராணத்தின் பெயரை அறியலாம்.

இனி, பண்டாரத்தாரின் நுண்மாண்நுழைபுலத்தையும் ஆராய்ச்சித் திறத்தையும் நோக்குதல் இன்றியமையாத ஒன்றாகும். கடைச்சங்கத்தின் காலத்தைத் திட்டவட்டமாக வரையறுத்துக் கூறுகிறார் இவர். கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் பல்லவர்கள் காஞ்சியைக் கைப்பற்றுவதற்கு முன் கடைச்சங்கம் முடிந்திருக்க வேண்டும். கடைச்சங்கப் புலவர்தம் பாடல்களில் பல்லவர்களைப் பற்றிய செய்திகள் காணப்படவில்லை. கடைச்சங்கத்தின் இறுதிக் காலத்தில் இருந்தவன் இலங்கை முதல் கயவாகு மன்னன். அவன் சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோயில் எடுத்த ஞான்று வந்திருந்ததைச் சிலப்பதிகாரம் (வரந்தருகாதை 160-164 வரிகள்) கூறுகிறது. இக்காலத்தில் எழுதப்பெற்றதே சிலப்பதிகாரம். முதல் கயவாகு ஆட்சிக்காலம் கி.பி. 171 முதல் கி.பி. 193 வரை ஆகும் என்பதை மகாவம்சம் என்ற நூல் கூறுகிறது. பல்லவர்கள் தமிழகத்தின் மீது படையெடுத்தபோது கடைச்சங்கம் இல்லை. எனவே கடைச்சங்கம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் முதற்பகுதியில் முடிவெய்தியிருக்க வேண்டும் என்பார் இவர். கடைச்சங்கம் கி.பி. ஐந்து, கி.பி. எட்டாம் நூற்றாண்டு வரை இருந்தது என்பார்தம் கூற்றுகளைச் சான்றுகளுடன் மறுத்துரைக்கிறார் இவர். மேலும் திருக்குறள் கடைச்சங்க காலத்தின் இறுதிக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் எழுதப் பெற்றிருக்க வேண்டும் என்றும் கூறுகிறார். திருக்குறள்

அரங்கேற்றத்தினாலும், வற்கடம் எய்தியமையாலும் கடைச்சங்கம் அழிந்து போயிற்று என்பார்தம் கூற்றுகளையும் இவர் மறுக்கிறார். திருக்குறள் கருத்துகளைக் கடைச்சங்க நூல்களில் காண்கிறோம்.

கபிலர் நற்றிணையில்

'பெரியோர் நாடி நட்பினல்லது நட்டு
நாடார் தமொட்டியோர் திறத்தே' (பா. 32)

எனக் கூறும் கருத்து,

'நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு'

எனத் திருக்குறளில் காணப்படுகிறது.

'பெயக்கண்டு நஞ்சுண்டைமைவர்'

என்ற திருக்குறள் கருத்தை (101- குறள்)

'முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சுமுண்பர் நனி நாகரிகர்'

என நற்றிணை உரைக்கின்றது.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு' (செய்ந்நன்றியறிதல் 10)

என்ற கருத்து ஆலத்தூர் கிழார் தம் புறப்பாடலில்

'செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம் பாடிற்றே ஆயிழை கணவ'

என வருவதைச் சுட்டிக் காட்டுகிறார்.

காக்கைப்பாடினியாரும் 'ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே' என்று கூறியிருப்பது 'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்' என்ற குறட் கருத்தை ஒத்திருக்கிறது. எனவே திருக்குறள் கடைச் சங்க நூலாதல் வேண்டும் என்று துணிந்து கூறுகிறார்.

களவழி நாற்பது பாடிய பொய்கையார் கடைச்சங்கத்திற்குப் பின் வாழ்ந்தவர் என்பார்தம் கூற்றுகளை அகநானூற்றுப் பாடல் கொண்டும் அன்பிற் செப்பேடு கொண்டும் மறுத்து இவர் கடைச்சங்கத்தில் வாழ்ந்தவர் என்பதை உறுதிப்படுத்துகிறார். கோச்செங்கணான் கடைச்சங்க கால மன்னன். அவன் புதல்வன் நல்லடி என்பதை அகநானூறும் அன்பிற் செப்பேடுகளும்

உரைக்கின்றன. பொய்கையார் கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த புலவர் என்பதைப் புறநானூறு 48, 49, நற்றிணை 18ஆம் பாடல்கள் கொண்டும் ஆசிரியர் விளக்குகிறார். கணைக்கால் இரும்பொறையின் புறப்பாடல் (74) இவ்வுண்மையை உறுதிப்படுத்துவதையும் விளக்கியுரைக்கிறார்.

முதுமொழிக் காஞ்சியைப் பாடிய கூடலூர் கிழார் சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை இறந்த பொழுது வருந்திப் பாடிய பாடல் புறநானூற்றில் காணப்படுகிறது. ஐங்குறுநூற்றை அவ்வேந்தனின் விருப்பப்படி தொகுத்தவரும் இவரே யாதலின் இவர் காலம் கடைச்சங்கமே என்கிறார்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் நாலடியார் ஒன்றாகத் திகழ்ந்தாலும் அது கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தோன்றியது என்பதைக் கல்வெட்டுச் சான்றுகளுடன் நிறுவுகிறார். முத்தரையர் என்ற பட்டத்துடன் ஆட்சி புரிந்த குறுநில மன்னர்களின் சிறப்பினை நாலடியார் 200, 296ஆம் பாடல்கள் குறிப்பிடுகின்றன. முத்தரையர் பற்றிய குறிப்புகளைக் கி.பி. எட்டாம் நூற்றாண்டில்தான் அறிய முடிகிறது.

இவர் கல்வெட்டு விற்பன்னர் ஆதலின் கல்வெட்டுகளை ஆராய்ந்து பல உண்மைகளை இலக்கிய வரலாற்றுக்குதவும் வண்ணம் கூறியிருப்பது பாராட்டத்தக்கது. திருமூலர் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் ஆறாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தவர் என்பதைச் சான்றுகளுடன் நிறுவுகிறார். தில்லையம்பலத்தையும், பொன்னம்பலத்யையும் புகழ்ந்து பாடியுள்ளார் திருமூலர். தில்லையம்பதியில் கூத்தப் பெருமானுக்கு அம்பலம் அமைத்துப் பொன் வேய்ந்த பல்லவ வேந்தன் சிம்ம வர்மன் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். இவனுடைய காலமே திருமூலர் வாழ்ந்த காலமாகும். சைவ சித்தாந்தம் என்ற வடசொல்லைத் தமிழில் ஆண்டவர் திருமூலரே! சமயக் குரவர்கள் பிறகு இச்சொல்லைக் கையாள்கின்றனர். சுந்தரரால் பாராட்டப் பெற்ற நரசிங்கவர்மன் தன்னைச் சைவசித்தாந்த நெறியினன் எனக் கூறுவதைக் கைலாச நாதர் கோயிலில் காணப்படும் கல்வெட்டினைக் கொண்டு உணர்த்துகிறார். திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம் பாடிய பெரும்பற்றப்புலியூர் நம்பி ஆனந்த தாண்டவ நம்பியே என்பதைக் கல்வெட்டுச் செய்திகளால் விளக்குகிறார்.

கி.பி. 1210இல் குலோத்துங்க சோழனுடைய திருவாலங்காட்டில் உள்ள கல்வெட்டு, பாரதத்தைத் தமிழில் பாடியவர் அறநிலை

விசாகன் என்றும், அவர் கூத்தபெருமானுக்கு நந்தா விளக்கு வைத்து நிவந்தம் விட்டவர் என்றும் கூறுகின்றது. இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள திருப்பத்தூர்த் தாலுக்காவில் உள்ள கல்வெட்டு காங்கேயன் பிள்ளைக்கவி என்ற நூலைக் குறிக்கின்றது.

பரிமேலழகர், பரிமேலழகிய நாதன் என்று குறிக்கப் பெற்றதையும் கல்வெட்டுச் செய்தியால் காட்டுகிறார்.

தில்லைக் கலம்பகம் வரலாற்றாராய்ச்சிக்குத் துணை செய்வதையும்,

"பூவணிக வேளாளர் புவியரசர் கொடுங்கோன்மை
பொறுத்தாற்போல
ஆவணியும் புரட்டாசி மாதமு நான் தனியிருந்திங்
காற்றிலேனே"

என்ற பாடல் மூலம் அக்காலத்தில் நம்நாடு முகமதியப் படையெடுப்புக்குள்ளாகிப் பலவாறு அல்லல் பட்டது என்பதை விளக்குகிறார். ஏகாம்பரச் சம்புவராயன் காலமே (கி.பி. 1321 - கி.பி. 1339) இரட்டைப்புலவர்கள் வாழ்ந்த காலம் என்பதைக் குட்டியம் கல்வெட்டினாலும்,

'மேதைப் புலவரெண் ணேகாம்பரசம்பு மெச்சநெடுங்
காதைப்புலவ ரிரட்டையர் பாடுங் கலம்பகமும்
ஓதற்கரிய நல்லேகம்ப வாணருலாவு மந்த
மாதைப் பனுவலும் பாராட்டிடுந் தொண்டைமண்டலமே
(பா. 89)

என்ற தொண்டை மண்டலச் சதகப் பாடல் கொண்டும் உணர்த்துகிறார். மேலும் திருவண்ணாமலைச் சம்பந்தாண்டான் காலத்தில் இவர்கள் வாழ்ந்ததையும் சுட்டிக் காட்டுகிறார்.

ஆதாரமற்ற எந்தக் கருத்துகளையும் பண்டாரத்தார் ஏற்றுக் கொள்வதில்லை. இரட்டைப் புலவர்கள் குருடராகவும், முடவராகவும் இருந்த செய்தியை மறுக்கிறார். வில்லிபுத்தூரார் அருணகிரிநாதரிடம் தோல்வியுற்று அவர் அறிவுறுத்தலின் பேரில் பாரதம் பாடிய செவிவழிச்செய்தியை இவர் ஏற்றுக் கொள்ளவில்லை. வில்லிபுத்தூராரின் காலம் வரபதி ஆட்கொண்டானின் காலமாகிய கி.பி. 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்றும், அருணகிரியார்க்கு முன் இவர் வாழ்ந்தவர் என்றும் தக்க ஆதாரங்களுடன் உரைக்கிறார்.

அருணகிரிநாதர் பட்டினத்தாரின் புதல்வர் என்றும், சிவாலயத்திற்குத் தொண்டு செய்யும் உருத்திரக்கணிகையின் புதல்வர் என்றும் சொல்வார்தம் கூற்றுகளை இவர் மறுக்கிறார்.

வில்லிபுத்தூராரும், சம்பந்தாண்டானும் அருணகிரிநாதருடன் வாதமிட்டுத் தோற்ற செய்தியையும் இவர் ஏற்றுக்கொள்ளவில்லை. இவர்கள் அருணகிரியார்க்கு முற்பட்டவர்கள் என்பதைக் கல்வெட்டுகளால் தெளிவுபடுத்துகிறார்.

அருணகிரியார் கிளியுடலில் புகுந்து கொண்டு பாரிசாத மலரைக் கொண்டு வருவதற்குத் தேவருலகு சென்ற கட்டுக்கதைகளை இவர் நம்புவதில்லை. அருணகிரியார் குறித்திருக்கும் சுகசொரூபம், சுகபதம் எனக் கூறியிருக்கும் தொடர்கள் கிளியைக் குறிக்காததையும், அவை பேரின்ப நிலையை உணர்த்துவதையும் சுட்டிக் காட்டுகிறார்.

மருங்கூர்க் கல்வெட்டு குறிப்பிடும் கரு மாணிக்கனே கப்பற்கோவையின் தலைவன் என்பதையும் கல்வெட்டு மூலம் குறிப்பிடுகிறார்.

பல நூல்களைப் பயின்ற அறிவுத் திறத்தை இவர் தம் எழுத்தில் காணலாம். ஒரு நூலில் உள்ள பாடலைக் குறிப்பிட்டு விளக்கும் போது அதற்கு ஒத்த கருத்தைக் காட்டும் வேறு நூற்பாடல்களையும் ஒப்பிட்டுக் காட்டுதல் இவருக்குக் கைவந்த கலை எனலாம். வீடுபேற்றை விளக்கும்

**"பொய்தீர் புலவர் பொருள் புரிந்தாராய்ந்த**
**மைதீர் உயர் கதியின் மாண்புரைப்பின் – மைதீர்**
**சுடரின்று சொல்லின்று மாறின்று சோர்வின்று**
**இடரின் றினிதுயிலு மின்று"** **(ஏலாதி 66)**

என்ற பாடலுக்குப் புறப்பொருள் வெண்பா மாலையில் உள்ள

**"பொய்யில் புலவர் புரிந்துறையும் மேலுலகம்**
**ஐயமொன் றின்றி யறிந்துரைப்பின் – வெய்ய**
**பகலின் றிரவின்று பற்றின்று துற்றின்**
**றிகளன் றிளிவரவு மின்று".**

என்ற பாடல் ஒத்திருத்தலைக் காட்டுகிறார். திணைமொழி ஐம்பதில் உள்ள

**"யாழுங் குழலு முழவு மியைந்தென**
**வீழு மருவி விறன்மலை நன்னாட**
**மழைமா ணோக்கியு மாற்றா ளிரவுவரின்**
**ஊரறி கெளவை தரும்"** **(பா. 7)**

என்ற பாடலின் ஈற்றடி முத்தொள்ளாயிரத்தில் 'குன்று விளக்கே போல்' என்ற பாடலின் ஈற்றடியாகிய 'நாடறி கௌவை தரும்' என்ற வரியுடன் ஒத்திருத்தலை உணர்ந்து கொள்ளலாம்.

**கள்ளத்தின் ஊச்சும் சுரமென்பர் காதலர்**
**உள்ளம் படர்ந்த நெறி** (ஐந்திணை ஐம்பது பா. 38)

என்ற வரிகளோடு ஐந்திணை எழுபதில் காணப்படும் 36ஆம் பாடலாகிய

**"கள்ளர் வழங்குஞ் சுரமென்பர் காதலர்**
**உள்ளம் படர்ந்த நெறி"**

என்ற வரிகளும் ஒத்திருத்தல் காண்க. நாம் செய்த தீவினைகள் இம்மையிலேயே வரும் என்பதை, திணைமாலை நூற்றைம்பது

**"இம்மையாற் செய்ததை யிம்மையே யாம்போலும்**
**உம்மையே யாமென்பார் ஓரார் காண்"** (பா. 123)

எனக் கூறுவதைச் சுந்தரர் பாடிய தேவாரப்பாடல் வரிகளுடன்

"செற்றொருவரைச் செய்த தீமைகள் இம்மையே
வரும் திண்ணமே" (சுந்தரர் தேவாரம், திருப்புறம்பியம் பாடல் 4)

ஒப்பிட்டுக் காட்டுகிறார். பிறமனை நோக்காத ஆடவரின் சிறப்புக்குத் திணைமாலை நூற்றைம்பது பாடலான

**"நண்ணிநீர் சென்மின் நமரவர் ஆபவேல்**
**எண்ணிய எண்ணம் எளிதரோ – எண்ணிய**
**வெஞ்சுடரன் னானை யான்கண்டேன் கண்டாளாம்**
**தன் சுடரன் னாளைத் தான்**

என்பதைத் திருக்கோவையார் கூறும்

*"மீண்டா ரெனவுந் தேன்கண்டு நும்மையும் மேதகவே*
*பூண்டா ரிருவர்முன் போயின ரேபுலியூ ரெனைநின்*
*றாண்டா னருவரை யாளியன் னானைக் கண்டேனயலே*
*தூண்டா விளக்கனை யாயென்னை யோவன்னை*
*சொல்லியதே (பா. 244)*

என்ற பாடலுடன் ஒப்பிடுகிறார்.

தமிழுக்குத் தொண்டு செய்யும் அன்பர்களை வாய்ப்பு நேரும் போதெல்லாம் பாராட்டிச் செல்லும் திறத்தை இவரிடம் காணலாம்.

பழமொழிக்கு உரையெழுதிய திருமணம் செல்வகேசவராய முதலியார், நாராயண ஐயங்கார், திருமந்திரத்திற்கு உரையெழுதிய சேற்றூர் சுப்பிரமணியக் கவிராயர், ஏட்டில் இருந்த பாடல்களைப் பதிப்பித்த வையாபுரிப்பிள்ளை முதலானவர்களைப் பாராட்டி யிருப்பது குறிப்பிடத்தக்கது. வில்லிபாரதம், அருணகிரியார் திருப்புகழ், பதினெண்கீழ்க்கணக்கில் உள்ள சில நூல்கள் இவற்றில் வடமொழிச் சொற்களைக் கண்டு குமுறும் இவர்தம் தமிழ் உள்ளத்தைப் பாராட்ட வேண்டும்.

இதுகாறும் கூறியவாற்றால் சதாசிவபண்டாரத்தாரின் வரலாற்றாராய்ச்சித் திறன், கல்வெட்டாராய்ச்சித் திறன், இலக்கிய வரலாற்றில் உள்ள ஈடுபாடு, எதையும் துணிந்து சொல்லும் உள்ளம், உண்மையை உள்ளவாறே கூறும் திறம் இவற்றையெல்லாம் கண்டோம். மற்றவர் சொல்லாத கருத்துகளை எல்லாம் இவர்தம் இலக்கிய வரலாற்று நூலில் காணலாம். அவற்றைப் படித்து இன்புறுவோமாக.

****

# தமிழக வரலாற்றுக் களத்தில் பண்டாரத்தாரின் பங்களிப்பு

வேல். கார்த்திகேயன்

அமிழ்தினும் இனிய நந்தமிழ்மொழியில் காலந்தோறும் இலக்கியங்கள் உருவாகி வருகின்றன. அவை அக்காலச் சமுதாய, சமயச் சூழ்நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவற்றைக் கொண்டு வரலாற்றறிஞர்கள் இலக்கிய வரலாற்றினை எழுதுவர். இலக்கிய வரலாறு சிறந்த முறையில் அமைந்திட, முதலில் நூலாசிரியர் காலத்தில் நிலவிய சமயச்சார்பு பற்றி நடுவு நிலைமை திறம்பாமல் உண்மையை உணரும் உயர்ந்த குறிக்கோளுடன் ஆராய்ந்து வரையறை செய்வது இன்றியமையாததாகும். அவ்வகையில் தமிழ் இலக்கிய வரலாற்றறிஞர்களில் மிகச் சிறப்பிடம் பெற்ற அறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் ஆவர்.

சதாசிவ பண்டாரத்தார் சோழ நாட்டில் பிறந்தவர். வரலாற்று ஆசிரியர். வரலாற்றுக் களங்களுக்குத் தாமே நேரில் சென்று ஆய்ந்தவர். கூர்த்த மதி, இலக்கியப் புலமை, இலக்கியச் சூழல் முதலிய இத்தன்மைகளுடன் கல்வெட்டு ஆராய்ச்சியைத் தன் வாழ்நாள் பணியாகக் கொண்டவர். அவை இவர் படைத்த நூல்களில் குறிப்பிடத்தக்கன:

1) தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 250 முதல் கி.பி. 600 வரை)

2) கி.பி. 13, 14, 15 நூற்றாண்டு

3) சோழர், பாண்டியர் வரலாறு

4) இலக்கியமும் கல்வெட்டராய்ச்சியும்

முதலியன.

இவர் எழுதிய நூல்களில் நூலாசிரியரின் காலங்கள் அகச்சான்றுகளையும், கல்வெட்டுகளையும் உறுதுணையாகக் கொண்டு ஆராய்ந்து நிறுவப்பட்டிருக்கின்றன. நூல் நுதலிய பொருளும், நூலாசிரியரின் வரலாறும், காலமும், நூலில் காணப்படும் சிறப்பியல்புகளையும் கூறுவது இவரின் தனிச்சிறப்பாகும். அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

## கடைச் சங்ககாலத்தின் இறுதிக் காலம் யாது?

கடைச்சங்கம், மதுரையில் நடைபெற்றது என்பதும், அப்பொழுது தோன்றிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களின் காலப்பகுதியாக இரண்டாம் நூற்றாண்டினைக் கூறுவர். இருப்பினும் கடைச்சங்க காலத்தின் இறுதிக் காலம் எப்பொழுது என்பதைத் தெளிவாக அறிந்து கொள்ள இயலவில்லை.

1. கடைச்சங்கத்தின் இறுதிக் காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு என்று ஓர் அறிஞரும், கி.பி. எட்டாம் நூற்றாண்டு என்று ஓர் அறிஞரும் கூறுவது சிந்தனைக்குரியது. கடைச் சங்கப் புலவருள் ஒருவராகிய மாமூலனார் பாடிய அகநானூற்றுப் பாடல்கள் (265, 285) மூலம் கடைச்சங்கத்தின் இறுதிக்காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு ஆகும் என்னும் கருத்தினை மு. இராகவையங்கார் அவர்கள் 'சேரன் செங்குட்டுவன்' என்னும் நூலில் தெரிவித்துள்ளதாகத் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் தம் நூலில் குறிப்பிடுகின்றார்.[1]

2. கடைச்சங்க காலத்தில் இயற்றப்பட்ட சிலப்பதிகாரத்தில் இலங்கை வேந்தன் கயவாகு என்பானைப் பற்றிய குறிப்பு இடம் பெறுகின்றது.

இலங்கையில் கயவாகு என்ற பெயருடன் இரண்டு அரசர் ஆட்சி புரிந்துள்ளனர் என்பது அந்நாட்டு வரலாற்றாராய்ச்சி யாளர்கள் கண்ட முடிபாகும். அவ்விருவருள் முதல் கயவாகு கி.பி. 171 முதல் கி.பி. 193 வரையில் அரசாண்டவன். இரண்டாம் கயவாகு என்பான் கி.பி. 1137 முதல் கி.பி. 1153 வரையில் ஆட்சி புரிந்தவன்.

இரண்டாம் கயவாகு மன்னன், இரண்டாம் குலோத்துங்க சோழன் அரசாண்ட காலத்தில் கி.பி. 12 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இருந்தவன்.

கண்ணகி தேவியின் கோயிலுக்குக் கடவுள் மங்கலம் நிகழ்த்திய நாட்களில் கடல்சூழ் இலங்கை யரசனாகிய கயவாகு மன்னனும் அங்கு வந்திருந்தான். இவன்தான் கி.பி. 171 முதல் கி.பி. 193 வரையில் அரசாண்டவன்.

இதனை அடிப்படையாகக் கொண்டு தம் கருத்தை நிலை நாட்டுகின்றார் பண்டாரத்தார்.

இவ்விரண்டு செய்திகளையும் ஆராய்கின்றபோது இளங்கோவடிகளால் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டவன் முதல் கயவாகு மன்னனாகவே இருத்தல் வேண்டும் என்பதை அறிய

முடிகிறது. ஆகவே, கடைச் சங்ககாலத்தின் இறுதிக் காலம் இரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியாகலாம் என அறிய முடிகிறது.

கடைச் சங்க காலம் எட்டாம் நூற்றாண்டு என்பார் எல்.டி. சாமிக்கண்ணுப்பிள்ளை. இதற்குச் சிலப்பதிகாரத்தில் இரண்டு இடங்களில் காணப்படும் காலக்குறிப்புகளையும், அவற்றில் ஒன்றிற்கு அடியார்க்கு நல்லார் எழுதியுள்ள உரைக்குறிப்பையும் துணையாகக் கொண்டுள்ளார். அவை,

**"வான்கண் விழியா வைகறை யாமத்து**
**மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்**
**காரிரு ணின்ற கடைநாட் கங்குல்"**

**சிலப். நாடுகாண். (1-3)**

"ஆடித் திங்கட் பேரிருட் பக்கத்
தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று
வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண
வுரைசான் மதுரையோ டரசுகே டுறுமெனு
முரையு முண்டே நிரைதொடி யோயே"

சிலப். கட்டுரை 133-7

மேற்காணும் பாடல்வரிகளில் காணப்படும் வானிலைக் குறிப்புகளைக் கணித்துப் பார்த்தவர் எல்.டி. சாமிகண்ணுப்பிள்ளை. மதுரை மாநகர் எரியுண்டது கி.பி. 756 ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 23ஆம் நாளாகும் என்றும், ஆகவே கடைச் சங்க காலத்தின் இறுதிக் காலம் எட்டாம் நூற்றாண்டு ஆகும் என்றும் அவரே அறுதியிட்டுக் கூறியுள்ளார்.[2]

இவ்விரண்டு அறிஞர்களின் கருத்துகளையும் மறுத்துத் தன் கருத்தினை நிலை நாட்டுகின்றார் பண்டாரத்தார்.

சைவ சமய குரவர்களுள் ஒருவராகிய திருநாவுக்கரசர் தாம் பாடிய திருப்புத்தூர்ப் பதிகத்தில்

**"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி**
**நற்கனகக் கிழிதருமிக் கருளினோன்காண் (பாடல் 3)**

என்று கடைச் சங்ககால நிகழ்ச்சியொன்றினைக் கூறியுள்ளார். மேலும் திருஞானசம்பந்தர் தம் பதிகத்தில்

"அந்தண் மதுரைத் தொகை யாக்கினானு - - - - -
பெற்றொன் றுயர்த்த பெருமான்"

என்று மதுரையம்பதியிலிருந்த கடைச் சங்கத்தைக் குறித்துள்ளார்.[3]

மேற்காணும் பல கூற்றுகளை ஆராய்ந்து திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் தேவாரப் பாடல்களை முன் வைத்துக் கடைச் சங்கத்தின் இறுதிக்காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியாதல் வேண்டுமென்று தெளிவான முடிவினைத் தந்தார் பண்டாரத்தார்.

## கடைச் சங்கம் வீழ்ச்சியடைந்ததற்குக் காரணம் பெரும் பஞ்சமா? களப்பிரர் ஆட்சியா?

மதுரை மாநகரில் நடைபெற்று வந்த கடைச்சங்கம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அழிவுற்றமைக்குக் காரணம் பெரும் பஞ்சம் தான் என்று இறையனார் அகப்பொருள் உரையும், மணிமேகலைப் பாடல்வரிகளும் சுட்டி நிற்கின்றன.

கடைச் சங்க நாளில் பாண்டி நாட்டில்பெரும் பஞ்சமொன்று தோன்றியது என்பதும், அக்காலத்தில் சங்கப் புலவர்கள் வேறு நாடுகளுக்குச் சென்று உயிர் வாழ நேர்ந்தது என்பதும் இறையனார் அகப்பொருள் உரையால் அறிந்து கொள்ள முடிகின்றது.

இந்நூல் கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்குப் பின்னரே தோன்றினாலும் கடைச் சங்க காலத்து நிகழ்ச்சியைத் (பஞ்சம் ஏற்பட்டதை) தெளிவாகப் புலப்படுத்தி நிற்பதனை மறுக்க இயலாது.[4] இதனை உறுதி செய்யும் நிலையில் மணிமேகலை

**"பன்னீ ராண்டு பாண்டி நன்னாடு**
**மன்னுயிர் மடிய மழைவள மிழந்தது"**
**மணிமேகலை - பாத்திரமரபு கூறிய காதை: 55 - 56**

என்று கூறுகின்றது.

மேற்காணும் செய்திகளை நோக்கும் போது பாண்டி நாட்டில் பஞ்சம் தோன்றியதை மறுக்க இயலாது என்பது தெளிவாகிறது.

பாண்டிநாடு செழிப்பெய்திய பின்னர்ச் சங்கப் புலவர்கள் மதுரையம்பதிக்குத் திரும்பிச் சென்றுவிட்டமையினை இறையனார் அகப்பொருள் உரையால் உணரலாம்.[5]

பஞ்சம் ஏற்பட்டதால் கடைச்சங்கம் வீழ்ச்சியடைந்தது என்னும் கருத்து ஏற்புடைத்ததாகவில்லை என்று கூறுகின்றார் பண்டாரத்தார்.

கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டியர் ஆட்சியின் வலிமை குன்றிக் களப்பிரர்களின் ஆளுகைக்குட்பட்டுத்

தமிழகம் அரசோச்சி நின்றது. மேலும் பாண்டிநாட்டைக் களப்பிரரும், தொண்டை நாட்டைப் பல்லவரும் ஆகிய இரு பேரரசுகளும் தமிழ்நாடு முழுவதும் ஆட்சி செய்தன.

தமிழகத்தில் ஏற்பட்ட அயலார் ஆட்சியினால் தமிழும், தமிழ் மக்களும் பாதிப்புக்கும் வீழ்ச்சிக்கும் எத்துணையோ வகைகளில் ஆளாயினர் எனலாம். களப்பிரர் படையெழுச்சி பாண்டிய நாட்டில் எத்துணையோ மாறுதல்களையும், புரட்சியையும் உண்டு பண்ணியது. அவர்களின் பாலி மொழி, பிராகிருத மொழி அரியணை ஏறி ஆட்சி செய்யத் தொடங்கின. இம்மொழிச் செல்வாக்கு தமிழ்மொழி, தமிழ்க்கலை, தமிழர் நாகரிகம் ஆகியவற்றை வீழ்ச்சியுறச் செய்து விட்டன என்பதனை வேள்விக்குடிச் செப்பேடுகளின் வாயிலாக நன்கறியலாம்.

கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இடைப் பகுதி முதல் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில் நடைபெற்ற அயலார் ஆட்சியில் தமிழ்மொழி போற்றுவாரற்றுத் தன் வளர்ச்சியும் பெருமையும் இழந்து தாழ்ந்த நிலையை எய்தியது என்பதனை உணர முடிகிறது.[6] பஞ்சத்தினால் சங்கம் அழிந்தது என்பதும், மக்கள் திசை மாறினர் என்பதும் பொருந்தாத கருத்துகளாம்.

முடிபாக, கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நிகழ்ந்த களப்பிரர் படையெழுச்சியினால்தான் மதுரை மாநகரில் நடைபெற்ற கடைச்சங்கம் அழிவுற்றது என்பதை ஐயமின்றித் தெரிவிக்கின்றார் பண்டாரத்தார்.

## இருண்ட காலத்தில் தமிழ் நூல்களே தோன்றவில்லையா?

கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இடைக்காலம் முதல் அயலாராகிய களப்பிரரும், பல்லவரும் தமிழ்நாட்டைக் கைப்பற்றி அரசாண்ட காலத்தில் பாலி, பிராகிருதம், வடமொழி ஆகிய பிறமொழிகளும், பௌத்தம், சமணம் ஆகிய புறச் சமயங்களும் எத்துணை உயர்வு எய்திப் பெருமையுற்றன என்பது விளங்கும். ஆகவே, அயலாரது ஆட்சிக் காலம் முழுவதும் தமிழ்மொழிக்கு ஆதரவும், வளர்ச்சியும் இல்லாமல் போயின எனலாம். எனவே அக்காலத்தைத் தமிழ்மொழிக்கு இருண்டகாலமாகக் கூறுவர் பண்டாரத்தார். இக்காலப்பகுதியில் தமிழ் நூல்கள் தோன்றினவா என்பதே ஐயம். அதனைத் தெளிவிக்கும் பொருட்டுப் பண்டாரத்தார் தம் கருத்துகளை நிறுவுகின்றார்.

வடவேங்கடம் முதல் தென்குமரி வரையிலுள்ள பெருநிலப் பரப்பு முழுவதும் பிறமொழியாளராகிய பல்லவரும், களப்பிரரும்

அரசாண்ட காலப்பகுதியிலும் சில தமிழ் நூல்கள் தோன்றின. அக்காலப்பகுதியில் தமிழ்மொழிக்கு அரசாங்க ஆதரவு இல்லையென்றாலும் சமயம், நீதி மற்றும் சிற்றிலக்கிய நூல்களும் தோன்றின.

தமிழ் மக்கள் யாவரும் தம் பண்டை அறவொழுக்கங்களைப் பொன்னே போல் போற்றி அவற்றின் வழியே நல்வாழ்க்கை நடத்தி இன்புறுதற்கு இலக்கியங்கள் பெரிதும் பயன்பட்டு வந்தன எனின், அச்செய்தி வெறும் புனைந்துரையன்று என்று கூறுகின்றார் பண்டாரத்தார்.

கி.பி. 250 முதல் கி.பி. 600 வரையில் அடங்கிய காலப்பகுதியில் இயற்றப் பெற்றவையாக ஆராய்ந்தறியப் பெற்ற தமிழ் நூல்கள் பல உள. அவை சமய நூலாகவும், இலக்கிய நூலாகவும், நீதி இலக்கிய நூல்களாகவும் வெளிவந்துள்ளன எனில் மிகையாகாது.

சமய நூல்களினைப் பாடியவர்கள் திருமூலரும், காரைக்காலம்மையாரும் ஆவர். சேர, சோழ, பாண்டியர்களின் பண்டைப் பெருமைகளைக் கூறும் நூல் முத்தொள்ளாயிரம். ஏனைய யாவும் நீதிநூல்களே எனலாம்.

நீதி நூல்கள் யாவும் இலக்கிய வரலாற்றில் முக்கியமாக விளக்கப்படவேண்டியவை. அவற்றை எண்ணியே பண்டாரத்தார் நூல் வரலாறு, நூலாசிரியர் வரலாறு, நூல் இயற்றப் பெற்ற காலம், நூலில் நுவலப்படும் பொருள் முதலியவற்றிற்குச் சிறப்பாகத் தம்நூலில் விளக்கம் தருகிறார். இவற்றுக்குச் சிறப்புப் பாயிரப் பாடல்களையும் கொண்டு நுணுகி ஆராய்ந்து கூறுதல் இவரின் தனித்தன்மையை வெளிக்காட்டுவதாகும்.

அகப்பொருளில் நீதி இலக்கியம் பாடிய பெருமையுடையது இருண்ட காலமாகும். இக்காலத்தில் ஐந்திணை 50, திணைமொழி 50, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது முதலான நூல்கள் தோன்றின.[7]

## 13, 14, 15ஆம் நூற்றாண்டுகளில் பாண்டியப் பேரரசு அழிந்ததன் தாக்கம் என்ன?

கி.பி. 13ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் ஆட்சி மாறுதல் அடிக்கடி நிகழ்ந்ததால் அமைதியின்றி இருந்தது. இந்நூற்றாண்டில் சிறந்த புலவர்களும், அரிய நூல்களும் தோன்றவில்லை என்றே கூறலாம். இருப்பினும் இறையுணர்வு போற்றப்பெற்றது. செவிவழிச்

செய்திகள் பேசப்பட்டன. இவற்றின் வழித் தத்துவங்கள் நூல்களாக மலர்ந்தன.

அவற்றின் விளைவாக, திருவாலவாய் உடையார் திருவிளையாடற் புராணம் ஆகிய நூல் ஒன்றும், சிவஞான போதம் சிவஞானசித்தியார், இருபா இருபஃது, உண்மை நெறி விளக்கம் முதலான சைவ சமய சாத்திர நூல்கள் நான்குமாக வெளி வந்தன. பாரதம், நளவெண்பா, காங்கேயன் பிள்ளைக் கவி, தஞ்சைவாணன் கோவை முதலான நூல்களை வரலாற்று ஆதாரங்களுடன் ஒப்பிட்டு நோக்கியுணரலாம் என்கிறார் பண்டாரத்தார்.

கி.பி. 13ஆம் நூற்றாண்டில் உயர்நிலையில் இருந்த பாண்டியரது தமிழ்ப்பேரரசு, கி.பி. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வீழ்ச்சியடைந்தது.

கி.பி. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியனுடைய புதல்வர்களாகிய சடையவர்மன் சுந்தர பாண்டியனும், சடையவர்மன் வீர பாண்டியனும் ஆட்சியுரிமைபற்றித் தம்முள் பகை கொண்டு போர் புரிந்து கொண்டு இருந்தமையால் தமிழ்நாட்டில் குழப்பம் மிகுந்திருந்தது.

கி.பி. 14ஆம் நூற்றாண்டில் தமிழ்நாடு அயலாரது படையெழுச்சிக்குட்பட்டு எல்லையற்ற இன்னலுக்குள்ளாகித் தன் செல்வத்தையும், சிறப்பையும் இழக்கும்படி நேர்ந்தது என்று குறிப்பிட்டு விளக்குகின்றார் பண்டாரத்தார்.[8]

இதனால் கி.பி 14ஆம் நூற்றாண்டில் சிறந்த தமிழ் நூல்கள் தோன்றுவதற்கிடமின்மையினை அறிய முடிகிறது. சைவசித்தாந்த நூல்கள் பதினான்கினுள் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் ஆகிய எட்டு நூல்களும், தில்லைக் கலம்பகம், திருவாமாத்தூர் கலம்பகம், ஏகாம்பர நாதர் உலா, வில்லிபுத்தூர் ஆழ்வார் பாரதம், கப்பற் கோவை, தேசிகப் பிரபந்தம் ஆகிய நூல்களும் இந்நூற்றாண்டில் இயற்றப் பெற்றவையாகும்.

இங்குப் பண்டாரத்தார் 14 சைவ சித்தாந்தநூல்களில் கி.பி. 3ஆம் நூற்றாண்டில் 4 நூல்களும், கி.பி. 14ஆம் நூற்றாண்டில் 10 நூல்களும் எனக் கால வரலாற்றாராய்ச்சி செய்து அறுதியிட்டுக் கூறுகின்றார். ஏனைய வரலாற்றாராய்ச்சியாளர்கள் 14ஆம் நூற்றாண்டென்றே கூறுவர்.

தமிழ்நாடு முழுவதும் வேறுமொழி பேசும் அன்னியர்களால் ஆளப்பட்டு வந்த ஒரு காலப்பகுதி 15ஆம் நூற்றாண்டாகும். இந்நூற்றாண்டில் தமிழகம் விசய நகரப் பேரரசுக்குக் கட்டுப்பட்டிருந்தது. கன்னடமே அவர்களுடைய தாய்மொழியாகும். இந்நூற்றாண்டில் தமிழ்மொழி அரசாங்க மொழியாகவுமில்லை. அரசாங்கத்தால் ஆதரிக்கப்பட்ட மொழியாகவும் இல்லை. ஆகவே பிற மொழியாளராகிய அன்னியர் ஆளுகையில் சிறந்த நூல்கள் தோன்றுவதற்குச் சிறிதும் இடமில்லை. எனினும் இக்காலத்தில் கடவுளிடத்தில் பேரன்பு பூண்டு ஒரு சில அடியார்கள் தோன்றித் தமிழொலி முழங்க, மக்கள் உள்ளம் கவருமாறு தாய்மொழிப்பற்று குறையாதவாறு தமிழ்ப்பாக்கள் பாடி, காத்து வந்தமை ஓர் அரிய நிகழ்ச்சியாகும். திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, கந்தர் அந்தாதி, திருவானைக்காவுலா, ஓங்குகோயிற் புராணம் முதலான பக்திப்பனுவல்கள் இந்நூற்றாண்டில் தோன்றியனவே.[9]

## பாண்டியர் வரலாறு

தமிழகத்தில் முற்காலத்தில் ஆட்சிபுரிந்த தமிழ் வேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்களின் வரலாறுகள் நமக்கு மகிழ்ச்சியும், உணர்ச்சியும் அளிக்க வல்லன என்பது யாவரும் அறிந்த ஒன்றாம். கல்வெட்டுகளையும், செப்பேடுகளையும் தமிழ் நூல்களையும் பிற ஆராய்ச்சி நூல்களையும் ஆதாரமாகக் கொண்டு எழுதப்பெற்றதே 'பாண்டியர் வரலாறு' என்னும் நூலாகும். கடைச்சங்க காலத்திற்கு முன்னர்த் தொடங்கி, கி.பி. 17ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் பாண்டிய நாட்டில் ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர்களின் சரிதங்களைச் சுருக்கமாகக் கூறுவதாகும்.

1. கடைச்சங்க காலத்திற்கு முந்திய பாண்டியர்கள்
2. கடைச்சங்க காலத்துப் பாண்டியர்கள்
3. பாண்டிய நாட்டில் களப்பிரர் ஆட்சி
4. கி.பி. 575 முதல் கி.பி. 900 வரையில் ஆட்சி புரிந்த பாண்டியர்கள்
5. கி.பி. 900 முதல் கி.பி. 1190 வரையில் ஆண்ட பாண்டியர்கள்
6. கி.பி. 1190 முதல் கி.பி. 1310 முடிய ஆட்சி புரிந்த பாண்டியர்கள்
7. கி.பி. 1310ஆம்ஆண்டிற்குப் பின்னர் ஆட்சி புரிந்த பாண்டியர்கள்
8. தென்பாண்டி நாட்டில் ஆட்சி புரிந்த பிற்காலப் பாண்டியர்கள்
9. பாண்டியர் கால அரசியல்

ஆகிய நிலைகளில் ஆட்சி புரிந்த மன்னர்களின் பெயரும், ஆட்சியாண்டுக் காலமும், ஆட்சி எல்லையும் மிகச் சிறப்பாகப்

பகுக்கப் பெற்று வகுக்கப் பெற்றுத் தரப்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

பாண்டியர் வரலாற்றுக்கு முன் பிற்காலச் சோழர் வரலாற்றை மூன்று பகுதிகளாக 1100 பக்க அளவில் விரிவாகப் பண்டாரத்தார் எழுதியுள்ளார்.

இலக்கிய ஆராய்ச்சிக்கு உதவக் கூடிய வகையில் 14 கட்டுரைகளைத் தொகுத்து 'இலக்கியமும் கல்வெட்டுக்களும்' என்று எழுதியுள்ளார். இந்நூலில் சுந்தரர், கம்பர், நம்பியாண்டார் நம்பி, அகத்தியர், மாணிக்கவாசகர், இளம்பூரணர், மணக்குடவர் ஆகியோரின் காலங்களைப் பற்றி விரிவாகவும், விளக்கமாகவும் நேர்த்தியான முறையில் ஆய்வு செய்துள்ள முறை இவரின் வரலாற்றாராய்ச்சிக்குத் தனித்ததோர் சிறப்பாகும். இலக்கிய நூல்களின் சிறப்புகளையும் ஆராய்ச்சி செய்துள்ளார். தேவாரம் என்னும் சொல் வழக்கு யார் காலத்தில் இடம் பெற்றது என்பதையும், தமிழ்நாட்டில் விநாயகர் வழிபாடு தோன்றிய காலம், கல்வெட்டுச் சான்றுகளின் வாயிலாக நிறுவிய பாங்கு இவரது புலமைக்குச் சான்று பகர்வதாம்.

### மாணிக்கவாசகரின் காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டா? (அ) எட்டாம் நூற்றாண்டா?

(i) சில அறிஞர்கள் மணிவாசகப் பெருமான், தேவாரம் பாடிய மூவர்க்கும் முன் வாழ்ந்தவர் என்று கருதுகின்றனர்.

(ii) திருநாவுக்கரசர், திருவாரூர்ப் பதிகத்தில் 'நரியைக் குதிரை செய்வானும்' என வருவதால் திருநாவுக்கரசர்க்கு முன் வாழ்ந்தவர் என்று குறிப்பிடுவர்.

இதனைப் பண்டாரத்தார் மணிவாசகரின் பெயரை நாவுக்கரசர் குறிப்பிடாததால் இவ்வரிகள் சிவனின் ஆற்றலை விளக்க வந்தனவே என்று கூறினார்.

(iii) சுந்தரமூர்த்திகள் தம் திருத்தொண்டத்தொகையில் '**பொய்யடிமையில்லாப் புலவர்**' என மாணிக்கவாசகரைக் குறித்துள்ளார் என ஒருசாரார் குறிப்பிடுகின்றனர்.

பொய்யடிமையில்லாப் புலவரை 'மாணிக்க வாசகர்' என்று கொண்டால், தனியடியார் அறுபத்து மூவரையும், அறுபத்து நால்வர் எனவும் தொகையடியார் ஒன்பதின்மரையும் எண்மர் எனவும் கொள்ள வேண்டிய நிலை ஏற்படும். அவ்வாறு கொண்டால் நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார், உமாபதி சிவாச்சாரியார்

கூறியுள்ள வரலாற்றுண்மைக்கு முரண்பட்டிருத்தலாகி விடும். மேலும் தொன்று தொட்டு வழங்கி வரும் முறைக்கும் அது மாறுபட்டு விடும். தேவாரம் பாடிய மூவரும் பொய்யடிமையில்லாப் புலவர் மாணிக்கவாசகர் என்று குறிப்பிடாமை அறியத்தக்கது.

மாணிக்க வாசகர் தம் போற்றித் திருவகவலில்

'மிண்டிய மாய வாத மென்னுஞ்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்து"

என்று கூறியிருப்பது அடிகள், சங்கராச்சாரியர் காலத்தில் இருந்தவர் என்பதை உணர்த்துதல் காணலாம்.

வேதாந்த சூத்திரத்திற்குச் சங்கர பாடியம் என்ற பேருரை வரைந்து அச்சமயத்தை யாண்டும் பரப்பிய ஆதிசங்கரர் கி.பி. 788 முதல் 820 வரையில் இருந்தவர் என்பது அறிஞர்களின் கருத்தாகும். எனவே ஆதிசங்கரரும் அடிகளும் ஒரே காலப்பகுதியில் இருந்தவர்கள் என்பது வலியுறுதல் அறியத்தக்கது[10]

இதுகாறும் விளக்கிய வரலாற்றில் முதல் வரகுண பாண்டியன் ஆட்சிக் காலத்தில் கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், ஒன்பதாம் நூற்றாண்டின் முதற்பகுதியிலும் மாணிக்கவாசகர் இருந்திருத்தல் வேண்டும் என்கிறார் பண்டாரத்தார்.

## தேவாரம் என்னும் பெயர் வழக்கு

சைவசமயக்குரவர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடியருளிய திருப்பாடல்கள் இக்காலத்தில் தேவாரம் என்று வழங்கப்படுகின்றன. இவ்வழக்கு குறித்துப் பண்டாரத்தார் கூறும் கருத்துகளைக் காண்போம்.

தேவாரம் - தே+வாரம் - தெய்வத்திற்குச் சூட்டப்படுகின்ற பாமாலைகள் என்று பொருள்

(i) சிலப்பதிகாரத்தில்,

"வாரம் பாடுந் தோரிய மடந்தையும்" (சிலம்பு – ஊர்காண். 155)

என்ற வரியை மேற்கோளாகக் காட்டிக் கடவுளிடத்து அன்பை உண்டுபண்ணுவது என்ற பொருளைத் தரும் என்று உரைப்பர்.

(ii) பட்டினத்தடிகள், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் ஆகிய சைவப் பெரியார் காலங்களில் மூவர் பாடல்கள் தேவாரம் என்று வழங்கப்படவில்லை என்பது தெளிவாகும். எனவே சேக்கிழார் காலத்திற்குப் பிறகே அவை தேவாரம் என்ற பெயரை எய்தியிருத்தல் வேண்டும் என்பது தேற்றம்.

'தேவாரம்' என்ற பெயர்வழக்கைத் தமிழ் நூலில் முதன் முதலில் வழங்கிய புலவர்கள் இரட்டைப் புலவர்கள். இக்கருத்தை அவர்கள் பாடிய ஏகாம்பர நாதருலாவில்

"மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரஞ் செய்த திருப்பாட்டும்"

என்னும் அடிகளால் அறியலாம்.

மேலும் 'தேவாரம்' என்னும் சொல் கி.பி. 11, 12 ஆம் நூற்றாண்டுகளில் அரசாண்ட சோழமன்னர்களின் கல்வெட்டுகளில் இடம் பெறுகின்றது.

முதல் இராஜேந்திரசோழன் ஆட்சியில் தோன்றிய கல்வெட்டுகளில் 'தேவாரம்' என்னும் சொல் வழிபாடு என்னும் பொருளில் வந்திருக்கின்றது. இவனது ஆட்சியாண்டில் தோன்றிய இன்னொரு கல்வெட்டில் 'தேவாரம்' வழிபாடு நிகழ்ந்து வந்த இடத்தைக் குறிக்கின்றது என்பதனை உணர்ந்தறியலாம்.

இவ்வாய்வுக் கட்டுரையின் வாயிலாகத் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் வரலாற்றாராய்ச்சியின் வாயிலாகத் தமிழகத்திற்கு ஆற்றிய பங்களிப்புகளாக,

1. சதாசிவபண்டாராத்தார் ஆய்வுக்கட்டுரைகள்
2. தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 250 முதல் கி.பி. 600 வரை)
3. தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 13, 14, 15ஆம் நூற்றாண்டு)
4. இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும்
5. இலக்கியமும் கல்வெட்டுக்களும்.
6. கல்வெட்டுக்கள் கூறும் உண்மைகள்
7. முதல் குலோத்துங்க சோழன்
8. பிற்காலச் சோழர் வரலாறு மூன்று பகுதிகள்.
9. பாண்டியர் வரலாறு.

ஆகிய 9 நூல்கள் அமைந்துள்ளமையை அறியலாம்.

அவர் கண்ட முடிபுகள்

1) கடைச்சங்க காலத்தின் இறுதியாண்டு கி.பி. 3ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.
2) கடைச்சங்கம் வீழ்ச்சியடைந்ததற்குக் காரணம் பெரும் பஞ்சமில்லை. அப்பொழுது படையெடுத்து வெற்றி கொண்ட களப்பிரர்களே காரணமாகும்.
3) இருண்ட காலம் என்பது, பாலி, பிராகிருதம் மொழி பேசி ஆண்ட களப்பிரர்கள் தமிழுக்கு ஆதரவு அளிக்காது

விட்டதலால் ஒரு சில நூல்களே தோன்றின. சங்க காலம் போல இலக்கியச் செல்வாக்கு பெறாததனால் 'இருண்ட காலம்' எனக் கூறினர் தமிழறிஞர்கள்.

4) கி.பி. 13, 14, 15ஆம் நூற்றாண்டில் பாண்டியர்களின் வலிமை குன்றியது. சோழர்கள், மற்றும் விசய நகரப் பேரரசர்கள் ஆண்டனர். அப்பொழுது சமயத் தமிழ் நூல்களும், சைவ சித்தாந்த நூல்களும் தோன்றித் தமிழ் மரபினைக் காத்து நின்றன.

5) பாண்டியர் வரலாறு என்னும் நூல் கடைச்சங்கம் முதல் கி.பி. 14ஆம் நூற்றாண்டுவரை ஆண்ட பாண்டியர்களின் பெயர், ஆட்சிமுறை, அரசியல் நிலை, காலம், மெய்க்கீர்த்தி முதலிய செய்திகள் அடங்கிய நூலாக விளங்குகின்றது.

6) மாணிக்கவாசகர் காலம் எட்டாம் நூற்றாண்டின் இறுதிக்கும், ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும் இடைப்பட்ட காலப்பகுதியாக இருக்கலாம்.

7) தேவாரம் என்னும் பெயர் வழக்கு முதன் முதலில், இரட்டைப் புலவர்கள் பாடிய ஏகாம்பர நாதர் உலாவில் இடம் பெறுகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. தி.வை. சதாசிவபண்டாரத்தார், தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி. 250 - 600) கடைச்சங்கத்தின் இறுதிக் காலம் , பக். 4-7.
2. மேற்படி, பக். 7-8.
3. மேற்படி, பக். 9.
4. இறையனார் அகப்பொருள் உரை பக். 8. (பவாநந்தம் பிள்ளை பதிப்பு).
5. மேற்படி, பக். 8-11.
6. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், தமிழ் இலக்கிய வரலாறு, பக். 16.
7. மேற்படி, பக். 62.
8. தமிழ் இலக்கிய வரலாறு, கி.பி. 13, 14, 15ம் நூற்றாண்டு, பக். 56.
9. மேற்படி, பக். 101.
10. இலக்கியங்களும் கல்வெட்டுக்களும், பக். 55.

****

# பிற்காலச்சோழர் வரலாறு

வ. ஜெயா

இந்தியாவைப் பொறுத்தவரை வரலாறு என்பது மன்னர்களின் ஆட்சி, அரசியல், நிர்வாகம், போர் பற்றிய செய்திகள், மன்னர்களின் கொடைத் திறன், மக்களின் நிலை போன்ற இன்னோரன்ன செய்திகளை அறிவியல் கண்ணோட்டத்தோடு விளக்கும் ஒரு துறையாகக் கருதப்படுகின்றது. தமிழக வரலாற்றைப் பொறுத்த வரை சோழர்களுக்கென்று தனியிடம் உண்டு. தமிழ் மொழி இலக்கிய வரலாற்றிலும், சமூகவியலிலும் சோழப் பேரரசிற்குச் சிறப்பிடம் உண்டு. பல்வேறு பெருமைகளுக்கும் சிறப்புகளுக்கும் உரிய ஓர் அரசாகவே அது கருதப்படுகிறது. இவ்வாறு ஆட்சி, அரசியல், நிர்வாக முறைகளை அவர்களின் மெய்க்கீர்த்தி வழியாக அறிந்து கொள்ள முடிகிறது. பிற்காலச் சோழர்களைப் பற்றி நீலகண்ட சாஸ்திரி, சதாசிவபண்டாரத்தார், மு. அருணாசலம் போன்றோர் எழுதியுள்ளனர். இவர்களில் சதாசிவபண்டாரத்தார் குறிப்பிடத்தகுந்த அறிஞராவார். பிற்காலச் சோழப் பேரரசின் வரலாற்றை எவ்வாறு இவர் விளக்கியுள்ளார் என்பதைக் காணலாம்.

## சோழர் வரலாறு

வடவேங்கடம், தென்குமரிக்கு இடையேயுள்ள நிலப்பரப்பு முற்காலத்தில் தமிழகம் என்று வழங்கப்பெற்றது. இப்பகுதியினைக் குடபுலம், குணபுலம், தென்புலம் என்ற மூன்று பகுதிகளாகப் பிரித்துச் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர்கள் ஆட்சி புரிந்து வந்தனர். "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" எனவும், "போந்தை, வேம்பே, ஆரென வரூஉம் மாபெருந்தானையர்" எனவும் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

சோழர் என்போர் மிகப் பழங்காலத்திலிருந்தே ஆட்சி புரிந்து வந்தனர் என்பதற்கு இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங்கள் சான்று பகர்கின்றன. அது போலவே வெளிநாட்டு யவன ஆசிரியர் தாலமி என்பவரின் வரலாற்றுக் குறிப்பிலும், பெரிப்ளூஸ் என்ற நூலிலும் சோழர்கள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. மிகவும் தொன்மை வாய்ந்த சோழர் குடியினர் வளம் நிறைந்த சோழ மண்டலத்தை ஆட்சிபுரிந்து வந்ததால் **வளவர்** என்று

அழைக்கப்பட்டனர். "வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி"யால் சிறப்புற்றமையால் காவிரிநாடு என்றும், பொன்னி நாடு என்றும் அறிஞர்களால் பாராட்டப்பட்டது. நிலவளமும் நீர்வளமும் ஒருங்கே பெற்று அமைந்துள்ளதால் நெல்விளைவு இந்நாட்டில் அதிகம் என்பதை "மேதக்க சோழ வளநாடு சோறுடைத்து" என்று ஔவையார் கூறியிருப்பதன் வழி அறிய முடிகிறது. இக்குடியினர் சூரிய குலத்தினர் என்பது சங்கத்துச் சான்றோர் கருத்தாகும். இவர்களது கொடி, இலச்சினை புலியுருவம் பொறிக்கப் பெற்றிருக்கும். ஆத்திமாலை இவர்களுக்குரிய அடையாள மாலையாகும். உறையூர், காவிரிப்பூம்பட்டினம், தஞ்சாவூர், கங்கை கொண்ட சோழபுரம், பழையாறை ஆகியவை பிற்காலச் சோழர்களின் தலைநகரங்களாக விளங்கின. பிற்காலச் சோழர்களின் இரண்டாவது தலைநகராகப் பழையாறை நகரம் விளங்கியது எனலாம்.

## பிற்காலச் சோழர்கள்

சோழப் பேரரசை நிறுவ முதலில் அடிகோலியவன், கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த விசயாலயன் என்னும் சோழ மன்னன் ஆவான். இவன் தஞ்சை மாநகரைக் கைப்பற்றி அதனைத் தன் தலைநகராக வைத்துக் கொண்டான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் உணர்த்துகின்றன. இம்மன்னன் கடைச்சங்க காலத்தில் புகழுடன் விளங்கிய கரிகாலன், பெருநற்கிள்ளி, செங்கணான், நல்லடி எனும் சோழப்பரம்பரையில் தோன்றியவன் என்று கூறுவர். பல்லவர்களுக்கும் பிற அரசர்களுக்கும் பல்லாண்டு அடிமைப்பட்டுக் கிடந்த சோழப் பேரரசை உயர்நிலைக்குக் கொண்டு வர அடிகோலியவன் விசயாலயன் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பிற்காலச் சோழ மன்னர்கள் பற்றிய விவரங்களும், அக்காலத்தில் உதவிய சிற்றரசர்கள், உயர் அதிகாரிகள் பற்றிய செய்திகளும் அரசியல் நிர்வாகத்திறன், சமூக வாழ்க்கை, வாணிபம், பொருளாதாரம் ஆகியவை பற்றிய செய்திகளும், சதாசிவ பண்டாரத்தாரின் வரலாற்று அணுகுமுறை பற்றிய செய்திகளும் பின்வருமாறு:



பிற்காலச் சோழர்
விசயாலய சோழன்
ஆதித்த சோழன்
முதல் பராந்தகன்
கன்னரதேவன்
இறப்பு
இராசாதித்தன்
அரிஞ்சயன்
உத்தமசீலி
அனுபமா
வீரமாதேவி
இறப்பு
கண்டராதித்தன்
மதுராந்தகன்




இரண்டாம் பராந்தகன் என்ற சுந்தர சோழன்




இரண்டாம் ஆதித்த சோழன்
இறப்பு
அருண் மொழிவர்மன் என்ற
இராசராசன் (985 - 1014)
குந்தவைப் பிராட்டி
(வல்லவரையன் வந்தியத்
தேவரை மணந்தவள்)
முதலாம் இராஜேந்திரன்
(கி.பி. 1012 - 1044)
மாதேவடிகள்
இரண்டாம் குந்தவை
முதல் இராசாதிராச
சோழன்
இரண்டாம்
இராசேந்திரன்
வீரராசேந்திரன்
சடையவர்மன்
சுந்தரசோழ
பாண்டியன்
(மதுரையின் பிரதிநிதி)
அருண்மொழி
நங்கை
அம்மங்கை
தேவி
விமலாதித்தன்
குந்தவை மகன்
இராசராச நரேந்திரனை
மணந்தவள்


வீரராசேந்திர சோழன் (கி.பி. 1063 - 1070)
மதுராந்தகன்
(சோழேந்திரன் எனும் பட்டம்)
தொண்டை நாட்டின் பிரதிநிதி
அதிராசேந்திரன் (கி.பி. 1070)
இறப்பு
கங்கை கொண்ட சோழன்
(சோழ பாண்டியன் எனும் பட்டம்)
பாண்டிய நாட்டுப் பிரதிநிதி


இரண்டாம் இராசேந்திர சோழன் (கி.பி. 1051 - 1063)
இராசேந்திரசோழன்
முகையவிழலங்கல்
முடிகொண்ட
சோழன்
சோழகோளன்
கடாரங்கொண்ட
சோழன்
இரட்டப்பாடி
கொண்ட
சோழன்
மதுராந்தகி
இராசராசநரேந்திரன்
(அம்மங்கை தேவிக்குப் பிறந்தவன்)
கீழைச்சாளுக்கிய சோழர் மரபு
இராசராச நரேந்திரன் + அம்மங்கை தேவி புதல்வன்


முதற் குலோத்துங்கன் (இராசேந்திரன்)
விக்கிரமசோழன்
இராசராச
மும்முடிச்சோழன்
வீரசோழன்
இராசராசசோழ கங்கன்
வேங்கிடநாட்டின் பிரதிநிதி
விக்கிரமசோழன் (கி.பி. 1118 - 1136)
இரண்டாம் குலோத்துங்கன்
இரண்டாம் இராசராசன் (கி.பி. 1146 - 1163)
எதிரிலி பெருமாள் என்ற இரண்டாம் இராசாதிராச சோழன்
(விக்கிரம சோழனின் பேரன்)
மூன்றாம் குலோத்துங்கன்
மூன்றாம் இராசராசசோழன்
மூன்றாம் இராசேந்திரன்

### விசயாலய சோழன் (கி.பி. 846 – 881)

தெள்ளாறெறிந்த நந்திவர்மன் காலத்திலிருந்த குமாராங்குசன் என்ற சோழ மன்னனுக்கு இவன் புதல்வனாயிருத்தல் வேண்டும் என்று பாளையச் செப்பேடுகளால் அறிய முடிகிறது. இவன் பழையாறையைத் தனது தலைநகராகக் கொண்டிருந்தான். அதன்பின் முத்தரையரை வென்று தஞ்சாவூரைக் கைப்பற்றி அதனைத் தலைநகரமாகக் கொண்டான். இவன் பரகேசரி என்ற பட்டம் பூண்டவன். இவன்பல போர்களில் ஈடுபட்டு மார்பில் தொண்ணூறு விழுப்புண்களைப் பெற்றவன் என்று புகழப்படுகிறான்.

கி.பி. 854இல் பாண்டியருக்கும் பல்லவமன்னன் நிருபதுங்கவர்மனுக்கும் குடமூக்கு எனப்படும் கும்பகோணத்தில் போர் நடைபெற்றது. அதில் பல்லவருக்கு ஆதரவாக விசயாலயன் பாண்டியரை எதிர்த்துப் போர் செய்தான். அதனால் சோழர்கள் சுயாட்சி பெற்றனர்.

### விசயாலயன் செய்த பணிகள்

புதுக்கோட்டையிலுள்ள நார்த்தாமலை என்ற ஊருக்குத் தென்மேற்கே ஒரு குன்றின் மீது விசயாலய சோழேச்சுரம் என்ற கற்றளி உள்ளது. இதனை இம்மன்னனே எடுப்பித்தான் என்பர். விசயாலய சோழ சதுர்வேதி மங்கலம் என்ற ஊர் ஒன்று இம்மன்னன் பெயரால் அமைக்கப்பட்டுள்ளது. சோழிய வளாகம் என்ற ஊர் விசயாலய நல்லூர் என்ற பெயருடன் முற்காலத்தில் நிலவியது என்று அவ்வூரிலுள்ள கல்வெட்டு உணர்த்துகிறது.

### முதல் ஆதித்தசோழன் (கி.பி. 871 – 907)

விசயாலய மன்னனின் புதல்வன் இவன். இராசகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான். இம் மன்னனுக்குக் கோதண்டராமன் என்ற மற்றொரு பெயரும் உண்டு. பல்லவ மன்னனாகிய அபராசித வர்மனை வென்று தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றிக் கொண்டான். கொங்கு நாட்டின் மீது படையெடுத்துக் கொங்கு நாட்டையும் தன் கீழ்க் கொணர்ந்தான்.

ஆதித்த சோழனும், சேரமான் தாணுரவியும் உற்ற நண்பர்கள். இவர்கள் இருவரும் இணைந்து விக்கியண்ணன் என்ற தலைவன் ஒருவனுக்கு அவன் புரிந்த அருந்தொண்டைப் பாராட்டிச் **செம்பியன் தமிழவேள்** என்ற பட்டமும், தவிசும், சாமரையும், சிவிகையும், திமிலையும், கோயிலுக்கு இறையிலி நிலமும், எக்காளமும், களிற்று நிரையும் வழங்கினர். முதற்பிருதிவிபதியின்

பெயரனும் மாறமரையன் புதல்வனாகிய இரண்டாம் பிருதிவிபதி என்ற கங்க மன்னன் ஆதித்தனுக்கு உற்ற நண்பனாக விளங்கினான்.

இம்மன்னனுக்கு இரு மனைவியர் இருந்தனர்.




### *முதல் பராந்தக சோழன் (கி.பி. 907 – 953)*

ஆதித்த சோழன் இறந்தவுடன் அவன் மகன் முதல் பராந்தகன் பரகேசரி என்ற பட்டம் கொண்டு சோழ அரியணை ஏறினான்.

இவன் ஆட்சிப் பொறுப்பேற்றுக் கொண்ட காலத்தில் வடக்கே திருக்காளத்தி வரையிலுள்ள தொண்டை மண்டலமும் கொங்கு மண்டலமும் இவன் ஆட்சியின் கீழ் இருந்தன. கி.பி. 910 இல் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்று மதுரையைக் கைப்பற்றினான். பாண்டிய மன்னன் இராசசிம்மன் தோற்றோடி சிங்கள மன்னன் ஐந்தாம் காசிபனிடம் படையுதவி கேட்டான். சிங்கள மன்னனும் படையுதவி அளித்தான். அதில் சிங்களப்படைகள் தோற்றோடின. இதனால் பாண்டிய மன்னன் தன் சுந்தரமுடியையும் பிறஅரச சின்னங்களையும் சிங்கள மன்னனிடம் ஒப்படைத்து விட்டுத் தன் தாய் வானவன் மாதேவியின் பிறந்தகமாகிய சேரநாட்டிற்குச் சென்று விட்டான். பாண்டியநாடு முழுவதும் சோழன் வசமாயிற்று. பாண்டியனின் முடியைப் பெற்றுவரச் சிங்கள நாட்டிற்குத் தூதுவனை அனுப்பினான் பராந்தகன். சிங்கள மன்னன் உதயன் மறுக்கவே ஈழ நாட்டின் மீது போர் தொடுத்தான். ஈழ வேந்தன் தோற்றோடிக் கிழக்கே ரோகண நாட்டிற்குத் தப்பிச் சென்றான். ஈழநாடும் சோழன் வசமாயிற்று. வாணர்குல அரசர்களை வென்று அவர்களது வாணகப்பாடி நாட்டைத் தன் நண்பன் இரண்டாம் பிருதிவிபதிக்கு வழங்கி அவனுக்குச் செம்பியன் மாவலிதூகணராயன் என்ற பட்டமும் அளித்தான் பராந்தகன். வைதும்ப மன்னனையும் போரில் வென்றான்.

பராந்தகனுக்குச் சோழமாதேவி, கோக்கிழானடி, அருமொழி நங்கை, வில்லவன் மாதேவி, வளவன் மாதேவி, சோழசிகாமணி, தென்னவன் மாதேவி எனப் பல மனைவியர் இருந்தனர்.

இம்மன்னனுக்கு நான்கு புதல்வர்களும் இரு புதல்வியரும் உண்டு.

### மன்னனின் சிறப்புப் பெயர்கள்

வீரநாராயணன், வீரசோழன், பண்டிதவற்சவன், குஞ்சரமல்லன், சங்கிராமராகவன், இருமுடிச் சோழன் என்ற சிறப்புப் பெயர்கள் உண்டு. ஒவ்வொரு பெயருக்கும் ஒரு சிறப்பு உண்டு.

வீரசோழன் - இராஷ்டிரகூட மன்னன் கிருஷ்ணதேவனைப் போரில் வென்றதால் ஏற்பட்டது. புலவர்களை ஆதரித்ததால் பண்டிதவற்சவன் எனப் போற்றப்பட்டான். மற்போரில் வல்லவனாகவும் களிறுபோல் வலிமைமிக்கவனாகவும் விளங்கியதால் குஞ்சரமல்லன் எனும் சிறப்பு எய்தினான். இராமனைப் போல் ஈழநாட்டில் போர் நிகழ்த்தி வென்றதால் சங்கராமராகவன் என்ற சிறப்புப் பெயரும் பாண்டிய நாட்டை வென்று அடிமைப்படுத்தியதால் இருமுடிச் சோழன் என்ற சிறப்புப் பெயரும் வழங்கலாயிற்று.

### வேந்தனின் பணிகள்

வீரநாராயணச் சதுர்வேதி மங்கலமும், வீரநாராயணன் ஏரியும் இவன் அமைத்ததே. மேலும் சோழசிங்கபுரத்திற்கு அருகில் சோழவாரிதி எனும் ஏரியும் இவனது ஆட்சியில் தோண்டப் பெற்றது. ஏமகர்ப்பம், துலாபாரம் முதலிய தானங்களைச் செய்தான். திருவிடைமருதூர், திருவாவடுதுறை, திருச்செந்துறை, உறுமூர் ஆகிய ஊர்களில் சிவன் கோவில்கள் கற்றளியாக ஆக்கப்பட்டன. சிறந்த சிவபக்தன் ஆகையால் தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன் கொண்டு வேய்ந்தான்.

### கண்டராதித்த சோழன் (கி.பி. 950 – 957)

இவனுக்கு இராசகேசரி என்ற பட்டப்பெயரும் உண்டு. சோழர்களுக்குத் திறை செலுத்தி வந்த வீரபாண்டியன் இம்மன்னன் காலத்தில் சுயேச்சை பெற்றுப் பாண்டிய நாட்டினை ஆண்டு வந்தான். கண்டராதித்தனுக்கு வீரநாரணி, செம்பியன் மாதேவி என இரு மனைவியர் இருந்தனர்.

இவ்வேந்தன் சிவபக்தியுடையவன். சிவன் மீது பாடல்கள் பாடியுள்ளான். அவை ஒன்பதாம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. கண்டராதித்த சதுர்வேதி மங்கலம் என்ற நகரில் திருமாலுக்காகக் கண்டராதித்த விண்ணகரம் என்ற ஒரு கோட்டம் அமைத்துள்ளான். மேலும் சமண சமயத்தினருக்காகக் கண்டராதித்த பெரும் பள்ளியையும் அமைத்துக் கொடுத்துள்ளான். ஆகவே, இம்மன்னன்

சமயக் காழ்ப்பின்றிச் சமயப் பொறையுடைய மன்னனாக விளங்கியிருந்தான் என்பது இதன்வழி உணர முடிகிறது.

இம்மன்னனுக்கு மும்முடிச்சோழன், சிவஞான கண்டராதித்தர் என்ற சிறப்புப் பெயர்கள் உண்டு.

## அரிஞ்சய சோழன் (கி.பி. 956 – 957)

இம்மன்னன் கண்டராதித்த சோழனின் தம்பியாவான். கண்டராதித்தனின் மகன் சிறு குழந்தையாய் இருந்தபடியால் தன் தம்பிக்கு இளவரசுப் பட்டம் சூட்டி மன்னனாக முடி சூட்டினான் என்பதை அறிய முடிகிறது. இவன் முதற் பராந்தக சோழனுக்கும் கேரள அரசனான பழுவேட்டரையர் மகளுக்கும் பிறந்தவன் என்று குறிப்பிடப்படுகிறது.

அரிஞ்சயன் சோழ நாட்டின் மன்னனாக முடி சூடிய பின்னர் இராஷ்டிரகூட மன்னன் மூன்றாங்கிருஷ்ணன் கவர்ந்து கொண்ட தொண்டை நாட்டையும், திருமுனைப்பாடி நாட்டையும் கைப்பற்ற எண்ணங்கொண்டு போர் தொடுத்தான். அந்தப் போரில் அம்மன்னன் இறந்து விட்டான் என்று கூறப்படுகிறது. 'ஆற்றூர்த்துஞ்சினதேவர்' என்று சில கல்வெட்டுகள் இவனைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. பல மனைவியருடைய இவனுக்கு, வெதும்பராயன் மகள் கல்யாணி மூலமாகப் பிறந்தவன் இரண்டாம் பராந்தகன் எனும் சுந்தரசோழன்.

## சுந்தரசோழன் (கி.பி. 957 – 970)

அரிஞ்சயன் இறந்தபின் அவனது மகன் இரண்டாம் பராந்தகன் எனும் சுந்தரசோழன் சோழ அரியணை ஏறினான். கண்டராதித்தன் காலத்தில் பாண்டிய நாடு விடுதலை பெற்று வீரபாண்டியன் ஆட்சி புரிந்து வந்தான்.

## இரண்டாம் ஆதித்தன் கொலை

சுந்தரசோழனின் மூத்த மகனான இரண்டாம் ஆதித்த சோழனை, சோழன் இரவிதாசனான பஞ்சவன் பிரமாதிராஜன், பரமேசுவரனான இருமுடிச்சோழ பிரமாதிராஜன் மலையனூரானான ரேவதாசகிரமவித்தன் என்போர் வஞ்சனையால் கொன்று விட்டனர். இதனால் மனமுடைந்த சுந்தரசோழன் கி.பி. 969இல் காஞ்சியிலுள்ள பொன் மாளிகையில் உயிர் துறந்தான். வானவன் மாதேவி தன் கணவன் மீது அளவற்ற அன்புடையவளாதலின் பிரிவாற்றாமல் தானும் உடன்கட்டையேறி

உயிர் நீத்தாள் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன.

## உதவிய அரசியல் அதிகாரிகள்

கொடும்பாளூர் குறுநில மன்னன் பராந்தகன் சிறிய வேளான் (படைத்தலைவன்), கொடும்பாளூர் வேள்பூதி விக்கிரமகேசரி, தொண்டை நாட்டுச் சிற்றரசன் பார்த்திவேந்திரவர்மன், மழநாட்டு அன்பில் எனும் ஊரைச் சார்ந்த அகிருத்த பிரமாதிராஜன் (முதல் அமைச்சர்).

## குந்தவைப் பிராட்டியின் செயல்பாடுகள்

சுந்தரசோழனின் மகளான குந்தவைப் பிராட்டி தன் பெற்றோர்களின் படிமங்களை இராசராசேச்சுரம் எனும் பெரிய கோவிலில் பிரதிஷ்டை செய்து நாள்வழிபாட்டிற்காகப் பெரும் பொருள் வழங்கியுள்ளார். மேலும் தந்தையின் பெயரால் சுந்தர சோழர் விண்ணகர் ஆதுரசாலை என்ற மருத்துவ நிலையம் நிறுவி அதனை நடத்தி வருவதற்கு மருத்துவக் காணிக்கையாக நிலமும் அளித்தார்.

இம்மன்னன் பெயரில் சுந்தரசோழப் பெரும்பள்ளி என்ற புத்த கோவில் ஒன்றும், பிரம்மதேசம் எனும் ஊரில் சுந்தரசோழபேரேரி ஒன்றும், சுந்தரசோழபுரம் என்ற நகரம் ஒன்றும் உள்ளன. சமயப் பொறையுடையவனாக விளங்கினான் என்பது இதன்வழி உணரமுடிகிறது. அந்நாட்டை வென்று தன் நாட்டுடன் இணைக்க வேண்டும் என்ற பேராவல் கொண்டு பாண்டிய நாட்டின் மீது போர் தொடுத்தான். அதில் வெற்றியும் பெற்றான். அவ்வெற்றிக்கு அவனது மூத்த மகன் இரண்டாம் ஆதித்தன் பெரும் உதவியாக இருந்தான். தன் தந்தையைப் போல் வடக்கேயுள்ள திருமுனைப்பாடி நாட்டையும் தொண்டை நாட்டையும் கைப்பற்ற எண்ணிப் போர் தொடுத்து, கிபி. 963இல் தொண்டை நாடு முழுவதும் இவன் ஆட்சிக்குட்படுத்தினான்.

## சிறப்புப் பெயர்கள்

மதுரை கொண்ட கோஇராசகேசரிவர்மன் எனவும் பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமாள் ஸ்ரீசுந்தரசோழதேவர் எனவும், மதுராந்தகம் சுந்தரசோழன் எனவும் பெயர்கள் உண்டு.

இவனுக்குப் பராந்தகன் தேவியம்மன், வானவன் மாதேவி என இரு மனைவியர் உண்டு.

## உத்தமசோழன் (கி.பி. 970 – 985)

முதல் கண்டராதித்த சோழனின் மகனே மதுராந்தகன் எனும் உத்தமசோழன் ஆவான். இவன் பரகேசரி என்ற பட்டத்தைப் புனைந்து கொண்டான். இம்மன்னன் காலத்தில் தொண்டை நாடும் திருமுனைப்பாடி நாடும் சோழ நாட்டுடன் இணைந்திருந்தன. இராட்டிரகூட நாடும் சுந்தரசோழன் காலத்தில் சோழ நாட்டோடு இணைக்கப்பட்டது. இவ்வேந்தன் காலத்தில் அந்நாடுகள் எத்தகைய இன்னலுமின்றி அமைதியாக இருந்தன எனக் கல்வெட்டுச் செய்திகள் வாயிலாக உணரமுடிகிறது.

உத்தம சோழனின் மனைவியர் திரிபுவனமாதேவி, மழப்பாடிதென்னவன் மாதேவி, இருங்கோளர் மகள் வானவன் மாதேவி, பழுவேட்டரையர் மகள்.

## மன்னனுக்கு உதவிய அதிகாரிகள்

சேதிநாட்டுச் சிற்றரசன் சித்தலடத்தடிகள் குலவாள முடைய அம்பலவன், பழுவூர் நக்கனான விக்கிரமசோழ மாராயன் (பெருந்தரத்து அதிகாரி). இவ்வதிகாரி கோவந்த புத்தூரிலுள்ள திருவிசய மங்கை என்ற சிவன் கோயிலைக் கற்றளியாக எடுப்பித்து நிவந்தமாக நெடுவாயில் எனும் ஊரையும் நூறுகழஞ்சு பொன்னையும் வழங்கியுள்ளான்.

## செம்பியன் மாதேவியின் பணிகள்

இவள் உத்தம சோழனின் தாயாவாள். சிறந்த சிவபக்தி யுடையவள். குழந்தையாய் இருந்த தன் ஒரே புதல்வனான உத்தம சோழனுக்காகவே உயிர் வாழ்ந்தாள். தன் கணவன் இறந்த பின் அரிஞ்சயன், சுந்தரசோழன், உத்தமசோழன் ஆகிய மூவேந்தர் ஆட்சிக் காலங்களிலும் முதல் இராசராச சோழன் ஆட்சியில் கி.பி. 1001 வரையிலும் உயிருடன் இருந்தவள். இவ்வரசி பல கற்றளிகள் எடுப்பித்து நிவந்தங்கள், அணிகலன்கள், பொன் மற்றும் வெள்ளியால் கலங்கள் செய்து தந்துள்ளாள். கோனேரிராசபுரம் என்று இன்று வழங்கப்பெறும் திருநல்லம் எனும் ஊரிலுள்ள சிவாலயத்தைக் கற்றளியாக எடுப்பித்து நாள்வழிபாட்டிற்கும் விழாக்களுக்கும் நிவந்தமாக இறையிலி நிலங்கள் அளித்துள்ளாள். அக்கோவிலுக்குத் தன் கணவன் பெயரான ஸ்ரீ கண்டராதித்தன் என்பதைச் சூட்டியுள்ளாள். அக்கோவிலுள் தன் கணவனின் படிவம் ஒன்று வைத்துள்ளாள். விருத்தாசலம், திருகோடிகா, தென்குரங்காடுதுறை, செம்பியன் மாதேவி, திருவாரூர், அரநெறி, திருவக்கரை எனும்

ஊர்களிலுள்ள சிவாலயங்களைக் கற்றளியாக எடுத்துள்ளாள். இத்தகைய சிறப்பு பெற்ற இவ்வரசியை முதல் இராசராசன் மைந்தனான முதலாம் இராசேந்திரன் செம்பியன் மாதேவி எனும் ஊரிலுள்ள திருக்கயிலாயமுடையார் கோயிலில் படிமம் ஒன்றை நிறுவி வழிபாட்டிற்கு நிவந்தம் அளித்துள்ளான்.

## முதல் இராசராசசோழன் (கி.பி. 985 – 1014)

பிற்காலச் சோழர் வரலாற்றில் முடிசூடா மன்னனாக சக்கரவர்த்தியாகத் திகழ்ந்தவன் இராசராசன். இவன் சுந்தரசோழனின் இரண்டாவது மகன் ஆவான். இவன் ஐப்பசி சதய நன்னாளில் பிறந்தவன். இராசகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான். இவன் இயற்கையிலேயே ஒப்பற்ற ஆற்றலும் நுண்ணறிவும் படைத்தவனாக விளங்கினான். இவனே விரிவான மெய்க்கீர்த்தியினை ஆண்டுதோறும் உருவாக்கினான். இவனது மெய்க்கீர்த்தியின் வாயிலாக அரசியல், நிர்வாகம், ஆட்சி, போர் பற்றிய செய்திகளை அறிந்து கொள்ள முடிகிறது.

## நடத்திய போர்கள்

இவன் ஆட்சியின் நான்காம் ஆண்டில் காந்தளூர்ச் சாலையின் மீது போர் நிகழ்த்தி வெற்றி பெற்றான். சேர மன்னன் பாஸ்கர ரவிவர்மன் சோழ தூதுவனை அவமதித்த காரணத்தினால் படையெடுத்துச் சென்று சேரனை வென்றான். போகும் வழியில் பாண்டிய மன்னன் அமரபுயங்கன் என்பவனையும் வெற்றி கொண்டு பாண்டிய நாட்டைக் கைப்பற்றினான். இராசராசனின் படை குடமலை நாட்டைத் தாக்கிற்று. குடமலை மன்னன் தோற்றோடினான். அப்போரில் துணை நின்ற மனிஜா என்பவனுக்குச் சத்திரிய சிகாமணி கொங்காள்வான் என்ற பட்டம் வழங்கப்பட்டு மாளவ்வி என்ற ஊரும் அளிக்கப்பட்டது. மனிஜாவின் மரபினர் சுமார் நூறாண்டுகள் சோழர்கட்கு அடங்கிய குறுநில மன்னர்களாகக் குட நாட்டை ஆண்டு வந்தனர். கங்கபாடியும், நுளம்பப்பாடியும் இராசராசன் படைகளால் தாக்கப்பட்டன. கங்கபாடி மைசூரின் தென் பகுதியும் சேலம் மாவட்டத்தின் வடபகுதியும் தன்னகத்தே கொண்டது. இதன் தலைநகர் தலைக்காடு என்பது. அந்நாட்டைக் குவளாலபுர பரமேசுவர்களான மேலை கங்கர்கள் ஆண்டு வந்தனர். பல்லவர்களின் ஒரு கிளையினரான நுளம்பர்கள் நுளம்பப்பாடியை ஆண்டு வந்தனர். மைசூர்ப் பகுதியைத் தன்னகத்தே கொண்ட தடிகைப்பாடியும் இராசராசன் வசமாயிற்று. ஈழத்தின் மீது போர் தொடுத்து ஈழ நாட்டையும்

கைப்பற்றினான். மேலைச் சாளுக்கிய மன்னன் இரண்டாம் தைலபன் இறந்தபின் அவனது மகன் சத்தியாசிரயன் பட்டம் ஏற்றான். அவன் சோழர்களோடு படையெடுத்துத் தோற்றோடினான். ஆகவே மேலைச்சாளுக்கிய நாடான இரட்டபாடி ஏழரை இலக்கம் சோழன் வசமாயிற்று. அதன்பின் கீழைச் சாளுக்கியர் நாடான வேங்கி நாட்டைக் கைப்பற்றி, சக்திவர்மன் என்பவனுக்கு முடி சூட்டினான். இராசராசன் கலிங்க நாடு மீது போர் தொடுத்து அதனையும் கைப்பற்றினான். முந்நீர்ப் பழந்திவு பன்னீராயிரம் தீவு மீது போர் செய்து அதனையும் தன் ஆட்சியின் கீழ்க் கொணர்ந்தான்.

## சிறப்புப் பெயர்கள்

இராசராசன், க்ஷத்திரிய சிகாமணி, இராசேந்திர சிங்கன், உய்யக் கொண்டான், பாண்டிய குலாசனி, கேரளாந்தகன், நித்த வினோதன், இராசாசிரயன், சிவபாத சேகரன், சநநாதன், சிங்களாந்தகன், சயங்கொண்ட சோழன், மும்முடிச்சோழன், இரவிகுல மாணிக்கம், நிகரிலி சோழன், சோழேந்திர சிங்கன், சோழமார்த்தாண்டன், இராசமார்த்தாண்டன், தெலுங்ககுலகாலன், கீர்த்திப் பராக்கிரமன் என்று பல பெயர்கள் உள்ளன. இராசராசனுக்கு வானவன் மாதேவி (திரிபுவன மாதேவி), சோழ மாதேவி (திரைலோக்கிய மாதேவி), பஞ்சவன் மாதேவி (அபிமான வல்லி), இலாடமாதேவி (பிருதீமாதேவி), மீனவன் மாதேவி (வீரநாராயணி), வில்லவன் மாதேவி எனப் பல மனைவியர் இருந்தனர்.

## திருப்பணிகள்

தஞ்சாவூரில் மாபெருங்கோயில் ஒன்றை எடுப்பித்து இராசராசேச்சுரம் என்று பெயரிட்டு நாள் வழிபாட்டிற்கும் விழாக்களுக்கும் நிவந்தங்கள் வழங்கிச் சிறப்பித்துள்ளான். இக்கோயில் 793 அடி நீளமும் 397 அடி அகலமும் உடையது. நடு விமானம் 216 அடி உயரம் உடையது. ஒரே கருங்கல்லால் ஆனது. விமானத்தின் மீது அமைக்கப்பட்ட செப்புக்குடம் 3083 பலம் நிறையுடையது. அக்குடத்தின் மீது போடப்பட்டுள்ள பொற்றகடு 2926 1/2 கழஞ்சு கொண்டது. வெளிச்சுற்றிலுள்ள நந்தி ஒரே கல்லில் அமைக்கப்பட்டது. இது 12 அடி உயரமும் 19 அடி நீளமும் 8 1/4அடி அகலமும் உடையது. இக்கோயிலில் சண்டேஸ்வரருக்குத் தனி சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது. இக்கோவில் பெருமான் மீது கருவூர்த் தேவர் ஒரு பதிகம் பாடியுள்ளார். இராசராசன் சிவபக்தியுடைய புறச்சமயக் காழ்ப்பில்லாதவன். நாகப்பட்டினத்தில் புத்த விகாரம் கட்டுவிக்க ஆனை மங்கலம் என்ற

ஊரை நிவந்தமாக அளித்துள்ளான். திருமாலுக்குப் பங்களூர் ஜில்லாவிலுள்ள மணலூரில் சயங்கொண்ட சோழ விண்ணகரம் என்னும் கோவிலும், தலைக்காட்டிற்கு அருகில் இரவிகுல மாணிக்க விண்ணகரம் எனும் கோவிலும் இம்மன்னனால் கட்டப்பட்டன. இக்கோவிலுக்கு இவன் தமக்கையான குந்தவை பல நிவந்தங்கள் அளித்துள்ளாள்.

இவ்வேந்தன் காலத்தில்தான் நாடு முழுமையும் அளக்கப்பெற்றது. தன் ஆட்சிக்குட்பட்ட நாடுகள் அனைத்தையும் அளந்து நிலவரியை ஒழுங்கு படுத்தி மக்களிடம் வரி வசூலிக்க மேற்கொண்ட இம்முயற்சி சிறந்ததொன்றாகும். இதனால் தான் 'உலகளந்தான்' என்ற சிறப்புப் பெயரை ஓர் அதிகாரி பெற முடிந்தது. இவ்வேந்தனே தன் ஆட்சி நன்கு நடைபெறச் சில நாடுகளையும், கூற்றங்களையும், தன்பாற்கொண்ட வளநாடு எனும் ஓர் உட்பிரிவை ஒவ்வொரு மண்டலத்திலும் அமைத்தான். இம்மன்னன் தன் பாட்டனாகிய அரிஞ்சயனையும் பெரிய பாட்டியாகிய செம்பியன் மாதேவியையும் நினைவுகூர்தற்கு அறிகுறியாக வடஆற்காடு மாவட்டத்தில் மேற்பாடி எனும் ஊரில் அரிஞ்சயேச்சுரம் என்ற கோயிலும் திருமுக்கூடலில் செம்பியன் மாதேவிப் பெரு மண்டபமும் கட்டுவித்தான். இதனைக் காணும் போது முன்னோர்களிடத்தில் அவன் வைத்திருந்த அன்பையும் மரியாதையையும் அறியமுடிகிறது.

### உதவிய சிற்றரசர்கள்

இராசராசன் ஆட்சி செம்மையாகவும் சீராகவும் அமையப் பல அதிகாரிகளும், சிற்றரசர்களும் உதவினர். அவனுடைய போர் நடவடிக்கைகளில் பல சிற்றரசர்கள் உதவி புரிந்துள்ளனர். கீழ்க்காணும் பல சிற்றரர்கள் இம்மன்னனுக்குத் திறை செலுத்தி வந்தனர்.

1. பழுவேட்டரையன் கண்டன் மறவன்.
2. கொங்கு நாட்டிலிருந்த கொல்லி மழவன் ஒற்றியூரன் பிருதி கண்டவர்மன்.
3. திருவல்லத்தின் மன்னனான திருவையன் சங்கரதேவன்.
4. கொடும்பாளூர் வேளான் சுந்தரசோழன்.
5. விஷ்ணுதேவனாகிய மும்முடி வைதும்ப மகாராசன்.
6. இலாடப்பேரரையன் புகழ்விப்பவர் கண்டன்.
7. வாணகப்பாடி அரசன் மறவன் நரசிம்மவர்மனாகிய இராசராச வாணகோவரையன்.

*அதிகாரிகள்*

சேனாபதி கிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழ பிரமமாராயன் இராசராசனின் படைத்தலைவருள் ஒருவன். மன்னன் ஆணைப்படி தஞ்சைப் பெரிய கோவிலின் திருச்சுற்று மாளிகையை எடுப்பித்தவன். இராசராசன் ஆட்சியின் பிற்பகுதியில் திருமந்திர ஓலைநாயகமாகவும் இருந்தவன்.

பரமன் மழபாடியானான மும்முடிச்சோழன் இராசராசனின் படைத்தலைவர்களுள் ஒருவன். இம்மன்னன் விரும்பியவாறு சீட்புலிநாடு, பாகிநாடு மீது போர் தொடுத்துக் கைப்பற்றித் திறைப்பொருட்களைக் கொண்டு வந்தவன். துர்க்கை கோவிலுக்குத் தொள்ளாயிரம் ஆடுகளையும் இராசராசன் பெயரில் பத்து நந்தா விளக்குகளையும் சாவாமூவாப் பேராடுகளையும் அளித்துள்ளான்.

சேனாபதி குரவன் உலகளந்தான் இராசராச மாராயனும் படைத்தலைவர்களுள் ஒருவன். அரசின் ஆணைப்படி சோழ இராச்சியம் முழுமையும் அளந்து நன்செய், புன்செய் காடுகளுக்கு ஏற்ப வரிவிதிக்கும்படி ஏற்பாடு செய்தவன். இதனால் உலகளந்தான் இராசராசமாராயன் என்ற சிறப்புப் பட்டம் பெற்றான்.

இராசராசனின் சிறிய தந்தையாகிய உத்தமசோழனின் புதல்வன் மதுராந்தகன் கண்டராதித்தன். இவன் இராசராசனின் ஆட்சிக்காலத்தில் கோயில்களைக் கண்காணித்து அங்குத் தவறிழைத்தவர்களைத் தண்டித்து, அவை நல்ல நிலையில் இயங்குமாறு பாதுகாத்து வந்த பெருமையுடையவன்.

இராசராச சோழனின் பெருந்தரத்து அதிகாரிகளுள் ஈராலிரவன் பல்லவராயன் ஆகிய மும்முடிச் சோழப் பேரரசனும் ஒருவன். தஞ்சை பெரிய கோவிலில் சண்டேஸ்வரரை எழுந்தருளுவித்து நிவந்தங்கள் பல வழங்கியவன். இம்மன்னனுக்குத் திருமந்திர ஓலை நாயகமாகவும் சில ஆண்டுகள் வரை இருந்தவன். ஆனை மங்கலச் செப்பேடுகளில் கையெழுத்திட்ட அரசியல் அதிகாரிகளுள் ஒருவன். பல்லவ குடித்தோன்றல் வழியில் வந்தவன்.

பொய்கை நாட்டுக் கிழவன் ஆதித்தன் சூரியனாகிய தென்னவன் மூவேந்த வேளான் என்பான் பொய்கை நாட்டின் தலைவன். தஞ்சைப் பெரிய கோவிலில் ஸ்ரீகாரியம் செய்து வந்தவன். சிவபெருமானிடத்தில் சிறந்த பக்தியுடையவன். இவன் இராசராசேச்சுரத்தில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், நங்கை பரவையார், மெய்ப்பொருள்

நாயனார், சிறுத்தொண்டர் முதலியோருக்குச் செப்புப்படிமங்கள் எழுந்தருளிவித்து அணிகலன் அணிவித்துள்ளான். பெரிய கோவிலில் இராசராசன், உலகமாதேவி ஆகியோரின் படிமங்கள் செய்து அணிகலன்களும் கொடுத்துள்ளான்.

பாளூர்கிழவன் அரவணையான் மாலரிகேசவன் இராசராசன் காலத்திலிருந்த அரசியல் அதிகாரிகளுள் ஒருவன். இராசராசேச்சுரத்தில் ஸ்ரீகாரியக்கண்காணி நாயகமாக இருந்தவன். இராசகேசரி நல்லூர் கிழவன் காறாயில் எடுத்த பாதம் என்பான் இராசராசனின் திருமந்திர ஓலை எழுதும் ஓர் அதிகாரி ஆவான். வேளான் உத்தம சோழனாகிய மதுராந்தக மூவேந்த வேளானும் திருமந்திர ஓலை நாயகமாக இருந்தவன். இவன் அருமொழி தேவவளநாட்டு நென்மலிநாட்டுப் பருத்திக் குடியிலிருந்த ஒரு தலைவன்.

இராசராசனின் திருமந்திர ஓலை எழுதும் அலுவலில் இருந்தவன் விளத்தூர் கிழவன் அமுதன் தீர்த்தகாரன் நாகப்பட்டினத்துப் புத்த விகாரத்திற்கு இவ்வேந்தன் ஆனைமங்கலம் எனும் ஊரைப் பற்றிச் சந்தமாக அளித்த உத்தரவை எழுதியவன் இவனேயாவான்.

இவ்வதிகாரிகள் இருந்ததினால் இராசராச சோழனின் ஆட்சி மிகச்சிறப்பாக அமைந்தது. மேலும் இம்மன்னனைப் பற்றிய வரலாறு நாடகமாக வடமொழியிலும் தமிழிலும் இயற்றப்பட்டு நடிக்கப்பட்டது.

## முதல் இராசேந்திர சோழன் (கி.பி. 1012 – 1044)

முதல் இராசராசனுக்கும் வானவன் மாதேவி எனும் திரிபுவன மாதேவிக்கும் பிறந்த புதல்வன். இவன் மார்கழித் திங்கள் திருவாதிரைநாளில் பிறந்தவன். இவன் தந்தை இவனுக்கு மதுராந்தகன் என்று பெயரிட்டிருந்தான் எனத் திருவாலங்காட்டுச் செப்பேட்டின் வழி அறிய முடிகிறது. கி.பி. 1012 ஆம் ஆண்டில் இளவரசுப் பட்டம் சூட்டிய போது இராசேந்திரன் எனும் அபிசேகப் பெயர் வழங்கப்பட்டது. இவன் பரகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான்.

### நடத்திய போர்கள்

இவன் இளவரசனாக இருந்த போதே மேலைச் சாளுக்கியரின் இடைதுறைநாடு, வனவாசி, கொள்ளிப் பாக்கை, மண்ணைக் கடக்கம்

என்பவற்றின் மீது படையெடுத்து வெற்றி பெற்றான். ஈழ நாட்டின் மீது படையெடுத்து வெற்றி பெற்றுச் சிங்கள மன்னர்களின் பரம்பரை முடியினையும் அன்னார் தேவியரது அழகிய முடியினையும், பாண்டிய மன்னன் இராசசிம்மன் சிங்கள வேந்தனிடம் அடைக்கலமாகத் தந்த பாண்டிய முடியையும், இந்திர ஆரத்தையும் கைப்பற்றினான். சேரநாட்டின் மீது படையெடுத்துப் பரம்பரைமுடியினையும், மாலையையும் கைப்பற்றிய தோடல்லாமல் பழந்தீவினையும் கைப்பற்றினான். எளிதில் நெருங்க முடியாத சாமந்தீ தீவில் பரசுராமனால் வைக்கப்பட்ட செம்பொன் முடியையும் கவர்ந்து வந்தான். பாண்டிய நாட்டில் தன் மகன் ஒருவனைச் சோழப் பிரதிநிதியாக நியமித்தான். மேலைச் சாளுக்கிய மன்னன் சயசிங்கனை முடங்கி என்னும் ஊரில் போரிட்டு வெற்றி பெற்றான்.

கங்கை கொண்ட சோழபுரம் எனும் புதிய நகரை உருவாக்கி அந்நகரைத் தூய்மைப்படுத்த வடநாட்டிலுள்ள கங்கை நீரைக் கொண்டு வரப் படையெடுத்துச் சொன்றான். அவ்வாறு வடநாடு சென்ற போது சக்கரக் கோட்டம் எனும் நகரையும், ஒட்டர தேயத்தையும், கோசல நாட்டையும் கைப்பற்றிக் கொண்டான். அதன்பின் தன்மபாலனுடைய தண்டபுத்தியும், இரணசூரனது தக்கணலாடமும், கோவிந்த சந்தனுக்குரிய வங்காள தேசமும், மகிபாலனது உத்திர லாடமும் இராசேந்திரனின் படைத்தலைவனால் கைப்பற்றப்பட்டன. தன்னிடம் இருந்த கப்பற் படையின் துணைக்கொண்டு கடார நாட்டின் மீது படையெடுத்து ஸ்ரீவிசயம், பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்காசோகம், பப்பாளம், இலிம்பங்கம், வளைப்பந்தூர், தக்கோலம், தமாலிங்கம், இலாமுரிதேசம், நக்கலாரம் ஆகிய இடங்களைக் கைப்பற்றினான்.

## சிறப்புப் பெயர்கள்

உத்தமசோழன், சோழேந்திர சிம்மன், விக்கிரமசோழன், முடிகொண்ட சோழன், பண்டித சோழன், கடாரங்கொண்டான், கங்கை கொண்ட சோழன் என்பனவாம்.

## பணிகள்

தன் தந்தையைப் போன்று கங்கை கொண்ட சோழபுரம் எனும் புதிய நகரை நிர்மாணித்து அழகிய கோவில் ஒன்றையும் கட்டுவித்தான். கங்கைகொண்ட சோழபுரத்திற்கு அண்மையில் பெரியதோர் ஏரியை உருவாக்கினான். சிதம்பரம் தாலுகாவில் வீர நாராயண ஏரியையும், சோழகங்கம் எனும் ஏரியையும் வெட்டினான். தந்தையைப் போலவே

இவனும் சிறந்த சிவபக்தனாக விளங்கினான். இம்மன்னனுக்கு முக்கோக்கிழானடிகள், அரிந்தலன் மாதேவி, வானவன் மாதேவி, திரிபுவன மாதேவி, வீரமா தேவி, பஞ்சவன் மாதேவி எனும் ஐந்து மனைவியர் இருந்தனர்.

## உதவிய அதிகாரிகள்

இராசேந்திர சோழன் ஆட்சிக் காலத்தில் குறுநில மன்னர்களும் அரசியலில் பலதுறை அதிகாரிகளும் இவனது ஆணையின்படி ஒழுகி நாட்டிற்குப் பல்லாற்றான் தொண்டு புரிந்தனர். அவர்களில் விக்கிரமசோழ சோழிய வரையனாகிய அரையன் இராசராசன் படைத்தலைவருள் ஒருவன். அரசன் ஆணைப்படி மேலைச்சாளுக்கிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்று வெற்றிக் கொடி நாட்டியவன். கீழைச் சாளுக்கிய மன்னன் விசயாதித்தன், வங்காள மன்னன் கோவிந்த சந்தன் மகிபாலன் ஆகியோருடன் போர் புரிந்து வெற்றி பெற்றான். நால்மடிவீமன், சோழசக்கரன், சாமந்தா பரணன், வீரபூஷணம், எதிர்த்தவன் காலன், வயிரி நாராயணன், வீரவிரமன் எனும் பட்டங்களைப் பெற்றவன்.

கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரமமாராயன் இராசராச சோழன் கட்டளைப்படி பெரிய கோவிலின் திருச்சுற்று மாளிகை எடுப்பித்தவன். இராசேந்திரன் ஆட்சியிலும் படைத்தலைவனாயிருந்தவன். மாராயன் அருண்மொழியான உத்தமசோழப் பிரமமாராயன், கிருஷ்ண இராமனின் புதல்வன், அரசியல் தலைவன், சோழன் ஆணைப்படி கங்கபாடிநாட்டிலுள்ள குவளாவபுரத்தில் கி.பி. 1033இல் ஒரு பிடாரி கோயில் எடுப்பித்தவன்.

ஈராயிரவன் பல்லவரையனான உத்தம சோழப் பல்லவரையன் இராசேந்திர சோழனின் பெருந்தரத்து அதிகாரிகளுள் ஒருவன். இராசராசன் காலத்திலும் உயர்நிலையிலிருந்தவன். பாண்டிய வேந்தன் பாண்டியன் சீவல்லபன் இராசேந்திரனுக்குத் திறை செலுத்திக் கொண்டிருந்த சிற்றரசன். இவன் மனைவி சோழ நாட்டிலுள்ள திருவியலூர் கோவிலுக்குப் பல அணிகலன்கள் அளித்துள்ளாள்.

இராசராச சோழனின் தங்கையான குந்தவையின் கணவன் வல்லவரையன் வந்தியத் தேவன் வட ஆர்க்காடு ஜில்லாவிலுள்ள பிரம்மதேசம் எனும் ஊரைச் சூழ்ந்த பகுதிகளை அரசாண்டவன். இவன் சோழர்களின் சிறந்த படைத்தலைவனாகவும் விளங்கியவன்.

உத்தமசோழ மிலாடுடையான் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்ட மலையமானாட்டை ஆட்சி புரிந்த குறுநில மன்னன். இவனது இயற்பெயர் பராந்தகன் யாதவ வீமன். இராசேந்திரனின் மருமகனாகிய இராசராச நரேந்திரனுக்கு உதவிபுரியும் பொருட்டு வேங்கி நாட்டிற்குச் சென்று கலிதிண்டி எனும் ஊரில் மேலைச் சாளுக்கியருடன் நிகழ்ந்த போரில் உயிர் துறந்தான்.

கங்கை கொண்ட சோழமிலாடுடையான் உத்தம சோழ மிலாடுடையானுக்குப் பின்னர் மலையமாநாட்டை ஆண்டவன். திருக்காளத்திக் கோவிலில் கார்த்திகை விளக்கிற்காக நிவந்தமாகப் பொன் வழங்கினான். இராசேந்திர சோழனுக்கு உட்பட்டிருந்த குறுநில மன்னன் ஆவான்.

கொங்கு நாட்டின் குறுநில மன்னன் மனிஜா இராசேந்திரனுக்குப் போரில் உதவி புரிந்ததால் க்ஷத்திரிய சிகாமணி கொங்காள்வான் என்ற பட்டம் பெற்றான்.

## முதல் இராசாதிராச சோழன் (கி.பி. 1018 – 1054)

முதல் இராசேந்திரனின் மூத்த புதல்வன்; பூர நாளில் பிறந்தவன். இவன் இராசகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான்.

இளவரசனாய் இருந்த போது பாண்டியர், சேரர், சிங்களர், மேலைச் சாளுக்கியருடன் போர் புரிந்து வெற்றிமாலை சூடியவன். ஈழநாட்டு மன்னர்களோடு போர்புரிந்தான். மேலைச் சாளுக்கியருடன் மூன்றாம் முறையாக இராசாதிராசன் போர் புரிந்தான். அப்போரில் யானை மீது உயிர் நீத்தான். இதனால் கல்யாணபுரமும், கொல்லபுரமும் எறிந்து யானை மேற்றுஞ்சின உடையார் விஜய ராசேந்திர தேவர் என்ற பெயர் பெற்றான்.

## சிறப்புப் பெயர்கள்

மேலைச் சாளுக்கியர்களை வென்று அவர்களின் தலைநகராகிய கல்யாணபுரத்தில் வீராபிடேகம்செய்து கொண்டு விசயராசேந்திரன் எனும் பட்டம் புனைந்து கொண்டான். இவனுடைய சிறப்புப் பெயர்கள் சயங் கொண்டசோழன், ஆகவ மல்ல குலாந்தகன், கல்யாணபுரங்கொண்ட சோழன், வீரராசேந்திரவர்மன் என்பனவாம்.

இம்மன்னனுக்குத் திரைலோக்கியமுடையாள், உலகுடை பிராட்டி என இரு மனைவியர் இருந்தனர்.

### உதவிய அதிகாரிகள்

தண்டநாயகன் அப்பிமையனாகிய இராசேந்திரசோழப் பிரமமாராயன் படைத்தலைவர்களுள் ஒருவன். கடப்பை ஜில்லாவிலுள்ள மகாழாசவாடி ஏழாயிரத்தின் சோழ அரசப்பிரதிநிதியாக ஆட்சிபுரியுமாறு மன்னனால் அனுப்பி வைக்கப்பட்டான். சேனாபதி இராசேந்திரசோழ மாவலிவாணராயன் படைத்தலைவர்களுள் மற்றொருவன். வைணவத்தில் அதிக ஈடுபாடுடையவன். புதுச்சேரிக்கு அண்மையிலுள்ள திரிபுவனியில் ஆண்டு ஒன்றிற்கு 12000 கலம் நெல் வருவாயுள்ள 72 வேலி நிலத்தைத் திருவிழாக்களும் ஒரு கல்லூரியும் நடத்துவதற்கு நிவந்தமாக வழங்கிய கொடை வள்ளல்.

சேனாபதி சயங்கொண்ட சோழ வாண கோவரையன் மற்றொரு படைத்தலைவன். தடிகைப்பாடி நாட்டில் இவ்வேந்தன் ஆட்சிக்காலத்தில் அரசப் பிரதிநிதியாக இருந்தவன். பராசிரயன் வாசுதேவ நாராயணனாகிய உலகளந்த சோழப் பிரம்மராயர் இராசாதி ராசனின் குருதேவர். சோழ நாட்டின் ஒரு பகுதி அளந்து கணக்கெடுத்தவர். தண்டநாயகன் சோழன் குமரன் பராந்தக மாராயனாகிய இராசாதிராச படைத்தலைவர்களுள் ஒருவன் நீலங்கரையன். தொண்டை மண்டலத்தின் வடபகுதியின் தலைவனாக இருந்தவன். கொங்கு நாட்டு எல்லைப்புறத்தில் தங்கியிருந்தவன் தண்டநாயகன் வெண்காடன் சங்கரனாகிய இராசாதிராசப் பல்லவராயன். படைத்தலைவருள் ஒருவனாகவும் அரசாங்க அலுவலாளருள் பெருந்தர உயர் அதிகாரியாகவும் விளங்கியவன். திருப்பைஞ்ஞீலி திருக்கோயிலைச் சார்ந்த செந்தாமரைக் கண்ணன் மடத்திற்கு அந்தணர்களையும் சிவயோகிகளையும் நாள்தோறும் உண்பித்தற்கு நிலங்கள் அளித்துள்ளான்.

## இரண்டாம் இராசேந்திர சோழன் (கி.பி. 1051 – 1063)

முதலாம் இராசேந்திரனின் இரண்டாவது புதல்வன். தன் தமையன் இராசாதிராசன் கொப்பத்துப் போரில் 1054இல் இறந்தவுடன் போர்க்களத்தில் சோழச் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொண்டான். பரகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான்.

இளவரசனாக இருக்கும் போதே பல்வேறு போர்களில் ஈடுபட்ட அனுபவம் உண்டு. மேலைச் சாளுக்கியப் போர், ஈழநாட்டுப் போர்,

இரண்டாம் மேலைச் சாளுக்கியப் போர் என்பன குறிப்பிட்டுச் சொல்லக் கூடியவையாகும்.

கிழானடிகள், திரைலோக்கியமுடையாள் இருவரும் மனைவியர் ஆவர்.

### உதவிய அதிகாரிகள்

1. மிலாடுடையான், நரசிங்கவர்மன், (குறுநிலமன்னன்).
2. சயங்கொண்ட சோழ பிரமாதிராசன் (படைத்தலைவன்).
3. ஜயமுரிநாடாழ்வான் (படைத்தலைவன்) ஈழநாட்டின் சோழப் பிரதிநிதி.
4. உதயதிவாகரன் கூத்தாடியரான் வீரராசேந்திர மழவராயன் (உடன்கூட்ட அதிகாரி அரசாங்க உத்தரவுகளில் கையெழுத்திடுபவன்).
5. அரையன் கடக்கங் கொண்ட சோழன் இராசராச அணிமுரி நாடாழ்வான், (படைத்தலைவன்).
6. பஞ்ச நதிவாணனாகிய மதுராந்தகத் தமிழ்ப் பேரரையன் (தலைவன், தண்ட நாயகருக்குக் கங்கநாட்டில் சோழப் பிரதிநிதியாக ஆட்சி செய்தவன்).
7. வேளாளக் கூத்தன் ஆகிய செம்பியன் மூவேந்த வேளான் அரசியல் அதிகாரி.

## வீரராசேந்திர சோழன் (கி.பி. 1063 – 1070)

இம்மன்னனும் முதலாம் இராசேந்திரனின் புதல்வனேயாவான். இவன் இராசகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான்.

### நடத்திய போர்கள்

மேலைச் சாளுக்கிய மன்னனான ஆகவமல்லனோடு போர் புரிந்து வெற்றி பெற்றான். மேலைச் சாளுக்கிய மன்னன் கீழைச்சாளுக்கிய வேந்தனுடன் முதலாம் இராசேந்திரனின் மருமகனுமான இராசராச நரேந்திரன் இயற்கை எய்தியதை அறிந்து கீழைச் சாளுக்கியருடன் போர் தொடுத்தான். இதனையறிந்த வீரராசேந்திரன் மேலைச்சாளுக்கியரோடு போர் புரிந்து அம்மன்னனின் தண்டநாயகன் சாமுண்டராயனைக் கொன்றான். இது மேலைச் சாளுக்கியரோடு நடத்திய இரண்டாவது போராகும். பொத்தப்பி வேந்தனையும், கேரளனையும் ஜனநாதன்

தம்பியையும் பாண்டியன் சீவல்லபன் மகன் வீரகேசரியையும் போரில் கொன்றான் என்று நான்காம் ஆண்டுக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. ஈழ மன்னன் விசயபாகு தன் நாட்டை மீட்பதற்காகச் சோழர்களுடன் போர் புரிந்தான். இதனையறிந்த வீரராசேந்திரன் பெரும் படை திரட்டிச் சென்று விசயபாகினைப் புறமுதுகிட்டோடச் செய்து அவனது மனைவியைச் சிறைபிடித்து அளவற்ற செல்வத்துடன் நாடு திரும்பினான்.

## சிறப்புப் பெயர்கள்

சகல புவனாசிரயன், ஸ்ரீமேதினி வல்லவன், மகாராசாதிராசன், பரமேசுவரன், பரமபட்டாரகன், இரவிகுலதிலகன், சோழகுலசேகரன், பாண்டிய குலாந்தகன், ஆகவ மல்லகுலகாலன், ஆகவமல்லனை ஐயம்மடிகொண்ட கண்டராசசேகரன், இராசாசிரயன், இராசராசேந்திரன், வீரசோழன், கரிகாலச்சோழன், வீரன், இரட்டராசகுலகாலன் என்பன. உலகமுழுதுடையார், அருமொழி நங்கை மனைவியர் ஆவர்.

## உதவிய அதிகாரிகள்

1. தன்பாலன் (படைத்தலைவருள் ஒருவன்)
2. வீரராசேந்திர தன்மபாலன் (படைத்தலைவருள் ஒருவன்)
3. மூவேந்த வேளான் (அரசியல் அதிகாரி)
4. சயசிங்ககுலகால விழுப்பரையன் (அரசியல் அதிகாரி)
5. வீரராசேந்திர காரணை விழுப்பரையன் (படைத் தலைவன்)
6. வீரராசேந்திர பிரமாதிராசன் (உடன்கூட்ட அதிகாரி)
7. வானவன் பல்லவரையன் (திருமந்திர ஓலை நாயகம்).

## அதிராசேந்திர சோழன் (கி.பி. 1070)

இவ்வேந்தன் வீரராசேந்திரனின் புதல்வன் என்பர். இவன் பரகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான். வீரராசேந்திரன் இறப்பதற்கு முன் தன் மகனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டியிருந்தான். இவன் ஆட்சிப் பொறுப்பேற்ற மூன்றாண்டுகளில் நோய் வாய்ப்பட்டு இறந்து விட்டான் என்பர். இவன் எந்தப் போரிலும் ஈடுபடவில்லை. இவனது பட்டத்தரசி உலகமுழுதுடையாள் என்று மட்டுமே கூறப்படுகிறது.

### உதவிய அதிகாரிகள்

1. ஆதித்த தேவனான இராசராசேந்திர மூவேந்த வேளான் (அரசியல் அதிகாரி, அறநிலையங்களைக் கண்காணித்து வந்தவன்).

2. இராசராசன் பரநிருப இராக்கதனான வீரசோழ இளங்கோவேளான் (படைத்தலைவர்களுள் ஒருவன்)
3. இராசராசன் சயங்கொண்ட சோழனான சேனாபதி இருக்குவேள் (படைத்தலைவன்).

### முதற்குலோத்துங்கன் (கி.பி. 1070 – 1120)

அதிராசேந்திரனுக்குப் புதல்வர்கள் இல்லாத காரணத்தால் சோழர்களின் பரம்பரை மன்னர் ஆட்சி மறைந்தது. ஆனால் கீழைச் சாளுக்கியருடன் சோழ மன்னர்களின் மணவினை தொடர்பு வைத்திருந்தனர். அந்த வகையில் முதலாம் இராசேந்திரனின் பெயரனான இராசேந்திரன் என்பவன் சோழ நாட்டுச் சக்கரவர்த்தியாக இராசகேசரி என்ற பட்டம் புனைந்து ஆட்சி புரியத் தொடங்கினான். அப்போது குலோத்துங்கன் என்ற அபிடேக பெயர் சூட்டப்பட்டது. இவன் ஆட்சியில் அதிகப் போரின்றி நிம்மதியாக மக்கள் வாழ்ந்தனர்.

### நடத்திய போர்கள்

இவனது இளம் வயதில் சக்கரக் கோட்ட மண்டலத்தில் ஆட்சி புரிந்து கொண்டிருந்த தாராவர்ஷன் எனும் வேந்தனைப் போரில் வென்று வாகை சூடி வயிராகரம் என்ற ஊரில் எண்ணிறந்த யானைகளைக் கைப்பற்றினான் என இவனது மெய்க்கீர்த்திகள் கூறுகின்றன. இவனது மாமன் வீரராசேந்திரன் மேலைச் சாளுக்கியருடன் போர் புரிந்த போது அவருடன் இணைந்து போரில் ஈடுபட்டான். மேலைச் சாளுக்கிய மன்னன் ஆறாம் விக்கிரமாதித்தனுடன் போர் செய்து புறமுதுகிடச்செய்தான். அதி ராசேந்திரனின் இறப்புச் செய்தி பாண்டிய, சேரர்களுக்கு வந்து சேரவே அந்நாட்டு மன்னர்கள் விடுதலை பெற விழைந்தனர். இதனால் அவர்களை அடக்க குலோத்துங்கன் போர் புரிய நேரிட்டது. அப்போரில் பாண்டிய மன்னர் ஐவர் புறங்காட்டி ஓடி ஒளிந்தனர். சேர மன்னனும் குலோத்துங்கனின் வீரத்திற்குத் தலை வணங்கித் திறை செலுத்தும் சிற்றரசனாக ஒப்புக் கொண்டான். தென்

கலிங்கத்தின் மீது போர் செய்து வெற்றி கொண்டான். வடகலிங்க வேந்தனாகிய அனந்தவர்மனுடன் போரிட்டு அந்நாட்டையும் கைப்பற்றினான்.

### பணிகள்

குலோத்துங்கன் சீன நாட்டுடன் வாணிபத் தொடர்பு கொண்டான். மேலும் 72 பேரடங்கிய ஒரு குழுவினர் சோழ நாட்டிலிருந்து சீன நாட்டிற்குத் தூது சென்றனர். கடார மன்னனுடன் நட்புரிமை பூண்டு வாணிகத் தொடர்பை ஏற்படுத்தினான். கம்போடியா நாட்டு மன்னன் குலோத்துங்கனுக்குக் காட்சிப் பொருளாக ஒரு கல்லைக் கொடுத்தான். அதனைத் தில்லைச் சிற்றம்பலத்திலுள்ள திருவெதிரம்பலத்தில் வைத்தான். அந்நாட்டோடும் வாணிபத் தொடர்பினை ஏற்படுத்தினான். கன்னோசி மன்னருடன் நெருங்கிய உறவு கொண்டு நட்பு பூண்டான். குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில் சுங்க வரியை நீக்கினான். இதனால் சுங்கம் தவிர்த்த சோழன் எனப் பாராட்டப் பட்டான். இவனது ஆட்சிக் காலத்திலும் சோழ நாடு முழுமையுள்ள விளை நிலங்களின் பரப்பு அளக்கப்பட்டு உரிய வரி நிர்ணயிக்கப்பட்டது. தன் முன்னோர்கள் போல் சைவ சமயத்தில் அதிக ஈடுபாடுடையவன். ஆனாலும் பிற சமயங்களை வெறுப்பதில்லை. வைணவ, பௌத்த கோயில்களுக்கு நிவந்தங்கள், இறையிலி நிலங்கள் அளித்துள்ளான்.

### குலோத்துங்கனுக்கு உதவியோர்

1. மலையமான்கள் - சேதிநாட்டுக் குறுநில மன்னர்கள் - கிளியூர்.
2. தகடூர் அதியமான் - அதியமான் மரபினர் - கொங்குநாட்டு வடபகுதி கங்க நாட்டின் தென்பகுதியினை ஆண்ட குறுநில மன்னர்கள்.
3. சீயகங்கன் (குறுநில மன்னன்)
4. பாண்டியன் ஸ்ரீவல்லபன் - (பாண்டிய மன்னன்)
5. கேரள கேசரி அதிராசாதி ராச தேவர் (சேர மரபினர்)
6. வெலநாட்டுத் தலைவனாகிய முதலாங்கொங்கன் (ஆந்திர தெலுங்கர் தலைவன்)
7. பொத்தப்பி காமதேவ சோட மகாராஜன் (தெலுங்கு குறுநில மன்னன்)
8. மகாமண்டலேசுவரன் சூரப்பராஜன் (தெலுங்கு நாட்டை ஆண்ட பல்லவ குலத் தலைவன்)

9. மதுராந்தக பிரமாதி ராஜன் (படைத்தலைவன்)
10. வீரசிகாமணி மூவேந்த வேளான் (அரசியல் அதிகாரி)

### விக்கிரமசோழன் (கி.பி. 1118 – 1136)

முதற் குலோத்துங்கனின் புதல்வன். இளம் பருவத்தில் வேங்கி நாட்டில் அரசப்பிரதிநிதியாக இருந்து ஆட்சி புரிந்து வந்தவன். கி.பி. 1118 இல் சோழ நாட்டில் இளவரசுப் பட்டம் சூட்டப்பட்டுத் தந்தைக்கு உதவி புரிந்து வந்தவன். இவனது தமையன்மார்களான இராசராச சோழ கங்கன், இராசராச மும்முடிச்சோழன், வீரசோழன் ஆகியோர் தந்தையின் ஆட்சிக் காலத்திலேயே இறந்தனர் எனலாம். இவன் பரகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான்.

இம்மன்னனது ஆட்சிக் காலத்தில் தொண்டை நாட்டிலும் நடு நாட்டிலும் பெரு வெள்ளம் ஏற்பட்டுக் கொடிய பஞ்சம் நிலவியது எனக் கல்வெட்டுச் செய்திகள் குறிப்பிடுகின்றன. இவனது ஆட்சியில் பெரும் போர்கள் இன்மையால் மக்கள் மகிழ்ச்சியோடு வாழ்ந்தனர். விக்கிரம சோழனின் அவைக்களப் புலவர் ஒட்டக்கூத்தர் ஆவார். இவர் மூவருலா என்ற சிறப்பான இலக்கியம் படைத்துள்ளார்.

### பணிகள்

திருவிடைமருதூர் கோவிலுக்கு இறையிலி நிலம் அளித்துள்ளான். தில்லையில் சிவபெருமானுக்குப் பல திருப்பணிகள் செய்துள்ளான். திருச்சுற்று மாளிகை, கோபுர வாயில், கூடசாலை, பலிபீடம் என்பவற்றிற்குப் பொன் வேய்ந்து முத்து வடங்கள் கொண்டு அலங்கரிக்கச் செய்துள்ளான். இறைவன் திருஅமுதிற்காகப் பொற்கலங்கள் வழங்கியுள்ளான். தில்லையில் நூற்றுக்கால் மண்டபம் கட்டுவித்துள்ளான்.

இவனுக்கு முக்கோக்கிழானடிகள், தியாகபதாகை நேரியன் மாதேவி என்ற மூன்று மனைவியரும், இரண்டாம் குலோத்துங்கன் என்ற மகனும் இருந்தனர்.

### உதவிய அதிகாரிகள் மற்றும் சிற்றரசர்கள்

1. கருணாகரத் தொண்டைமான் (படைத்தலைவன்)
2. முனையர்கோன் (அமைச்சர்களில் ஒருவன்)
3. மறையோன் கண்ணன் (அமைச்சர்களில் ஒருவன்)
4. சோழகோன் (படைத்தலைவன்)
5. வாணன் (படைத்தலைவன்)

6. கலிங்கர் கோன் (படைத்தலைவன்)
7. செஞ்சியர்கோன் காடவன் (குறுநிலமன்னன்) பல்லவ குலம்
8. வேணாடர் வேந்து (குறுநில மன்னன்)
9. அனந்த பாலன் (அரசியல் அதிகாரி)
10. அதிகன் (குறுநில மன்னன்)
11. சேதி திருநாடர் (குறுநில மன்னன்)
12. வத்தன் (படைத்தலைவன்)

## அரசியல் அதிகாரிகள்

1. விராடராசன் (அதிகாரி)
2. மானசேகரன் (அமைச்சருள் ஒருவன்)
3. மாதவராயன் (அரசியல் அதிகாரி)
4. வளவன் பல்லவரையன் (அரசியல் அதிகாரி)
5. இராசேந்திரன் சோழ சம்புவராயன் (தொண்டை மண்டல அரசப் பிரதிநிதி)
6. துவராபதி (வாட்படைத்தலைவன்)

## ஆந்திர நாட்டுக் குறுநில மன்னர்கள்

1. பொத்தராசன் (பொத்தப்பிநாடு)
2. மதுராந்தகப் பொத்தப்பி சோழன் (பொத்தப்பி நாடு)
3. கன்னர தேவனாகிய இராசேந்திர பொத்தப்பி சோழன் (பொத்தப்பி நாடு)
4. மகாமண்டலேசுவரன் நம்பயன் (வேங்கிநாடு)
5. இராசேந்திர சோழ கங்கராயன் (வெலநாண்டு நாடு)
6. விக்கிரமசோழ கருப்பாறுடையான் (புடோலி நாடு)

## இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி. 1133 – 1150)

விக்கிரம சோழனின் புதல்வனான இரண்டாம் குலோத்துங்கன் தன் தந்தை இறந்தபின் இராசகேசரி எனும் பட்டம் புனைந்து சோழ அரியணை ஏறினான். இவன் ஆட்சிக் காலத்தில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி எதுவும் நிகழவில்லை எனக் கூறப்படுகிறது.

### பணிகள்

இவனது ஆட்சிக்காலத்தில் தில்லையம்பதியில் பல மண்டபங்கள் கட்டுவித்து நகரைச் சிறப்பித்தான். சிற்றம்பலத்தைப்

பொன்னாலும் பல்வகை மணிகளாலும் அலங்கரித்தான். பேரம்பலத்தையும் உட்கோபுரத்தையும் திருச்சுற்று மாளிகையையும் மாமேரு போல் பொன்மயமாக்கினான். விழா நாட்களில் உலா வரும் தேரைப் பொன்னாலும் மணியாலும் அலங்கரிக்கச் செய்தான். நாற்புறமும் கூடாரங்களோடு திகழும் திருக்குளம் ஒன்று கட்டினான். தில்லைச் சிற்றம்பலத்திற்கு இடம் போதாததால் திருமால் மூர்த்தத்தைப் பெயர்த்தெடுத்து அலைகடலில் கிடக்கும்படிச் செய்தான் என்று ஒட்டக்கூத்தர் தனது மூவருலாவில் குறிப்பிட்டுள்ளார்.

## சிறப்புப் பெயர்கள்

அபயன், அனபாயன், எதிரிலிப் பெருமாள், கலிகடிந்த சோழன், திருநீற்றுச் சோழன், பெரிய பெருமாள் என்ற சிறப்புப் பெயர்கள் வழங்கப்பட்டன. மேலும் ஒட்டக்கூத்தர் இவனது பெயரில் ஓர் உலா இலக்கியமும், பிள்ளைத்தமிழ் இலக்கியமும் இயற்றியுள்ளார். அந்நூல்களில் துரக வித்தியா விநோதன், விநோதன், நித்தியகீதப் பிரமோகன், ஞான கெம்பீரன் போன்ற சிறப்புப் பெயர்களைக் கூறியுள்ளார். இவன் அசுவசாத்திரம், தனுர்சாத்திரம், இசை முதலியவற்றில் வல்லவனாக இருந்துள்ளான்.

இம்மன்னனுக்குத் தியாகவல்லி (புவன முழுதுடையாள் - பட்டத்து அரசி), முக்கோக்கிழானடி மலார்குலமணி விளக்கு - (சேதிநாட்டுக் குறுநில மன்னனின் மகள்) எனும் இரு மனைவியர் உண்டு.

கி.பி. 1146இல் தன் புதல்வன் இரண்டாம் இராசராசனுக்கு இளவரசுப் பட்டம் கட்டி அரசியலில் ஈடுபடச் செய்தான்.

## துணைநின்றோர்

1. அம்மையப்பன் கண்ணுடைய பெருமாள் (தொண்டை மண்டல சிற்றரசன் (பல்லவர் குலம்))
2. ஏழிசை மோகன் (அரசாங்க அதிகாரி)
3. இராசராசன் (மகதை ஆண்ட குறுநில மன்னன், நாடு காவல் அதிகாரி)
4. குலோத்துங்க சோழ யாதவராயன் (சேதிநாட்டுக் குறுநில மன்னன்)
5. சீயகங்கன் (கங்கநாட்டு குறுநில மன்னன்)
6. அதியமான் (தகடூர் சிற்றரசன்)
7. மதுராந்தகன் (தெலுங்கு குறுநில மன்னன்)

## இரண்டாம் இராசராசன் (கி.பி. 1146 – 1163)

இரண்டாம் குலோத்துங்கன் இறந்த பின் அவன் புதல்வனாகிய இரண்டாம் இராசராசன், பரகேசரி என்ற பட்டம் புனைந்து சோழ வேந்தனாக அரியணை ஏறினான். இம்மன்னனின் ஆட்சி வேங்கிநாடு, கொங்குநாடு, கங்க நாடு ஆகியவற்றில் பரவியிருந்தது. தன் தந்தையைப் போலவே போர்களில் ஈடுபடாமல் நாட்டு மக்களுக்கு நன்மைகள் செய்து வந்தான் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. தன் தந்தையைப் போன்று இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழிலும் புலமை பெற்றிருந்தான். தன் தந்தையைப் போன்றே சிவபெருமானிடம் பக்தி கொண்டிருந்தான். இவ்வேந்தன் ஆட்சிக் காலத்தில் மலையமலைப் பக்கத்தில் காவிரியாறு அடைப்புண்டு கிழக்கு நோக்கித் தண்ணீர் வராமல் தடைப்படவே சோழ நாடு வளம் சுருங்கிற்று. இதனையறிந்த மன்னன் அம்மலையை நடுவில் வெட்டிக் காவிரியாற்றிற்கு வழி கண்டு சோழநாட்டிற்குத் தண்ணீர் கொணர்ந்தான் எனத் தக்கயாகப் பரணி வாயிலாக அறிய முடிகிறது.

### பணிகள்

பழையாறை நகரில் இராசராசேச்சுரம் என்ற சிவாலயம் ஒன்று எடுப்பித்தான். இக்கோயில் சிறந்த சிற்பத்திறன் கொண்டு விளங்குகிறது. 63 நாயன்மார்களின் படிமங்களும், திருச்சுற்று மாளிகையின் வடபுறத்தில் சைவாசிரியர் நூற்றெண்மர் படிமங்களும், திருமண்டபம் ஒன்றும் எடுப்பித்துள்ளான்.

### சிறப்புப் பெயர்கள்

இம்மன்னனுக்குச் சோழேந்திர சிங்கன், தெய்வப் பெருமாள், கண்டன், சொக்கப் பெருமாள், இராச கம்பீரன் என்ற சிறப்புப் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

இம்மன்னனுக்குப் புவனமுழுதுடையாள், தரணி முழுதுடையாள், அவனி முழுதுடையாள், தென்னவன் கிழானடி என நான்கு மனைவியர் உண்டு.

### அரசு அதிகாரிகள்

1. மலையமானாட்டுக் குறுநில மன்னர்கள்
2. மோகன் (நாடு காவல் அதிகாரி)
3. பல்லவராதித்தன் (கங்க நாட்டின் சோழப் பிரதிநிதி)

4. சம்புவராயர்கள் (நாடு காவல் அதிகாரி)
5. முத்தரையன் (நாடு காவல் அதிகாரி)
6. கடம்பராயன் (அரசியல் அதிகாரி)
7. திருச்சிற்றம்பல உடையான் (படைத்தலைவன் பல்லவராயன் என்ற பட்டம்)

## இரண்டாம் இராசாதிராச சோழன் (கி.பி. 1163 – 1178)

இரண்டாம் இராசராசனுக்குப் புதல்வன் இல்லாத காரணத்தால் தன் தாயத்தினருள் ஒருவனாகிய நெறியுடைப் பெருமாளின் புதல்வன் எதிரிலிப் பெருமாளைக் கங்கை கொண்ட சோழபுரத்திற்கு வரவழைத்து இளவரசுப் பட்டம் கட்டி அரசியலில் ஈடுபடச் செய்தான். மன்னன் இறந்தவுடன் இராசாதிராசன் என்ற அபிடேகப் பெயரைச் சூடிச் சோழ அரியணை ஏறினான். இம்மன்னன் விக்கிரம சோழனின் பேரன் என்பர். இவன் இராசகேசரி என்ற பட்டம் புனைந்து கொண்டான்.

### போர்

இம்மன்னன் ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டில் தாயாதிச் சண்டை நடைபெற்றது. குலசேகர பாண்டியனுக்கும் பராக்கிரம பாண்டியனுக்கும் உரிமை காரணமாகப் பகையுண்டாயிற்று. குலசேகரப் பாண்டியனுக்குப் பரிந்து கொண்டு சோழ மன்னன் தன்படைகளை அனுப்பியுதவினான். பராக்கிரம பாண்டியனுக்கு ஈழ வேந்தன் உதவி புரிந்தான். இந்தப்போரில் சோழப்படை வெற்றி கண்டது. இதனால் குலசேகர பாண்டியன் பாண்டிய மன்னனானான். ஆனால் ஈழ மன்னனுடன் நட்புறவும் மணவினையும் கொண்டதால் சோழ மன்னன் சினமுற்றுத் தன் அமைச்சர் அண்ணன் பல்லவரையன் தலைமையில் பாண்டிய நாட்டின் மீது போர் தொடுக்க ஏவினான். அப்போரில் குலசேகரனைப் புறமுதுகிட்டோடச் செய்து பராக்கிரம பாண்டியனின் மகனான வீரபாண்டியனுக்கு நாட்டை அளித்துச் சோழநாடு திரும்பினான்.

### சிறப்புப் பெயர்கள்

கரிகால் சோழன், மதுரையும் ஈழமும் கொண்ட கோஇராசகேசரி வர்மன் என்ற சிறப்புப் பெயர்கள் உண்டு. புவன முழுதுடையாள் என்ற முக்கோக்கிழானடிகள் மனைவி ஆவாள்.

### அரசு அதிகாரிகள்

1. திருச்சிற்றம்பலமுடையான் (நாடுகாவல் அதிகாரி)
2. அரச நாராயணன் (நாடு காவல் அதிகாரி)

3. அம்மையப்பன் அண்ணன் பல்லவரையன் (அமைச்சர்)
4. கருணாகரதேவனான அமரகோன் (அரசாங்க உயர் அதிகாரி)
5. எதிரிலி சோழ சம்புவராயன் (நாடு காவல் அதிகாரி) (பல்லவ மரபினன்))
6. கண்டர்சூரியன் சம்புவராயன் (நாடுகாவல் அதிகாரி)
7. சேந்தன் ஆதித்தன் (நாடு காவல் அதிகாரி)

## மூன்றாம்குலோத்துங்க சோழன் (கி.பி. 1178 – 1218)

இம்மன்னன் இரண்டாம் இராசராசனின் புதல்வனாய் இருத்தல் வேண்டும். இவன் பரகேசரி என்ற பட்டம் புனைந்து சோழ அரியணை ஏறினான். குலசேகரபாண்டியன் இறந்தபின் அவனது மகன் விக்கிரம பாண்டியன் குலோத்துங்கனை நாடி அடைக்கலம் புகுந்து தன் தந்தையிழந்த நாட்டை மீட்டுத்தருமாறு வேண்டினான். வீரபாண்டியனும் இராசாதிராசன் செய்த நன்றியை மறந்து ஈழ மன்னனுடன் சேர்ந்து கொண்டு சோழ நாட்டின் பகைவனாக மாறினான். இதனால் குலோத்துங்கன் பாண்டிய நாட்டின் மீது போர் தொடுக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

## போர்

பாண்டியநாடு, சேரநாடு, ஈழநாடுகளுடன் குலோத்துங்கன் போரிட்டு வெற்றி பெற்றான். பாண்டிய நாட்டின் ஒரு பகுதியை விக்கிரம பாண்டியனுக்கு அளித்துத் தனக்குத் திறை செலுத்தி வருமாறு பணித்தான். வீரபாண்டியனும் சேர நாட்டிற்குத் தப்பி ஓடி அம்மன்னனுடன் குலோத்துங்கனிடம் அடைக்கலம் நாடி வந்து பாண்டிய நாட்டின் ஒரு பகுதியை மீண்டும் பெற்று ஆட்சி புரியலாயினான். இவனது ஆட்சியில் சேரநாடு, பாண்டி நாடு, கொங்குநாடு, கங்க நாடு, தெலுங்கு நாடு போன்ற நாடுகள் சோழ நாட்டிற்குக் கீழ் இருந்தன.

இம்மன்னன் சைவ சமயத்தின்பால் ஈடுபாடு கொண்டிருந்தான். திருவாரூர் கோயிலுக்கு இறையிலி நிலங்கள் வழங்கினான். தில்லையம்பதியில் பேரம்பலம் பொன்வேய்ந்தான். திருவாரூரில் சபாமண்டபமும் பெரிய கோபுரமும் கட்டுவித்தான். திருமால் கோவிலுக்குக் குலோத்துங்க சோழ விண்ணகரம் என்று தன் பெயர் வைத்துக் குலோத்துங்க சோழ நல்லூர் என்ற ஊரையும் நிவந்தமாக அளித்தான்.

### மனைவியர்

இம்மன்னனுக்குப் புவனமுழுதுடையாள், இளைய நம்பிராட்டியார் என இரு மனைவியர் இருந்தனர்.

### சிறப்புப் பெயர்கள்

வீரராசேந்திரன், முடி வழங்கு சோழன், சோழ கேரள தேவன், திரிபுவன வீரதேவன், முடித்தலை கொண்ட பெருமாள், உலகுடைய நாயனார், இராசாக்கள் தம்பிரான், உலகுய்ய வந்த நாயனார், தனி நாயகன் என்பனவாகும்.

### அதிகாரிகள்

1. இராசராசசேதிராயன் (குறுநில மன்னன்)
2. வானிலை கண்ட பெருமாள் (நாடுகாவல் அதிகாரி, - குலோத்துங்கனின் மருமகன்),
3. கரிகாலச்சோழ ஆடையூர் நாடாழ்வான் (குறுநில மன்னன்)
4. இராசராசதேவன் (அதியன் மரபினன்)
5. வீரசேகரக் காடவராயன் (பாடிகாவல் அதிகாரி)
6. விடுகாதழகிய பெருமாள் (குறுநில மன்னன், அமராபரண சீயகங்கன் (கங்க மரபினன்))
7. கண்டர் சூரியன் (சம்புவராயன் - பல்லவகுலம்) (படைத்தலைவன் - வாணர் குலம்)
8. ஏகவாசகன் (அரசியல் அதிகாரி)
9. மகதை பெருமாள் - வாணர்குல சிற்றரசன் - குலோத்துங்கனின் படைத்தலைவன்)

### மூன்றாம் இராசராசசோழன் (கி.பி. 1216 – 1256)

மூன்றாம் குலோத்துங்கன் இறந்தவுடன் அவன் மகன் மூன்றாம் இராசராசன் இராசகேசரி என்ற பட்டம் புனைந்து அரசுப் பொறுப்பை ஏற்றான். இவனது ஆட்சிக் காலத்தில் சோழ நாடு பல்வகைத் துன்பங்களுக்குள்ளாகிச் சீரும் சிறப்பும் இழந்தது. இவனுடைய முன்னோர்களின் பேராற்றல் இம்மன்னனுக்கு இல்லாமையே வீழ்ச்சிக்கு முதற்காரணம் ஆகும். வடமேற்கே ஒய்சாளரும், தெற்கே பாண்டியரும் வலிமை பெற்றுத் தம் பேரரசை நிறுவப் பெரும் முயற்சி மேற்கொண்டு அதில் ஓரளவு வெற்றியும் பெற்றனர். வடகிழக்கே நெல்லூர்ப் பக்கத்தில் ஆட்சி புரிந்து வந்த தெலுங்குச் சோழர்கள் காகதீயரை உற்ற நண்பராகவும் உறவினராகவும் கொண்டு வலிமை எய்தினர். மகதநாட்டு வாண

கோவரையர், திருமுனைப்பாடி காடவராயர் முதலான குறுநில மன்னர்கள் சுயேட்சை அரசை நிறுவ முயன்றனர். இத்தகைய நெருக்கடிகளைச் சமாளிக்க இம் மன்னனால் இயலவில்லை.

### பாண்டிய மன்னனின் போர்

பாண்டிய நாட்டில் மாறவர்மன் சுந்தரபாண்டியன் பட்டம் ஏற்றபின்பு சோழநாட்டின் மீது படையெடுத்து வந்தான். இப்போரில் மூன்றாம் இராசராசன் தோல்வியுற்றான். பாண்டிய மன்னன் பழையாறை நகருக்குச் சென்று வீராபிடேகம்செய்து கொண்டான். இராசராசனுக்கு வெற்றி கொண்ட சோழநாட்டின் ஒரு பகுதியைக் கொடுத்துத் திறை செலுத்தி வருமாறு செய்தான். சிறிது நாட்களுக்குப் பிறகு சோழ மன்னன் திறை கொடுக்க மறுக்கவே மீண்டும் பாண்டிய மன்னன் மாறவர்ம சுந்தர பாண்டியன் இரண்டாம் முறையாகச் சோழ நாட்டின் மீது படையெடுத்தான். அதில் பாண்டியன் வெற்றி பெற்றுச் சோழ மன்னனைச் சிறை பிடித்தான். இறுதியில் போசள மன்னனால் விடுவிக்கப்பட்டான். இம்மன்னனின் இறுதிக்காலத்தில் உள்நாட்டுக் குழப்பங்கள் அதிகரிக்கத் தொடங்கின. இவன் ஆட்சிக்குட்பட்டிருந்த சம்புவராயர்கள், வாணகோவரையன், பல்லவ மரபினர் ஆகியோர் இம்மன்னன்பால் பகைமை கொண்டு அடிக்கடிப் போர் செய்து உள்நாட்டுக் குழப்பங்களை உருவாக்கினர். இதனால் பேரரசு சிறிது சிறிதாக வீழ்ச்சியடையத் தொடங்கியது.

### மூன்றாம் இராசேந்திர சோழன் (கி.பி. 1246 – 1279)

இவன் மூன்றாம் இராசராச சோழனின் புதல்வன். பரகேசரி என்ற பட்டம் புனைந்து ஆட்சிப் பீடத்தில் அமர்ந்தான். மாறவர்மன் சுந்தர பாண்டியனால் தன் தந்தைக்கு நேர்ந்த அவமானத்தை நேரில் கண்ணுற்றதினால் அதனை நீக்கத் தக்க தருணம் பார்த்திருந்தான். இவன் பேராற்றல் படைத்த பெரு வீரனாகவும் விளங்கினான். மாறவர்மன் சுந்தர பாண்டியன் கி.பி. 1238 இல் இறந்தான். அதன்பின் அவன் மகன் இரண்டாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் சில திங்களே ஆட்சி செய்துவிட்டு இறந்து போனான். அவன் மகன் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் பட்டம் ஏற்றான். அவன் சிறந்த வீரன் அல்லன். இதனையறிந்த மூன்றாம் இராசேந்திரசோழன் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வெற்றி பெற்றான்.

போசள வேந்தனாகிய வீரநரசிம்மன் இறக்கவே அவனது மகன் வீரசோமேசுவரன் பட்டம் ஏற்றான். இவன் பாண்டிய மன்னன் இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனுக்கு உதவி செய்து இழந்த

நாட்டை மீட்டுக் கொடுத்தான். உள்நாட்டில் குழப்பம் விளைத்த சிற்றரசர்களை அடக்க வேண்டும் என்பதற்காகத் தனது தெலுங்குச் சோழ நண்பனான கண்டகோபாலனுக்குக் காஞ்சிபுரம் சுற்றியுள்ள தொண்டை மண்டலத்தை விட்டுக் கொடுத்தான் மூன்றாம் இராசேந்திரன். மாவிலங்கை குறுநில மன்னர்களான சம்புவரையர்களுடன் சோழ மன்னன் போரிட்டு வெற்றி பெற்றான். இம்மன்னனின் ஆட்சியின் இறுதிக் காலத்தில் கங்கநாடு, வேங்கி நாடு, தொண்டை மண்டலம், பாண்டியநாடு, சேரநாடு இவையெல்லாம் விடுதலை பெற்றுவிட்டன. சோழநாடு மட்டுமே இவனது ஆளுகையின் கீழ் இருந்தது. இவனுக்குக் குழந்தைகள் இல்லை. அழகிய பெருமாளாகிய சோழகங்கன், பிள்ளை குறுக்கையுடையான், களப்பாளன், சோழியவரையன், வீரசோழப் பிரமராயன், விழுப்பாதராயன் என்போர் இவனின் அரசியல் அதிகாரிகளாக விளங்கினர். கி.பி. 1279இல் இம்மன்னன் இறந்த பின்னர்ச் சோழநாடு பாண்டிய நாட்டுடன் இணைக்கப்பட்டது. இம்மன்னனோடு சோழரது தனியரசு முடிவுற்றது.

## சோழர்களின் அரசியல்

சோழ மன்னர்களின் அரசியல், நிர்வாகத்திறன், ஆட்சி முறை, வரி விதிப்பு, வாணிபம், பொருளாதாரம், மக்களின் வாழ்க்கை முறை ஆகியவற்றைப் பல்வேறு கல்வெட்டுகள்,செப்பேடுகள், மெய்க்கீர்த்திகள், வெளிநாட்டாரின் பயணக் குறிப்புகள், கோயில்கள் ஆகியவற்றின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

## நாட்டுப் பிரிவுகள்

சோழ மன்னர்கள் தங்கள் ஆட்சியிலிருந்த பகுதிகளை மண்டலங்களாகவும், வளநாடுகளாகவும், கூற்றங்களாகவும் பிரித்து ஆட்சி புரிந்து வந்தனர். சோழ மண்டலம், இராசராசப் பாண்டி மண்டலம், சயங்கொண்ட சோழ மண்டலம், மும்முடிச் சோழ மண்டலம், அதிராசராச சோழ மண்டலம், மலை மண்டலம், வேங்கை மண்டலம் எனப் பகுக்கப்பட்டன. நிகரிலி சோழ மண்டலம் என்பது மைசூர் நாட்டின் கீழ்ப்பகுதியையும் பல்லாரி ஜில்லாவையும் தன்னகத்தே கொண்ட நுளம்பபாடி நாடாகும்.

ஒவ்வொரு மண்டலமும் பல வளநாடுகளாகவும் ஒவ்வொரு வளநாடும் பல நாடுகளாகவும் பிரிக்கப் பட்டிருந்தன. நாடுகளுள் சில கூற்றங்கள் எனவும் வழங்கி வந்தன. ஒவ்வொரு நாடும் பல சதுர்வேதி மங்கலங்களையும் சில தனி ஊர்களையும் தன்னகத்துக் கொண்டு விளங்கின. முதல் இராசராசன் காலத்தில் சோழ மண்டலம் ஒன்பது

வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டது. அவை இராசேந்திரச் சிங்க வளநாடு, இராசாசிரய வளநாடு, கேரளாந்தக வளநாடு, பாண்டிய குலாசனி வளநாடு, நித்த விநோத வளநாடு, உய்யக் கொண்டார் வளநாடு, க்ஷத்திரிய சிகாமணி வளநாடு, அருமொழி தேவ வளநாடு, இராசராச வளநாடு என்பனவாம். ஒவ்வொரு வளநாடும் இரண்டிரண்டு பேராறுகளுக்கு நடுவில் அமைந்திருந்த நிலப்பரப்பேயாகும். வளநாட்டின் உட்பகுதிகளாகிய நாடுகள் சில கூற்றங்கள் என வழங்கப்பட்டன. அவை பேரூர் ஒன்றைத் தலைநகரமாகக் கொண்டிருந்த காரணத்தால் அப்பேரூர்ப் பெயர்களையே தம் பெயர்களாகக் கொண்டு நிலவி வந்தன. சான்றாக, நல்லூர் நாடு, திருநறையூர்நாடு, திருவழுந்தூர் நாடு, அம்பர் நாடு, மிழலை நாடு, உறையூர்க் கூற்றம், தஞ்சாவூர்க் கூற்றம், ஆவூர்க் கூற்றம், திருவாரூர்க் கூற்றம் என்ற நாடுகளின் பெயர்களும் கூற்றங்களின் பெயர்களும் நன்குணர்த்துவதை உணர முடிகிறது.

## சோழ இளவரசனும், அதிகாரிகளும்

சோழ மன்னர்கள் தம் மூத்த புதல்வருக்கே அரசுரிமை வழங்கி வந்துள்ளனர். இவர்களது ஆட்சி செங்கோல் ஆட்சியாக இருந்தது. நீதி தவறாமல் ஆட்சி புரிவதையே முக்கிய கடமையாகக் கருதி வந்தனர். பல்வேறு காரியங்களை நிகழ்த்துதற்கு அமைச்சர்களின் ஆலோசனையின் பேரிலேயே செய்து வந்தனர். அரசியல் நிர்வாகத்திற்குத் துணைபுரிந்தவர்கள் **உடன்கூட்டத்ததிகாரிகள்** என்றழைக்கப் படுகின்றனர். சோழமன்னர்கள் முடி சூட்டப் பெறும் நன்னாளில் **உடையார், சக்கரவர்த்திகள், திரிபுவனச் சக்கரவர்த்திகள், கோனேரின்மை கொண்டான்** எனும் பட்டங்களைப் புனைந்து ஆட்சி புரிந்தனர்.

அரசனின் அரசியல் பணிகளுக்குப் பல்வேறு அதிகாரிகள் இருந்தனர். அவர்களின் ஒழுக்கம், அறிவு, ஆற்றல், குடிப்பிறப்பு முதலியவற்றை நன்கு அறிந்து கொண்ட பின்பே அவர்களைச் சோழ மன்னர்கள் தேர்ந்தெடுத்தனர். இவர்கள் **பெருந்தரம், சிறுதரம்** என இருவகைப்படுவர். சோழர் ஆட்சியில் திங்கள் தோறும் சம்பளம் கொடுக்கப்படவில்லை. அதிகாரிகளின் தகுதிக்கேற்ப அரசனிட மிருந்து நிலம் பெற்று அனுபவித்து வந்தனர். அரசனால் கொடுக்கப் பட்ட நிலம் அதிகாரிகள் உயிருள்ள வரை அனுபவிக்கலாம். அவர்களின் வாரிசுகளுக்கு எவ்வித உரிமையுமில்லை.

தலைநகரில் அரசனோடு உடனிருந்து நாட்டை ஆட்சி புரிந்தவர்கள் அமைச்சர்கள் எனப்பட்டனர். அவ்வமைச்சர்களுள்

தலைவனாக இருந்தவன் முதல் அமைச்சர் என வழங்கப்பட்டான். சோழ மன்னனது தலைநகரில் அமைச்சர் குழு மட்டுமின்றி நால்வகைப் படைகளுக்குத் தனித்தனியே தலைவர்களாகப் படைத்தலைவர்களும், அவர்களுக்குத் தலைவர்களாக மாசாமந்தரும் இருந்தனர். அரசன் அண்மையில் அரசாங்க அதிகாரிகளான திருமந்திரஓலை, திருமந்திர ஓலை நாயகம், விடையில் அதிகாரி, அரசியற் கருமங்களை ஆராயும் அதிகாரி இருந்தனர். ஒவ்வோர் உள்நாட்டுத் தலைநகரிலும் நாடு காவல் அதிகாரி ஒருவனும் இருந்தான்.

சோழர்களின் ஆட்சியில் பெரும் வருவாய் நிலவரியின் மூலமே கிடைத்தது. விளை நிலங்களை நன்கு அளந்து தரமிட்டு வரிகளை முறைப்படி விதித்து ஆண்டு தோறும் குடிமக்களிடம் வசூலித்து வாங்குவது அரசாங்கத்தின் இன்றியமையாக் கடமையாயிற்று. அதன் பொருட்டு அதிகாரிகள் பலரை உறுப்பினராகக் கொண்ட நிலவரிக் கழகம் ஒன்று ஒவ்வொரு மண்டலங்களுக்கும் தனித்தனியாக அமைக்கப்பட்டிருந்தது. அக்கழகம் புரவுவரித்திணைக்களம் என அழைக்கப்பட்டது. இக்கழகத்தில் புரவுவரித்திணைக்கள நாயகம், புரவுவரித்திணைக்களத்துக் கண்காணி, வரிப்பொத்தகம், வரிப்பொத்தக நாயகம், வரிப் பொத்தகக் கணக்கு, வரியிலிடு, முக வெட்டி, கீழ் முக வெட்டி, பட்டோலை ஆகியோர் அலுவல் அதிகாரிகளாக இருந்தனர்.

## அரசன் மக்களின் குறை தீர்த்தல்

அரசன் அவ்வப்போது நாட்டைச் சுற்றிப் பார்த்து மக்களின் நலன்களைப் பெருக்குவதற்குப் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டான். சுற்றிப் பார்க்க வரும் போது தன் அரசியல் அதிகாரிகளுடன் தங்குவதற்கு முக்கியமான ஊர்களில் அரண்மனைகள் இருந்தன. பிற ஊர்களில் கோயில் மண்டபங்களிலும் தனியாக அமைக்கப்பட்ட விடுதிகளிலும் தங்குவது வழக்கம். அவ்வாறு தங்குமிடங்களில் குடிமக்கள் அரசனிடம் நேரிடையாகத் தங்கள் குறைகளைத் தெரிவிப்பது வழக்கம். மக்களின் குறைகளைக் கேட்டறிந்து உடனுக்குடன் அதனைப் போக்க உதவுவான். புரவுவரித் திணைக்களத்து உறுப்பினர்களும் பிற அதிகாரிகளும் அரசனைப் போல நாட்டைச் சுற்றிப் பார்த்துக் குடிமக்களின் நலன்களைக் கவனித்து வந்தனர்.

## அரசியல் அதிகாரிகளுக்கு வழங்கிய பட்டங்கள்

ஆட்சியில் திறமையாகச் செயல்புரிந்த அதிகாரிகளுக்கு இன்று ராவ்பகதூர், திவான் பகதூர் என்று பட்டங்கள்

வழங்கப்படுவது போன்று சோழர்களின் ஆட்சியில் மன்னன் பல்வேறு பட்டங்களை வழங்கியுள்ளான். அரசாங்க அலுவல் மற்றும் வேறுதுறைகளில் மேம்பட்டவர்களுக்கு **மாராயன், பேரரையன்** எனப் பட்டங்கள் வழங்கப்பட்டன. **பிரமாதிராசன், பிரம்மராயன்** என்ற பட்டங்கள் அந்தணர்களுக்கு மட்டுமே வழங்கப்பட்டன. இப்பட்டங்கள் சோழ மன்னர்கள் தங்கள் இயற்பெயர் அல்லது சிறப்புப் பெயர்களுடனே இணைத்து வழங்கினர். காட்டாக, இராசராச மாராயன், குலோத்துங்க சோழ கேரளராசன், வீரசோழ பல்லவராயன், வீரராசேந்திர மழவராயன் என்பனவாகும்.

## கிராம ஆட்சி

சோழ மன்னர்களின் ஆட்சி சிறப்பாக அமைந்ததற்குக் காரணம் ஊராட்சி மன்றங்களின் தன்னலமற்ற தொண்டேயாகும். ஊராட்சிகளை நடத்துவதற்கு நான்கு விதமான சபைகள் இருந்தன. **கிராம சபை, தேவதானத்துச் சபை, ஊர்ச்சபை, நகர சபை** என்பனவாகும்.

## சபை உறுப்பினராவதற்குரிய தகுதி

கிராம சபையால் வாரியப் பெருமக்களாகத் தேர்ந்தெடுக்கப் படும் உரிமையுடையவர்கள் சொந்த வீடு, கால் வேலி நிலமுடையவர்களாய் இருத்தல் வேண்டும். மேலும் கல்வியறிவு, நல்லொழுக்கம், தூய வாழ்வு, சிறந்த ஆற்றல் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும். 35 வயதிலிருந்து 70 வயதிற்குட்பட்டவர்களாக இருத்தல் வேண்டும்.

## உரிமை இழந்தவர்கள்

நிறைவேற்றுக் கழகத்தில் உறுப்பினராக இருந்து இறுதியில் கணக்குக் காட்டாமல் இருந்தவர்களும், இவர்களின் நெருங்கிய உறவினர்களும், கூடத் தகாதவர்களுடன் கூடியவர்களும், ஐம்பெரும் பாதகங்கள் செய்தவர்களும், கொண்டது விடாத கொடியோர்களும், பிறர்பொருளைக் கவர்ந்தவர்களும், கையூட்டு வாங்கியவர்களும், கொலைஞர்களும், ஊருக்குத் துரோகம் செய்தவர்களும், குற்றம் காரணமாகக் கழுதைமேல் ஏற்றப்பட்டவர்களும், கள்ளக் கையெழுத்திட்டவர்களும் வாரிய மக்களாகத் தேர்ந்தெடுக்கப்பெறும் உரிமையைத் தம் வாழ்நாள் முழுவதும் இழந்தவராவர்.

## உறுப்பினர்களைத் தெரிந்தெடுக்கும் முறை

ஒவ்வொரு சதுர்வேதிமங்கலமும், ஊரும் நகரமும் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு பகுதியையும் குடும்பு

(ward) என்று வழங்கினர். ஒவ்வொரு குடும்பிற்கும் பிரதிநிதியாக ஒவ்வோர் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

ஊரிலுள்ள ஒவ்வொரு குடும்பிலுள்ளவர்களும் தாமே கூட்டம் நடத்தித் தகுதியுடைய பெயர்களைத் தனித்தனி ஓலைத்துண்டுகளில் எழுதி ஒன்று சேர்த்து எக்குடும்பிற்குரியவை என நன்கு புலப்படுமாறு குடும்பின் பெயர் வரையப்பட்ட வரையோலை யொன்றைச் சேர்த்துக்கட்டி அவ்வோலைக் கட்டை ஒரு குடத்திலிட்டு வைப்பர். இங்ஙனம் எல்லாக் குடும்புகட்கும் வெவ்வேறு வரையோலையுடன் தனித்தனியாகக் கட்டிக் குடத்திலிடுவர். தேர்ந்தெடுக்கும் நாளில் அரசாங்க அதிகாரியின் முன்னிலையில் ஊர்ப் பெரியவர் முதல் இளைஞர் வரை குழுமுவர். பிறகு ஒரு சிறுவனை அக்குடத்திலிருந்து அவ்வோலைத் துண்டுகளில் ஒன்றை அச்சிறுவனைக் கொண்டு எடுக்கச்செய்து அதனை அரசாங்க அதிகாரியிடம் கொடுப்பர். அவர் அதனை வாங்கிப் பெயரை வாசிப்பார். பின் அங்குள்ள நம்பிமார் எல்லோரும் ஒவ்வொருவராக அவ்வோலையிலுள்ள பெயரை வாசிப்பர். அவ்வோலையில் குறிக்கப் பெற்றவரே கழக உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவார். இவ்வாறு அனைத்து உறுப்பினர்களையும் தேர்ந்தெடுத்தபின் வாரியங்கள் அமைக்கப் பெறும்.




இம்மக்களில் யாரேனும் தவறிழைத்தால் நீக்கப்பட்டு வேறு ஒரு நபரை உடனே தேர்ந்தெடுப்பர்.

**சபை**

கிராம சபை, தேவதான சபை, ஊர்ச் சபை, நகர சபை என நான்கு சபை மக்களும் ஒன்று கூடி நாட்டு மக்களின் நலன்களைப்

பெருக்கி வந்தனர். இச்சபையினர் பணித்த பணிகளைச் செய்வதற்கு **மத்தியஸ்தன்,** கரணத்தான், பாடி காப்பான், தண்டுவான் (தண்டல்), அடி கீழ் நிற்பான் ஆகியோர் இருந்தனர். இவர்கள் கிராமசபையில் ஊதியம் பெற்றுப் பணிபுரிவோர் ஆவர். இவர்களுள் கரணத்தான் என்பவன் கணக்கு எழுதுபவன் ஆவான். தான் எழுதிய கணக்கைச் சபையோர் விரும்பிய போது காட்டல் வேண்டும். சபையோரின் நன் மதிப்பைப் பெறாவிட்டால் அடுத்த ஆண்டில் அவனுக்கு வேலை அளிக்கப்பட மாட்டாது. ஒரு நாளைக்கு நானாழி நெல்லும் ஓராண்டிற்கு ஏழு கழஞ்சுப் பொன்னும் இரண்டு கூறையும் கரணத்தானுக்குச் சம்பளமாகக் கொடுக்கப்படும். கணக்கினைச் சபையாரிடம் கொடுக்கும் போது சிவக்கக் காய்ச்சிய மழுவைக் கையில் ஏந்தி உறுதி மொழி கூறிக் கொடுத்தல் வேண்டும்.

### கிராமசபைக்குரிய வருவாய்

ஊர்தோறும் சபையோர் செலவின் பொருட்டுப் பொது மக்களிடம் வரி வாங்கினர். இவ்வரி **சபா விநியோகம்** எனவும் ஊரிடு வரிபாடு என்றும் வழங்கப்பட்டது.

### கடமைகள்

கிராமக் காரியங்களையும் கடமைகளையும் செய்து நல்லோர் வாழவும் தீயோர் அடங்கவும் செய்வதே கிராம சபையின் கடமையாகும். இதனை நிறைவேற்றக் கிராம சபையினர் சில **உட்கழகங்கள்** அமைத்தனர். நியாய விசாரணை செய்தல், அறங்கள் ஏற்று நடத்துதல், அறநிலையங்களைக் கண்காணித்தல் **சம்வற்சரவாரியம்.** ஏரி, குளம், ஊருணி ஆகிய நீர்நிலைகளைக் காத்தல், விளைநிலத்திற்குத் தேவையான நீர் பாய்ச்சுதல் **ஏரி வாரியம்.** புன்செய் நிலம், தோட்டங்களைப் பார்த்துக் கொள்ளுதல் **தோட்ட வாரியம்.** ஊரில் வழங்கும் பொன் நாணயங்களை ஆராய்வது **பொன் வாரியம்.** அரசனுக்குக் குடிகள் செலுத்த வேண்டிய நிலவரி, பிற வரிகளை வாங்கி அரசாங்கத்துக்கு அளிப்பது **பஞ்சவாரியம்.** நன்செய் நிலங்களைக் கண்காணிப்பது **கழனி வாரியம்.** ஊர் கணக்குகளைச் சரிபார்ப்பது **கணக்கு வாரியம்.** கலிங்குகளில் நீரைத் தேக்கி அவரவர்க்குட்பட்ட நாட்களில் கால்வாய்களில் தண்ணீர் விடுவது கலிங்க வாரியம். ஒவ்வோர் ஆண்டும் குடிகள் பயிரிடும் நிலங்களைக் கோல் கொண்டு அளந்து நிலப்பரப்பையும் விளைபொருளையும் கணக்கிடுவது **தடிவழி வாரியம்.** இவ்வாரியங்களால் மக்கள் எவ்வித இன்னலுமின்றி நலமுடன் வாழ்ந்தனர் எனலாம்.

### வேறு குழுக்கள்

கிராம சபையோர் போல வேறு பல குழுவினரும் உண்டு. மூலபருடையார், சாத்த கணத்தார், காளிகணத்தார், கிருஷ்ண கணத்தார், குமார கணத்தார், மணி கிராமத்தார், வளஞ்சியர், சங்கரபாடியார், பன்மாகேசுரர் என்போர் இருந்தனர். இக்கூட்டத்தினர் கிராமங்களிலுள்ள கோயிலைப் பராமரித்து வந்தனர் என அறிய முடிகிறது. கிராம சபையைப் போன்று ஒவ்வொரு நாட்டிற்கும் தனிச்சபை உண்டு. மண்டலங்களில் எல்லா நாடுகளிலிருந்தும் ஒவ்வோர் பிரதிநிதி அடங்கிய பேரவை ஒன்று இருந்தது. இதன் வாயிலாகச் சோழ மன்னர்கள் தங்கள் ஆட்சியினைச் செம்மையாக நிறைவேற்றினர்.

### வரிகள்

விளைநிலங்களில் விளையும் நெல்லில் ஆறில் ஒரு பங்கு அரசாங்கத்திற்கு நிலவரியாகக் குடிமக்கள் அளித்தனர். இந்நிலவரியின்றித் தறியிறை, செக்கிறை, மனையிறை, அங்காடிப் பாட்டம், தட்டாரப்பாட்டம், இடைப்பாட்டம், ஈழம் பூட்சி, வண்ணாரப்பாறை, கண்ணாலக்காணம், குசக்காணம், ஓடக்கூலி, நீர்க்கூலி, நாடுகாவல், உல்கு, தரகு, மரவிறை, இலைக் கூலம் முதலான பல்வகை வரிகளும் அரசாங்கத்தாரால் வசூலிக்கப்பட்டன. **அந்தந்தத் தொழில்புரிவோரிடம் அதற்குரிய வரி வசூலிக்கப்பட்டது. உல்கு** என்பது சுங்கவரியாகும். வணிகத்தின் பொருட்டு ஏற்றுமதி, இறக்குமதி பொருள்களுக்கு ஏற்ப வாங்கப்பட்ட வரியாகும். மன்னன் போர் புரியப் பிற நாடுகளுக்குச் செல்லும் போது போர்வரி மக்களிடம் வசூலிக்கப்பட்டது. அது போலவே காவிரிக் கரையோர மக்களிடம் வெள்ளத்தினால் சேதம் ஏற்படாமல் தடுப்பதற்காக வரி வசூலிக்கப்பட்டது.

பிராமணர்களின் கிராமங்களாகிய சதுர்வேதி மங்கலத்திலிருந்து சபையின் செலவிற்காக ஆண்டுதோறும் வாங்கிய வரி **சபா விநியோகம்** எனப்பட்டது. நகரங்களிலும் வெள்ளான்வகை ஊர்களிலிருந்தும் வாங்கிய வரி **ஊரிடு வரிப்பாடு** என அழைக்கப்பட்டது. இவ்வரிகளை அவ்வவ் வூர்ச்சபை உறுப்பினரே வாங்கி அரசாங்கத்திற்கு அனுப்பி வைத்தனர்.

### நில அளவு

சோழ மன்னர்கள் தங்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த நாடுகளின் விளைநிலங்களைக் கோல் கொண்டு அளந்து வரி விதித்தனர்.

நிலங்களை நீர் நிலம், கொல்லை, நத்தம், காடு என வகுத்தனர். நீர் நிலம், கொல்லை என்பன நன்செய், புன்செய் நிலங்களாகும். நத்தம் என்பது மக்கள் வாழுமிடம். நிலங்களெல்லாம் குழி, மா, வேலி என்ற முறையில் அளக்கப்பட்டன. நூறு குழி கொண்டது ஒரு மா. இருபது மா கொண்டது ஒரு வேலி. நிலத்தை அளந்து கற்கள் நட்டு வைத்தனர். கோயில்களுக்காக விடப்பட்ட நிலங்களுக்கு வெவ்வேறு வகையான கற்கள் நடப்பட்டன.




ஒவ்வோர் ஊர்களில் சில இடங்கள் வரி விதிக்காமல் ஒதுக்கப்பட்டன. அவை நத்தம், கம்மாளச் சேரி, வண்ணாரச் சேரி, ஈழச்சேரி, வெள்ளான் சுடுகாடு, பறைச்சேரி, பறைச்சுடுகாடு, ஊர் நிலத்தூடறுத்துப் போன வாய்க்கால், சீகோயில், ஐயன் கோயில், பிடாரி கோயில், திருமுற்றம், தேவர் திருமஞ்சனக் குளம், ஊருணி, கழனிக்குளம், நந்தவனம், களம், கொட்டாரம், ஓடை, சுடுகாட்டுக்குப் போகும் வழி, ஆறு, ஆறிடுபடுகை, பெருவழி, மன்றம், கன்றுமேய்பாழ், மனை, மனைப்படப்பை, கடை, கடைத்தெரு, கிடங்கு, காடு, உவர் நிலம் ஆகியனவாகும்.

## நிலவுரிமை

சோழர் காலத்தில் நிலங்களை அனுபவித்து வந்தோரின் உரிமையை அடிப்படையாக வைத்து நிலங்களை மூன்று வகையாகப் பிரித்தனர். அவை வெள்ளான் வகை நிலம், தேவதான நிலம், பிரம தேயம் என அழைக்கப்பட்டன. உழவுத் தொழிலில் ஈடுபட்டு வேளாண்மை செய்யப்படும் நிலம் வெள்ளான் நிலம் எனப்படும். கோவில்களுக்குத் தானமாக அளிக்கப்பட்டவை தேவதானம் எனப்படும். அந்தணர்களுக்கு அளித்தது பிரம்மதேயம் எனப்படும். இவ்வகை நிலங்கள் இறையிலி நிலங்கள் எனப்படும். சில குறிப்பிட்ட காரியங்களைச் செய்பவர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் சீவிதம், போகம், விருத்தி, காணி, பற்று, புறம் பட்டி, முற்றூட்டு என அழைக்கப்பட்டன.

அரசியல் அதிகாரிகளுக்கு வாழ்நாள் முழுவதும் அனுபவிக்கும் உரிமையுடையது சீவிதம். அவர்களின் திறமையான செயல்பாடுகளால் இறையிலி நிலமாக மாற்றப்பட்டு வழிவழியாக அனுபவித்து வருமாறு தருவதே போகம், விருத்தி போன்றவையாகும்.

இறையிலி நிலங்கள் பெரும்பாலும் திருக்கோவில்களில் ஆடல்பாடல்கள் நிகழ்த்தும் பதியிலார், ஆடலாசிரியரான நட்டுவன், ஆரியக் கூத்தாடு சாக்கியர், தமிழ்க் கூத்தாடுபவர், வீணை வாசிப்போன், மத்தளம், இசை வாசிப்போர், ஓதுவார் ஆகியோருக்கு வழங்கப்பட்டன. இதனைக் காணி என அழைத்தனர். காட்டாக, வீணைக்காணி, கூத்தாடிக் காணி, பாணக்காணி என்பன.

### நீர்ப்பாசனம்

சோழ மன்னர்கள் பல்வேறு ஊர்கள், நாடுகள், கூற்றங்கள், மண்டலங்களில் ஏரிகளும், குளங்களும், கால்வாய்களும் அமைத்தனர். வீரநாராயண ஏரி, சுந்தரசோழப் பேரேரி, குந்தவைப் பேரேரி, மதுராந்தகப் பேரேரி போன்ற ஏரிகள் இதற்குத் தக்க சான்றுகளாகும். ஆண்டுதோறும் ஏரிகளை ஆழமாக வெட்டியும், கரைகளை உயரமாகக் கட்டியும் மழை நீரைச் சேமித்தனர். இதனால் வேளாண்மை, குடிநீர் ஆகியவற்றிற்குத் தட்டுப்பாடு இல்லாமல் இருந்தது.

### சோழர் காலச் சமுதாயம்

சோழர் காலத்தில் விளை நிலங்களை அளவிட்டு நிலவரியினை விதித்தது போல் மக்கட் தொகையினைக் கணக்கிட்டு அறிய வேண்டும் என்ற ஆவல் இல்லை என்றே கூறலாம். சோழர்கள் ஆட்சியில் பல்வகைப்பட்ட வகுப்பினரும் தம்தம் கடமைகளை ஒழுங்காகச் செய்து கொண்டு வாழ்ந்து வந்தனர். மக்கள் யாவரும் குலவேறுபாடு கருதாமல் தங்களுக்குள் முரண்படாமல் ஒருவர் உரிமையில் மற்றொருவர் தலையிடாமல் தம் கடமைகளை ஆற்றி வந்துள்ளனர். ஒவ்வொருவரும் தம்தம் குலத் தொழிலையே செய்து வந்தனர். இதனால் பொறாமை, பூசல் யாவும் இல்லை.

பார்ப்பனர்கள் வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் வல்லமைபூண்டு இரவில் கோவில் அம்பலங்களில் பதினெண் புராணங்களைப் பொது மக்களிடம் படித்து விளக்கம் கூறினர். இதனால் பொதுமக்கள் அவர்களுக்குப் பட்டவிருத்தி, புராண விருத்தி என்ற பெயரில் இறையிலி நிலங்கள் வழங்கி ஆதரித்து வந்துள்ளனர். திருக்கோவில்களில் நாள்தோறும் உச்சியம் போதில் அந்தணர்களுக்கு உணவளிக்கும் பொருட்டு அரசர்களும் செல்வர்களும் பல நிவந்தங்கள் அளித்தனர்.

அரசரிடம் சில வகுப்பினர் புதிய உரிமைகள் பெற்றனர். ஐந்து வகைப்பட்ட கம்மாளர்கள் பார்ப்பனர்கள் போல் பூணூல் அணிந்து ஹோமம், ஔபாசனம் ஆகியவை செய்வதற்கு உரிமை பெற்றனர்.

இம்மக்கள் நன்மை, தீமை காரியங்களுக்கு இரட்டைச் சங்கு ஊதுதல், பேரிகை கொட்டுதல் போன்றவையும், செல்லுமிடங்களுக்குப் பாதரட்சைப் போடவும், வீடுகளுக்குச் சுண்ணாம்பு பூசிக் கொள்ளவும் உரிமை வழங்கப்பட்டது.

ஆண்கள் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரை மணந்து கொள்ளும் வழக்கம் இருந்ததைக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது. சோழ மன்னர்கள், குறுநில மன்னர்கள், செல்வர்கள் அரசியல், ஆட்சிக் காரணமாக ஒன்றுக்கு மேற்பட்ட மகளிரை மணந்தனர். ஆனால் பொது மக்கள் ஒருவனுக்கு ஒருத்தியாகத் தான் வாழ்ந்து வந்தனர்.

### உடன்கட்டை ஏறுதல்

உடன்கட்டை ஏறும் வழக்கம் உயர்குடியில் பிறந்த பெண்களிடமே இருந்தது. பெரும்பாலும் அரச வகுப்பினருக்கே யுரியதாய் இருந்தது எனலாம். சான்றாக, சுந்தரசோழன் இறந்தவுடன் அவன் மனைவி வானவன்மாதேவி உடன்கட்டை ஏறினாள். கங்கை கொண்ட சோழனின் மனைவி வீரமாதேவி கணவனது பிரிவாற்றாமல் உடன்கட்டை ஏறினாள் என்று பிரமதேசம் எனும் ஊரிலுள்ள கல்வெட்டுச் செய்தியால் அறிய முடிகிறது.

### பதியிலார்

திருக்கோயில்களில் பணி செய்யவும், நடனமாடவும் தளிச்சேரிப் பெண்கள் இருந்து வந்தனர். இவர்கள் கலைகளில் தேர்ச்சி பெற்றிருந்தனர். கோவிலைச் சுற்றியுள்ள தெருக்களில் இம்மகளிர் குடி வைக்கப்பட்டனர். அவர்கள் வாழ்ந்து வந்த பகுதி தளிச்சேரி என அழைக்கப்பட்டது. இம்மகளிர் தேவரடியார் எனவும், நாட்டியத்தில் சிறந்து விளங்கியதால் நாடகக் கணிகையர் எனவும் வழங்கப்பெற்றனர். இம்மகளிர் திருமணம் புரிந்துகெண்டும் கோவிலுக்குத் தொண்டு செய்யலாம் எனக் கல்வெட்டுச் செய்திகள் குறிப்பிடுகின்றன. அன்னோர் இசையிலும், நடனத்திலும், திருக்கோவில் பணிகளில் சிறந்து விளங்கியதால் சமுதாயத்தில் அவர்களுக்குப் புகழும் மதிப்பும் கொடுக்கப்பட்டன. சோழ மன்னர்கள் இசையிலும் நாட்டியத்திலும் வல்ல பதியிலாருக்குத் தலைக்கோலி என்னும் பட்டம் அளித்துச் சிறப்பித்துள்ளனர்.

அக்காலத்தில் ஆண்களும், பெண்களும் செல்வர்களிடத்தும் கோவில்களிலும், மடங்களிலும் தம்மை விற்றுக் கொண்டு அடிமையாகத் தொண்டாற்றி வந்தனர் எனப் பல கல்வெட்டுகளால்

அறிய முடிகிறது. கொடிய பஞ்சத்தின் காரணமாகவும், வறுமையின் காரணமாகவும் தங்களை விற்றனர். காட்டாக, ஓர் அந்தணன் பதின்மூன்று காசுக்காகக் கோவிலுக்கு அறுவரை அடிமையாக விற்றான் என்று தஞ்சாவூர் மேலப்பெரும்பள்ளத்திலுள்ள கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

ஆண் மக்களும் பெண் மக்களும் நாட்கூலி பெற்று ஊழியம் புரிந்து வந்த செய்திகளும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. ஓர் ஆண் நாளொன்றுக்குப் பெற்று வந்த கூலியில் பாதியை ஒரு பெண் தன் பணிக்காகப் பெற்றாள் எனக் குறிப்பிடுகிறது.

கணவன் இறந்தபின் அவனுடைய நிலங்கள், அடிமைகள், பிற பொருட்கள் அவன் மனைவிக்குரியவாகும் எனக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. மேலும் அந்தணர்கள் ஏர்பிடித்து நிலங்களை உழுதல் கூடாது. பணிமக்களாயிருந்தோர் வேள், அரசு முதலான பட்டங்களைப் பெறுதல் கூடாது. தொழிலாளர்கள் நன்மை, தீமைகளுக்குப் பேரிகை கொட்டக்கூடாது. அவர்கள் அடிமைகளை வைத்துக் கொள்ளுதல் கூடாது. சிறு விளக்குகளும் பானைகளும் செய்துவிற்கும் குயவர்கள் ஒரு மேலாடை அணிந்து கொள்ளலாம். பட்டர், உபாத்தியர், கணக்கர், தச்சர், கொல்லர் முதலானோர் தமக்குரிய தொழில்களை அவ்வூரிலேயே செய்தல்வேண்டும். பிற ஊர்களுக்குச் சென்று தொழில் புரிதல் கூடாது. சட்டத்தை மீறினால் தண்டனை பெறுவர் எனக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

## வாணிபமும் தொழிலும்

வணிகர்கள் வாணிபத்திற்காக வெளிநாடு செல்வதற்குரிய வாய்ப்புண்டு. இவர்கள் புறநாடுகளுக்குச் செல்லும் போது கூட்டமாகச் செல்வர். அக்கூட்டத்திற்கு வாணிகச் சாத்து எனப் பெயர் வழங்கப்பட்டது. அக்குழுவின் தலைவன் மாசாத்துவான் என அழைக்கப்பட்டான். வணிகருள் சிறந்தோருக்கு மன்னன் எட்டி என்ற பட்டம் அளித்துப் பாராட்டியுள்ளான்.

கடலில் கலம் செலுத்தி வெளிநாடுகளோடு வாணிபம் செய்யும் வணிகர்களும் உண்டு. அக்குழுக்களின் தலைவன் மாநாய்கன் என அழைக்கப்பட்டான்.

வணிகர்களுள் நாநாதேச திசையாயிரத்தைஞ்ஞூற்றுவர், மணிகிராமத்தார், நகரத்தார், வளஞ்சியர், அஞ்சு வண்ணத்தார் எனப் பல குழுவினர் இருந்தனர். இவ்வணிகத்தால் அரசாங்கத்திற்கு வருவாயும் மிகுந்தது. மணி கிராமத்தார் - தலைநகரம், கடற்கரைப்பட்டினம், வெளிநாடுகளிலும் வாணிபம் செய்தனர்.

நகரத்தார் - பெரிய நகரங்களில் வாணிபம் செய்தனர்.

வளஞ்சியர் - ஈழநாட்டு வணிகர்கள்

அஞ்சு வண்ணத்தார் - முகமதிய வணிகர்கள்

ஒவ்வொரு வாணிகக் குழுவினரும் ஒரு சிறு காவற் படை வைத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் செல்லுமிடங்களுக்கெல்லாம் அச்சிறுபடையும் அவர்கள்பின் செல்லும்.

தமிழகத்திலிருந்து முத்து, யானைத்தந்தம், பவழம், பருத்தி, கண்ணாடிக்கல், பாக்கு, சந்தனக்கட்டை, ஏலம், பளிங்குக்கல், பருத்திநூல், துணி, சாயந்தோய்த்த பட்டு நூல் கலந்த துணி ஆகியவை சீனம், மலேயா, சுமத்திரா போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதியாயின. பிற நாடுகளிலிருந்து சீனச்சூடம், சூடம், அகில், அம்பர், தக்கோளம், இலவங்கம், குங்குமம், தமாலம் (பச்சிலை), நிரியாசம் ஆகியவை இறக்குமதி செய்யப்பட்டன.

## நாணயங்களும் அளவைகளும்

சோழ மன்னர்கள் பொன்னாலும் வெள்ளியாலும் செம்பாலும் ஆன நாணங்களைப் பயன்படுத்தினர். மாடை, காசு என்ற இருவகை நாணயங்கள் புழக்கத்திலிருந்தன. மாடை என்பது ஒரு கழஞ்சு பொன் எடையுள்ளது. இருபது குன்றிமணிகள் கொண்டது ஒரு **மஞ்சாடி** எனவும் இருபது மஞ்சாடி சேர்ந்தது ஒரு **கழஞ்சு** எனவும் வழங்கினர்.

இவ்வாறு சோழர்களின் ஆட்சியில் வாணிபம், நாணயங்கள், நிலவரிகள் இருந்தன என அறிய முடிகிறது.

## சதாசிவ பண்டாரத்தாரின் அணுகுமுறை

பண்டாரத்தார் தாமே நேரிடையாகப் பல இடங்களுக்குச் சென்று கல்வெட்டுகள், செப்பேடுகள், மெய்க்கீர்த்திகள் ஆகியவற்றைக் கண்டு படியெடுத்து வந்தார்.

## சான்று

திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கேயுரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச்சாலைக் கலமறுத்தருளி . . . . . .

இவ்வாறு கல்வெட்டுச் செய்திகளை ஆங்காங்குத் தந்துள்ளார். விரிவாகக் காண்பதற்காகப் பின்னிணைப்பாகப் பல கல்வெட்டுச் செய்திகளைக் கொடுத்திருக்கிறார்.

## மறுத்துரைத்தல்

சில கல்வெட்டுகளில் காணப்படும் செய்திகளை மறுத்து உண்மையினை வெளிப்படுத்துகிறார்.

விசயாலயன் தஞ்சை மாநகரைக் கைப்பற்றி அதனைத் தன் தலைநகராக வைத்துக் கொண்டான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் உணர்த்துகின்றன. நகரத்திற்கு இன்றியமையாத எல்லா நலங்களுடனும் தஞ்சாபுரி எனும் மாநகரை விசயாலய சோழன் புதிதாக அமைத்தான் என்று கன்னியாகுமரிக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. விசயாலயன் காலத்திற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே தஞ்சை மாநகர் சிறப்புடன் விளங்கியது. தஞ்சாவூரை விசயாலயன் புதிதாக அமைத்தான் என்று கன்னியாகுமரிக் கல்வெட்டு உரைப்பது பொருத்தமில் கூற்றாகும் என மறுத்துரைக்கிறார்.

## விளக்கிக்கூறுதல்

கல்வெட்டுச் செய்திகளை நன்கு ஆராய்ந்து முன்பின் தொடர்புகளை அறிந்து விளக்கமாக வரிசைக் கிரமமாக விளக்கிக் கூறுகிறார் பண்டாரத்தார்.

"ஆதித்த சோழன் திருமாற்பேற்றிறைவனுக்குத் தன் ஆட்சியின் இருபத்தொன்றாம் ஆண்டில் தேவதானமாக நிலம் அளித்தான் என்றும், அஃது இவன் மகன் முதற் பராந்தக சோழனது ஆட்சியின் நான்காம் ஆண்டின் இறையிலியாக அரசாங்க வரிப்புத்தகக் கணக்கில் எழுதப்பட்டதென்றும் கூறுகின்றது. ஆகவே ஆதித்தன் தன் ஆட்சியின் இருபத்தொன்றாம் ஆண்டிற்கு முன்னரே அபராஜிதவர்மனை வென்று தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றியிருத்தல் வேண்டும். அபராஜிதவர்மனின் கல்வெட்டுகளும் அவனது ஆட்சியின் பதினெட்டாம் ஆண்டிற்குப் பிறகு தொண்டை மண்டலத்தில் யாண்டும் காணப்பட வில்லை" (19:26)

## மேற்கோள் காட்டுதல்

கல்வெட்டுகள், மெய்க்கீர்த்திகள், செப்பேடுகள் தவிர இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள செய்திகளையும் தம் வரலாற்றுச் செய்திகளுக்கு ஆதாரமாகக் கொண்டு விளக்கியுள்ளார் ஆசிரியர். சான்றாக, முதல் பராந்தக சோழன் பாண்டிய நாட்டையும், ஈழ நாட்டையும் படையெடுத்துச் சென்று வெற்றி பெற்ற செய்திகள் கலிங்கத்துப்பரணி, குலோத்துங்க சோழனுலா, இராசராச சோழனுலா போன்ற இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன என மேற்கோள் காட்டியுள்ளதைச் சுட்டலாம்.

"ஈழ முந்தமிழ்க் கூட லுஞ்சிதைத்
திகல் நடந்ததோர் இசைப ரந்ததும்"
(கலி. பரணி. இராசபாரம்பரியம் பா. 23)

தாழமுன் சென்று மதுரைத் தமிழ்ப்பதியும்
ஈழமும் கொண்ட இகலாளி"
(குலோ.சோ.உலா. வரி 44-46).

ஈழமெழு நூற்றுக் காதமும் சென்றெறிந்து
வேழமர் திறை கொண்டு மீண்டகோன்"
(இரா. சோ.உலா. வரி 38-40)

## முடிவுரை

சதாசிவ பண்டாரத்தார் சோழ மன்னர்களின் செப்பேடுகள் மெய்க்கீர்த்திகள், கல்வெட்டுச் செய்திகள், ஆகியவற்றை அடிப்படை ஆதாரமாகக் கொண்டு வரலாற்று அடிப்படையில் ஒவ்வொரு மன்னர்களின் பட்டமேற்ற ஆண்டு, அவர்கள் செய்த போர்கள், செய்த பணிகள், சிறப்புப் பெயர்கள், மனைவியர், புதல்வர்கள், மன்னர்களுக்கு உதவிய அரசாங்க அதிகாரிகள் முதலான செய்திகளை விரிவாக விளக்கியுள்ளார். மேலும் அக்கல்வெட்டுகளின் வழியாக வெளிப்படும் சோழ அரசர்களின் அரசியல், ஆட்சித் திறன், நிலவரிகள், கோயிற் பணிகள், வாணிபம், பொருளாதார நிலை, மக்களின் சமுதாய வாழ்வு ஆகியவற்றை மிக விரிவாகவும் தெளிவாகவும் செம்மையாகவும் தந்துள்ளார். சில இடங்களில் முரணான கருத்துகளை நன்கு ஆராய்ந்து சரியான கருத்துகளை வழங்கியுள்ளார். உண்மையில் பிற்காலச் சோழர்களின் முழுமையான வரலாற்று நிகழ்வுகளை மிகச் சரியாகக் கொடுத்த அறிஞர் சதாசிவ பண்டாரத்தார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

****

# இலக்கிய ஆய்வுகள்

**முகிலை இரெ. இராசபாண்டியன்**

ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகள் இலக்கிய ஆய்வில் ஆழ்ந்து ஈடுபட்டவர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார். அவர் மேற்கொண்ட ஆய்வின் வெளிப்பாடாகப் பல வரலாற்று உண்மைகளையும் இலக்கியத் தெளிவுகளையும் ஏற்படுத்தியுள்ளார். பண்டாரத்தார் நிகழ்த்திய இலக்கிய ஆய்வுகளை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை,

1. இலக்கிய ஆய்வில் இலக்கியச் செய்திகள்
2. இலக்கிய ஆய்வில் வரலாற்றுச் செய்திகள்

என்பவை ஆகும்.

## இலக்கிய ஆய்வில் இலக்கியச் செய்திகள்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இலக்கியங்கள் முதற்கொண்டு இடைக்கால இலக்கியங்கள் வரை தமது ஆய்வுத் தளத்தை விரிவுபடுத்தியிருந்த பண்டாரத்தார் அவற்றின் வாயிலாகப் புதிராக இருந்த பல செய்திகளை வெளிப்படுத்தியுள்ளார்.

## திருவிளையாடல் புராணம் அறுபத்து நான்காவது படல ஆராய்ச்சி

இந்த இலக்கிய ஆய்வின் வழியாகப் பண்டாரத்தார் நான்கு செய்திகளை நிறுவியுள்ளார். அந்த நான்கு உண்மைகள் யாவை என்பதைத் தெரிவிப்பதற்கு முன்னர், பண்டாரத்தார் ஆய்வு மேற்கொண்ட செய்தியை விளக்க வேண்டியுள்ளது.

பெரியபுராணத்தின் திருஞானசம்பந்தர் புராணத்திலும் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணத்திலும் நிகழ்வுகள் ஒத்துக்காணப்படும் இரு செய்திகள் இடம் பெற்றுள்ளன. அந்த இரு நிகழ்வுகளையும் காண்போம்.

## பெரிய புராணத்தில் காணப்படும் நிகழ்வு

வைப்பூரில் தாமன் என்னும் வணிகன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு ஏழு புதல்வியர். அவன் தனது மூத்த

பெண்ணைத் தனது மருமகனுக்குத் திருமணம் செய்விப்பதாக உறுதி கூறியிருந்தான். ஆனால், பணத்தாசையால் அந்த உறுதியை மீறித் தனது ஆறு பெண்களையும் பிறருக்குத் திருமணம் செய்து கொடுத்தான். தந்தையின் செயலை ஏற்றுக் கொள்ளாத ஏழாவது பெண் தனது முறை மாப்பிள்ளையுடன் யாருக்கும் தெரியாமல் வெளியேறி விட்டாள்.

அவர்கள் இருவரும் திருமருகலில் உள்ள சிவாலயத்துக்கு அருகில் உள்ள ஒரு மடத்தில் தனித்தனியே தூங்கிக் கொண்டிருந்தனர். அப்போது அவனைப் பாம்பு கடித்ததால் அவன் இறந்து விட்டான். அப்போதும் கூட அவனைத் தொடாமல் (திருமணம் ஆகாததால்) அந்தப் பெண் அழுது புரண்டாள். அவ்வேளையில் அங்கு வந்த திருஞானசம்பந்தர் திருமருகலில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானை வேண்டி, ‘சடையாய் எனுமால்’ என்னும் பதிகத்தைப் பாடி இறந்தவனை உயிர்பெறச் செய்தார். அங்கேயே இருவருக்கும் திருமணம் செய்து வைத்து அனுப்பினார்.

## திருவிளையாடல் புராணத்தில் காணப்படும் நிகழ்வு

கடற்கரைப் பட்டினம் ஒன்றில் ஒரு வணிகன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு ஒரே ஒரு மகள். அவன் மதுரையில் திருமணம் செய்து வாழ்ந்து கொண்டிருந்த தன் மருமகனுக்குத் தனது மகளை மணம் செய்து கொடுக்க வேண்டும் என்று தனது சுற்றத்தாரிடம் தெரிவித்துவிட்டு இறந்து விட்டான். அவனது மனைவியும் இறந்து விட்டாள்.

செய்தியை அறிந்து வணிகனின் மருமகன் அங்கே வந்தான். தனது மாமன் மகளை மதுரைக்கு அழைத்துக் கொண்டு போய்த் திருமணம் செய்ய எண்ணி அழைத்துச் சென்றான். அவ்வாறு அவர்கள் வரும் வழியில் திருப்புறம்பயம் என்னும் ஊரில் தங்கினார்கள். அங்கே உள்ள சிவாலயத்தின் வாயிலில் தலை வைத்து இருவரும் தூங்கிக் கொண்டிருக்கும் போது அவனைப் பாம்பு கடித்ததால் அவன் இறந்து விட்டான். அதைக் கண்ட அந்தப் பெண் அலறி அழுதாள்.

அங்கே உள்ள மடத்தில் தங்கியிருந்த திருஞானசம்பந்தர் அதை அறிந்து அங்கே வந்தார்; சிவபெருமானை நினைத்துப் பதிகம் பாடி, இறந்தவனை உயிர்பெறச் செய்தார்; இருவரையும் அந்த இடத்திலேயே திருமணம் செய்து கொள்ளுமாறும் கேட்டுக் கொண்டார்.

திருஞானசம்பந்தர் கூறியதைக் கேட்ட அவன், "மதுரைக்குப் போய் ஊரார் சாட்சியுடன் திருமணம் செய்து கொள்வேன்" என்று கூறினான். உடனே திருஞானசம்பந்தர், "உங்கள் திருமணத்திற்கு இங்கே காணப்படும் வன்னிமரமும் கிணறும் இலிங்கமும் சாட்சிகள் ஆகும்; திருமணம் செய்து கொள்ளுங்கள்" என்றார்.

அதைக் கேட்ட இருவரும் திருமணம் செய்து கொண்டு மதுரைக்குச் சென்று நெடுநாள் வாழ்ந்தனர். அந்த வணிகனின் மூத்த மனைவியின் மகன்களுக்கும் இளைய மனைவியின் மகனுக்கும் சண்டை ஏற்பட்டது. அதனால் மூத்த மனைவி கோபம் கொண்டாள். இளையவளைப் பார்த்து, "நீ, என் கணவனை முறையாகத் திருமணம் செய்ய வில்லை; என் கணவனின் பின்னால் வந்த காமக்கிழத்தி. என் கணவனை நீ திருமணம் செய்ததற்குச் சாட்சி உண்டா?" என்று கேட்டாள்.

அதைக் கேட்ட இளையவள் வெட்கம் அடைந்தாள். "என் கணவன், பாம்பு கடித்து இறந்த வேளையில் உயிர் தந்து அருளிய திருஞானசம்பந்தர் அருளினால் திருமணம் செய்த போது அங்கே இருந்த வன்னிமரமும் கிணறும் இலிங்கமும் சாட்சிகள்" என்று கூறினாள். உடனே மூத்தவள் சிரித்தபடியே, "நீ சொன்னவை இங்கே வந்து சாட்சி சொன்னால் நீ, முறைப்படி என் கணவனைத் திருமணம் செய்தது உண்மை என்று ஒப்புக் கொள்கிறேன்" என்றாள்.

இளையவள் அன்று முழுவதும் சிவபெருமானைச் சிந்தையில் கொண்டவளாய் உண்ணாமல் உறங்காமல் இருந்தாள். அடுத்தநாள் காலையில் பொற்றாமரைக் குளத்தில் குளித்து, வெண்ணீறு அணிந்து சிவபெருமானை வேண்டிக் கொண்டாள். "என் கணவர் என்னைத் திருமணம் செய்தபோது சாட்சிகளாய் இருந்த வன்னிமரமும் கிணறும் இங்கே எழுந்தருளச் செய்க" என்று கூறியபடி நின்றாள். அவள் வேண்டுதலைக் கேட்டு, வன்னிமரத்தையும் கிணற்றையும் அங்கே தோன்றச் செய்தான் இறைவன்.

பெரியபுராணத்திலும் திருவிளையாடல் புராணத்திலும் காணப்படும் இந்த இரு நிகழ்வுகளிலும் ஒரு சில ஒற்றுமைகள் காணப்படுவதால் இவை இரண்டுமே ஒரே நிகழ்வு என்று கூறுவதைப் பண்டாரத்தார் மறுக்கிறார். அதற்குரிய சான்றுகளைத் தமது கட்டுரையில் ஒன்றன்பின் ஒன்றாகத் தெரிவித்துள்ளார்.

பெரியபுராணத்தில் கூறப்படும் நிகழ்வை அனைவரும் ஏற்றுக் கொள்கின்றனர். திருவிளையாடல் புராணத்தில்

கூறப்படுவதைத்தான் பலரும் ஏற்றுக்கொள்ளவில்லை. எனவே அது நிகழ்ந்ததற்கான இலக்கிய ஆதாரமாகச் சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் குறிப்பைப் பண்டாரத்தார் காட்டுகிறார்.

"வன்னிமரமும் மடைப்பளியும் சான்றாக
முன்நிறுத்திக் காட்டிய மொய் குழலாள்"

என்னும் (சிலம்பு: வஞ்சினமாலை 5, 6) அடிகளில் அந்த வணிகனின் மனைவி, வன்னிமரத்தையும் மடைப்பள்ளியையும் சாட்சியாக அழைத்ததைப் பற்றி இளங்கோஅடிகள் பாடியுள்ளதைப் பண்டாரத்தார் சுட்டிக் காட்டியுள்ளார்.

திருப்புறம்பய புராணத்தின் ஆறாவது சருக்கத்தில் இந்த வரலாறு விரிவாக இடம் பெற்றுள்ளது என்று மேலும் குறிப்பிட்டுள்ள பண்டாரத்தார், திருவிளையாடல் புராணத்தில் கூறப்பட்ட வரலாறு நிகழ்ந்ததற்குச் சான்று காட்டி நிறுவியுள்ளார்.

திருப்புறம்பயத்தில் பாம்பு தீண்டி இறந்த வணிகனின் உயிரை மீட்டவர் திருஞானசம்பந்தர் அல்லர், இறைவன் தான்அச்செயலைச் செய்தவன் என்பதற்கும் பண்டாரத்தார் பின்வரும் சான்றுகளைச் சுட்டியுள்ளார்.

இறந்த வணிகனின் உயிரை மீட்டவர் இறைவன் என்பதைத் திருப்புறம்பய புராணத்தைச் சான்று காட்டிக் கூறுகிறார்.

"கருணையால் இரங்கிக் கரும்படு சொல்லி
கண்ணுதற் கடவுளை நோக்கித்
தருண மானனையாள் கணவனை இழந்து
தவிப்பது கண்டு உளம் சகியேன்
வருணமார் வணிகன் ஆருயிர் மீள வழங்கிட
வேண்டும் என்று இரப்ப
முரணிலா விடங்கள் தீர்ப்பவன் போல
முதல்வனும் ஆங்கு வந்தடைந்தான்" (6:35)

என்ற பாடலில் இறைவனே விடம் தீர்ப்பவன் தோற்றத்தில் வந்ததைக் காட்டிய பண்டாரத்தார், இறைவன், தன் உருவத்துடன் தோன்றியதையும் அந்தப் புராணச் செய்யுளைச் சான்று காட்டிக் குறிப்பிட்டுள்ளார்.

"கசிந்த எம்பிரான் தன்உரு வெளிப்படக் காட்டி
வசந்த குத்தன் மாமகள்தனை வணிகனை மகிழ்ந்தே

*இசைந்த நல்லியாழ்க் காந்தருவத்தினர் விவாகம்*
*இசைந்து காதலித்து இருவரும் மணத்திர் என்று*
*இசைத்தான்" (6:36)*

இப்பாடலின் 'கசிந்த எம்பிரான் தன்உரு வெளிப்படக் காட்டி' என்னும் தொடர் வாயிலாக இறைவன் தன் உருவத்தைக் காட்டியதை அறிய முடிகிறது. இறைவன்தான் அந்த வணிகனை உயிர்ப்பித்தான் என்று நிலைநாட்டிய பண்டாரத்தார், அந்த நிகழ்வில் திருஞானசம்பந்தர் இடம்பெறவில்லை என்பதற்குச் சான்று காட்டியுள்ளார்.

திருஞானசம்பந்தர் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் என்று மனோன்மணீயம் சுந்தரனார் தமது திருஞானசம்பந்தர் காலம்' என்னும் ஆங்கில நூலில் குறிப்பிட்டுள்ளார். இரண்டாம் நூற்றாண்டிலேயே சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ள நிகழ்ச்சிக் குறிப்பு ஒன்றில், ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தரும் இடம் பெற்றிருந்தார் என்று கூறுவது பொருந்தாது என்றும் பண்டாரத்தார் வலியுறுத்தியுள்ளார்.

அடுத்து, வணிகனின் இளைய மனைவி சாட்சியாகக் காட்டிய பொருள்களாகத் திருவிளையாடல் புராணம் வன்னி மரம், கிணறு, இலிங்கம் ஆகிய மூன்றையும் தெரிவித்துள்ளது பற்றி,

*"கன்னியை ஈன்ற ஞான்றே உனக்கென்று உன் காதல் மாமன்*
*உன்னியது உறவின் உள்ளார் அறிவரே உனக்கு ஈது அன்றி*
*வன்னியும் கிணறும் இந்த இலிங்கமும் கரிகள் மைந்தா*
*இந்நிலை வதுவை செய்தீ எம்முரை கடவாது என்றார்" (64:31)*

என்னும் பாடல் இதை உறுதிப்படுத்துகிறது.

திருப்புறம்பய புராணமோ வன்னிமரம், மடைப்பள்ளி, கிணறு, இலிங்கம் ஆகிய நான்கையும் சாட்சிகளாகத் தெரிவித்துள்ளது.

*"அன்ன தன்மையின் மதுரையின் போந்து நின்னருளால்*
*பின்னர் நன்மணம் புரிகுதும் என்றதும் பெரியோன்*
*வன்னி, வன்னிசேர் மடைப்பளி, மலிபுனல், கூறும்*
*இன்னநம் வடிவு இவைஎலாம் கரி என எண்ணி" (6:41)*

என்னும் பாடலில் மேற்கூறிய நான்கும் சான்றுகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

சிலப்பதிகாரத்தின் வஞ்சின மாலையில் 'வன்னி மரமும் மடைப்பளியும்' சான்றாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றை நன்கு ஆராய்ந்த பண்டாரத்தார்,

1. திருவிளையாடல் புராணம் : வன்னி, கிணறு, இலிங்கம்
2. திருப்புறம்பய புராணம் : வன்னி, கிணறு, மடைப் பள்ளி, இலிங்கம்
3. சிலப்பதிகாரம் : வன்னி, மடைப்பள்ளி

என்னும் மூன்றிலும் இடம் பெற்றுள்ள நான்கு பொருள்களும் திருப்புறம்பய புராணம் ஒன்றிலேயே இடம் பெற்றுள்ளதால் அவை நான்குமே சாட்சிகள் என்று தெளிவுபடுத்தியுள்ளார்.

திருவிளையாடல் புராணத்தில் வணிகனின் ஊர் என்று கடற்கரைப்பட்டினம் ஒன்று குறிப்பிடப்பட்டுள்ளது. திருப்புறம்பய புராணத்தில் வணிகனின் ஊர் என்று காவிரிப்பூம்பட்டினமே குறிப்பிடப்பட்டுள்ளது. அக்காலத்தில் பட்டினம் என்னும் சொல் காவிரிப்பூம்பட்டினத்தையே குறித்ததால் திருப்புறம்பயபுராணம் தெரிவிக்கும் காவிரிப்பூம்பட்டினமே அந்த வணிகனின் ஊர் என்று பண்டாரத்தார் தெரிவித்துள்ளார்.

இந்தத் திருவிளையாடல் புராணத்தின் 64ஆம் படல ஆராய்ச்சி என்னும் ஆய்வின் வாயிலாகப் பண்டாரத்தார் தெரிவிப்பவை பின்வரும் நான்கும் தாம்:

1. பெரியபுராணத்தில் இடம் பெறும் நிகழ்வும் திருவிளையாடல் புராணத்தில் இடம் பெறும் நிகழ்வும் வேறு வேறானவை.
2. திருவிளையாடல் புராணத்தில் பாம்பு கடித்து இறந்த வணிகனை உயிர்ப்பித்தது திருஞான சம்பந்தர் அல்லர்; சிவபெருமானே தான்.
3. வணிகனின் இளைய மனைவி சாட்சியாக அழைத்த பொருள்கள் நான்கு. அவை, வன்னியும் கிணறும் மடைப்பள்ளியும் இலிங்கமும் ஆகும்.
4. வணிகன் வாழ்ந்த ஊராகக் குறிப்பிடப்படும் ஊர் காவிரிப்பூம்பட்டினம்.

## திருவள்ளுவரும் ஞானவெட்டியும்

'ஞானவெட்டி' என்பது தமிழ் இலக்கியங்களில் ஒன்று. இந்த நூலை இயற்றியவரின் பெயரும் திருவள்ளுவர் என்பது தான். எனவே,

திருக்குறளை இயற்றிய திருவள்ளுவரும் 'ஞானவெட்டி'யை இயற்றிய திருவள்ளுவரும் ஒருவரே என்னும் கருத்து முன்னர்த் தமிழ்நாட்டில் நிலவியது. இருவரும் ஒருவர் அல்லர்; வேறு வேறானவர்கள் என்பதைப் பண்டாரத்தார் தமது ஆய்வின் மூலம் நிலை நாட்டியுள்ளார்.

'ஞானவெட்டி' எழுதிய திருவள்ளுவர்,

**"பெருநூல்கள் ஆயிரத்தைந்நூறு இந்நூல்**
**முன்னமே யான் பாடி விட்டேன் ஆயிரத்து முந்நூறு**
**முடித்து வைத்தேன் குறளதுவாய் உலகோர்க்கு ஆண்டே"** (1737)

என்னும் பாடலில் தாமே ஆயிரத்து முந்நூறு பாடல்களைக் குறளாய் முன்பே எழுதி முடித்து விட்டேன் என்று பாடியுள்ளார். இதைக் கருத்தில் கொண்டே திருக்குறளும் ஞானவெட்டியும் ஒருவரால் இயற்றப் பெற்றவை என்று கூறுதல் பொருந்தாது என்று பண்டாரத்தார் குறிப்பிட்டதுடன் அதற்கான சான்றையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

ஞானவெட்டியில் இடம் பெறும் ஒரு பாடலில்,

**"வியாசர் சொல்லும் பாரதத்தில் வெகுபொய் வீணாம்**
**மேதினியோர் மாய்கையினில் விருப்பம் சொன்னார்**
**ஆய்ந்து கவிபாடிவிட்டான் கம்பன் வம்பன்**
**அதீத ராமாயணத்தில் அநேகம் பொய்தான்**
**சாயாமல் அதிவீரபாண்டியன் சொல்லும்**
**தமயந்தி சரித்திர நைடதமும் சொன்னார்**
**சுயமாகா துதிகவிகள் சுத்தப் பொய்தான்,**
**தொடுகவி மாணிக்கவாசகர் சொன்னாரே"** (579)

என்னும் பாடலில் வியாசர், கம்பர், அதிவீரராமபாண்டியன், மாணிக்கவாசகர் முதலானோர் இயற்றிய நூல்களைப் பொய் என்று இழிவுபடுத்திக் குறிப்பிட்டுள்ளார்.

இவர்களில் கம்பர் 12ஆம்நூற்றாண்டினர் என்பதை ரா. இராகவையங்கார், செந்தமிழ் 3ஆம் தொகுதி, ஆறாம் பகுதியில் ஆய்ந்து தெரிவித்துள்ளார். அதிவீரராம பாண்டியன் 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பதைத் தென்காசிக் கோபுரத்தில் காணும் சிலாசாசனங்கள் தெரிவிக்கின்றன.

திருக்குறள் கடைச்சங்கத்தில் அரங்கேறியது என்பதைத் திருவள்ளுவமாலை தெரிவிக்கிறது. மூன்றாம் சங்கமாகிய

கடைச்சங்கம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் திருக்குறளை இயற்றிய திருவள்ளுவரே பிற்காலப் புலவர்களைப் பற்றிய குறிப்புகளைத் தரும் 'ஞானவெட்டி' என்னும் நூலையும் படைத்தார் என்பது சற்றும் பொருந்தாது என்பதைத் தமது ஆய்வின் முடிவாகப் பண்டாரத்தார் தெரிவித்துள்ளார்.

## கல்லாடமும் அதன் காலமும்

கல்லாடமும் அதன் காலமும் என்னும் ஆய்வுக் கட்டுரையின் வாயிலாகக் கல்லாடர் என்னும் பெயரில் இரண்டு புலவர்கள் இருந்ததாகப் பண்டாரத்தார் தெரிவிக்கிறார். ஒருவர் சங்கப்புலவர் இன்னொருவர் கல்லாடத்தை இயற்றியவர். கல்லாடத்தை இயற்றிய கல்லாடர் கி.பி. 13ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் வாழ்ந்தவர் என்பதையும் பண்டாரத்தார் இந்த ஆய்வுக் கட்டுரையின் வாயிலாக நிறுவியுள்ளார்.

கல்லாடம் என்னும் நூல் சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அகப் பொருள் துறையில் கல்லாடரால் இயற்றப் பெற்றது. இது கடவுள் வாழ்த்துடன் 103 ஆசிரியப் பாக்களைக் கொண்டது. கல்லாடத்தை இயற்றிய கல்லாடர் கடைச் சங்கப் புலவர் என்னும் கருத்தைப் பண்டாரத்தார் மறுத்து உரைத்துள்ளார். இதற்கு அரணாகப் பலசான்றுகளையும் அவர் காட்டியுள்ளார்.

மாணிக்கவாசகர் இயற்றிய திருக்கோவையார் என்னும் நூலில் உள்ள செய்யுள்களில் நூறு செய்யுள்களின் கருத்துகள் அடங்கிய அகப்பொருள் துறையாகக் கல்லாடனார் கல்லாடத்தை இயற்றினார் என்னும் கூற்றிலிருந்து மாணிக்கவாசகர் காலத்திற்குப் பிற்பட்டவர் கல்லாடர் என்பது தெளிவாகிறது.

மாணிக்கவாசகர், சங்ககாலத்துக்கும் பிற்பட்டவர் என்பதை அவரது பாடல்கள் வாயிலாகவே அறிந்து கொள்ள முடியும்.

"சிறைவான் புனல்தில்லைச் சிற்றம்பலத்தும்
என் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதில் கூடலில் ஆய்ந்த ஒண்தீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனையோ அன்றி ஏழிசைச் சூழல்புக்கோ
இறைவா! தடவரைத் தோளுக்கு என்கொலாம் புகுந்து
எய்தியதோ"

(திருக்கோவையார்: 20)

இப்பாடலில் 'கூடலில் ஆய்ந்த' என்னும் தொடரால் மதுரையில் இருந்த சங்கத்தில் ஆய்ந்த என்னும் இறந்த காலப்பொருள் விளங்குகிறது. எனவே, சங்ககாலத்திற்கும் பின்னர் வாழ்ந்தவர் மாணிக்க வாசகர் எனத் தெளியலாம். கூன்பாண்டியனும் திருஞானசம்பந்தரும் கி.பி ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர்கள் என்று மனோன்மணீயம் சுந்தரனார் ஆய்ந்து தெரிவித்துள்ளார். இந்தக் கூன்பாண்டியனுக்குப் பத்துத் தலைமுறைக்கு முன்பு வாழ்ந்த அரிமர்த்தன பாண்டியனே மாணிக்க வாசகரை மந்திரியாகக் கொண்டிருந்தான். ஒரு தலைமுறையை 25 ஆண்டுகள் என்று எடுத்துக் கொண்டால் பத்துத் தலைமுறைக்கு 250 ஆண்டுகள் ஆகும். கூன்பாண்டியன் ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஆட்சி செய்ததை அறிய முடிவதால் அதிலிருந்து 250 ஆண்டுகளைக் கழித்தால் அரிமர்த்தன பாண்டியனின் ஆட்சிக் காலம் வரும். அரிமர்த்தன பாண்டியனின் அமைச்சராக மாணிக்க வாசகர் இருந்ததால் அவரது காலம் நான்காம் நூற்றாண்டின் பிற்பகுதி எனத் தெளியலாம்.

மாணிக்க வாசகர் இயற்றிய திருக்கோவையாருக்குக் கல்லாடர் அகப்பொருள் துறைப்பாடல் இயற்றியதால் அவரது காலத்திற்கும் பிற்பட்டவர் கல்லாடர் என்று அறிய முடிகிறது.

மேலும் கல்லாடத்திலேயே தருமிக்குப் பொற்கிழி அளித்தது, இறையனார் களவியல் உரைத்தது, நக்கீரர் இயற்றிய கோபப்பிரசாதம், பெருந்தேவபாணி முதலிய நூல்களைச் சோமசுந்தரக் கடவுள் கேட்டருளியது முதலியவற்றைக் கல்லாடர் பாடியிருப்பதால் இந்நூல் சங்ககாலத்திற்குப் பிற்பட்டது என்று ஆய்ந்து கூறியுள்ளார்.

சேரமான் பெருமாள் நாயனாருக்கு ஆலவாய் இறைவன் திருமுகம் அனுப்பிய குறிப்பு உள்ள,

> **"பரிபுரக்கம்பரை இரு செவி உண்ணும்**
> **குடக்கோச் சேரன் கிடைத்திதுகாண்கென**
> **மதிமலிபுரிசைத் திருமுகம் கூறி**
> **அன்புருத் தரித்த இன்பிசைப் பாணன்**
> **பெறநிதி கொடுக்கென உற விடுத்தருளிய**
> **மாதவர் வழுத்தும் கூடற்கு இறைவன்"** *(12:25-30)*

என்னும் கல்லாடச் செய்யுள் வாயிலாகச் சேரமான் பெருமாள் நாயனாருக்கும் பிற்பட்டது கல்லாடம் என்பதைத் தெரிவித்துள்ளார்.

நச்சினார்க்கினியர், பேராசிரியர், அடியார்க்கு நல்லார், பரிமேலழகர் முதலான உரையாசிரியர்களில் யாரும் கல்லாடப் பாடல் எதையும் மேற்கோள் காட்டவில்லை. இந்த உரையாசிரியர்களின் காலம் 13ஆம் நூற்றாண்டு. எனவே, கல்லாடத்தின் காலம் 13ஆம் நூற்றாண்டின் பிற்பட்டது என்று தமது இலக்கிய ஆய்வின் வாயிலாகப் பண்டாரத்தார் வெளிப்படுத்தியுள்ளார்.

13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்லாடத்தைச் சங்ககால நூல் என்று ஏன் குறிப்பிட்டார்கள் என்னும் வினாவுக்கு உரிய விடையையும் பண்டாரத்தார் தமது ஆய்வில் தெளிவு படுத்தியுள்ளார்.

நான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகத்தில்,

"கல்லாடத்துக் கலந்தினிதருளி"

என்னும் தொடர் இடம் பெற்றுள்ளது. இதைக் கருத்தில் கொண்டே கல்லாடத்தைக் கடைச்சங்க நூல் என்ற சிலர் எண்ணியுள்ளனர். ஆனால், இதில் இடம் பெற்றுள்ள 'கல்லாடத்து' என்னும் சொல் கல்லாடம் என்னும் நூலைக் குறிப்பிடவில்லை; கல்லாடம் என்னும் ஊரைக் குறிப்பிடுகிறது என்று தெரிவித்த பண்டாரத்தார், கல்லாடம் என்னும் ஊரைச் சேர்ந்தவர்கள்தாம் சங்ககாலக் கல்லாடரும் பிற்காலக் கல்லாடரும் என்று குறிப்பிட்டுள்ளார்.

திருவாசகத்தில் இடம் பெற்றுள்ள 'கல்லாடத்து' என்னும் சொல் 'கல்லாடம்' என்னும் ஊரைக் குறிப்பிடுவதாகவே அதற்கு உரை எழுதியுள்ள ஜி. வரதராஜன் அவர்களும் குறிப்பிட்டுள்ளார்கள்.

கல்லாடர் கடைச்சங்கப் புலவர் என்பதற்குப் பின்வரும் கல்லாடச் சிறப்புப் பாயிரச் செய்யுள்களும் காரணமாய் இருந்துள்ளன.

"வாய்ந்த பொருட்டு ஒருபொருளாய்க் கலைவாணிக்கு
அருள்கொழிக்கும் அன்பர்ப் பாரி
வாய்ந்த முதுதமிழ் வடித்துக் கல்லாடம் என ஒரு நூல்
அருளியிட்டார்
தேய்ந்த மதிச்சடைப் பரமர் கருணை பெறச் சங்கமுது
செல்வர் வாழ்த்தக்
காய்ந்த புலனடக்கி உயர்பெருஞானம் பழுத்தருள்கல்
லாட னாரே"

"கல்லாடர் செய்பனுவல் கல்லாடநூறு நூல்
வல்லார் சங்கத்தில் வதிந்து அருளிச் – சொல்லாயு
மாமதுரை ஈசர் மனமுவந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறுதரம்"

இந்தச் சிறப்புப் பாயிரச் செய்யுள்கள் பிற்காலத்தில் எழுதிச் சேர்க்கப்பட்டவை. இவற்றை எழுதிய புலவர்கள் இவரைச் சங்க காலக் கல்லாடர் என்று தவறாகக் கருதியதால் இவ்வாறு எழுதிவிட்டனர் என்று பண்டாரத்தார் தெளிவுபடுத்தியுள்ளார்.

## இலக்கிய ஆய்வில் வரலாற்றுச் செய்திகள்

பண்டாரத்தார் தாம் மேற்கொண்ட இலக்கிய ஆய்வுகளின் வழியாகச் சில வரலாற்று உண்மைகளை வெளிப்படுத்தியுள்ளார். அவ்வாறு அவர் தெரிவித்துள்ள செய்திகளைக் காண்போம்.

## சோழன் கரிகாலன்

'கரிகாலனைச் சோழன் கரிகால் வளவன் என்றும் சோழன் கரிகால் பெருவளத்தான் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இவனது காலத்திற்குப் பின்னர்க் கரிகாலன் என்ற பெயரில் பலர் ஆட்சி செய்துள்ளனர். எனவே கரிகால் வளவனை முதலாம் கரிகாலன் என்று கூறுவது பொருத்தம் உடையது' (சதாசிவ பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள் ப. 6) என்று குறிப்பிட்டுள்ளார்.

கரிகாலன் கி.பி. 55 முதல் 95 வரை ஆட்சி செலுத்தினான் என்று ஆராய்ச்சி அறிஞர்கள் தெரிவிக்கும் கருத்தை ஏற்றுக் கொண்டு பண்டாரத்தார் ஆய்வு மேற்கொண்டுள்ளார். குடிமக்களின் மனம் போல் நல்லாட்சி புரிந்தவன் கரிகாலன் என்பதற்கு அவன் நரைமுடி தாங்கி நீதி உரைத்ததைச் சான்றாகச் சுட்டியுள்ளார்.

"இளமை நாணி முதுமை எய்தி
உரைமுடிவு காட்டிய உரவோன்" (பளிக்கறை: 107 – 108)

என்னும் மணிமேகலை அடிகளும்,

"உரைமுடிவு காணா இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப – நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்" (21)

என்னும் பழமொழிப் பாடலும் கரிகாலன் நரைமுடிதாங்கியதைத் தெளிவுபடுத்துகின்றன.

நீதி வழங்க இயலாத இளமை உடையவன் என்று தம் குடிமக்களில் முதியோர் கூறியதால் அவர்களின் விருப்பப்படியே முதுமைக் கோலத்துடன் நீதி வழங்கியதால் குடிமக்கள் மனம்போல் கரிகாலன் நல்லாட்சி நடத்தியுள்ளான் என்று பண்டாரத்தார் எடுத்துரைத்துள்ளார்.

கரிகாலன் தனது ஆட்சிக் காலத்தில் காடுகளை நாடாக்கியும் கால்வாய், குளங்கள் அமைத்து நீர்வளத்தைப் பெருக்கியும் சோழ நாட்டை வளப்படுத்தியுள்ளான் என்பதற்கு,

"காடு கொன்று நாடாக்கிக்
குளம் தொட்டு வளம் பெருக்கிப்
பிறங்குநிலை மாடத்து உறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ
வாயிலொடு புழை அமைத்து" (283-287)

என்னும் பட்டினப்பாலை அடிகளைச் சான்று காட்டியுள்ளார்.

கரிகாலனின் துறைமுகப் பட்டினமாகிய காவிரிப் பூம்பட்டினத்தில் ஏற்றுமதியும் இறக்குமதியும் பெருமளவில் நடைபெற்றன.

"நீரினின்று நிலத்தேற்றவும்
நிலத்தினின்று நீர் பரப்பவும்
அளந்தறியாப் பல பண்டம்
வரம்பறியாமை வந்து ஈண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலி பொறித்துப் புறம் போக்கி" (129-135)

என்னும் பட்டினப்பாலை அடிகள் இதை மெய்ப்பிக்கின்றன என்று ஆய்ந்து அறிவித்துள்ளார்.

### சோழன் செங்கணான்

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராகக் குறிக்கப்படுவர் கோச்செங்கண் சோழ நாயனார் என்பவர். இவர் முற்பிறவியில் சிலந்தியாக இருந்து செய்த சிவத்தொண்டினால் இப்பிறப்பில் சோழ மன்னனாகப் பிறந்தார் என்று பெரியபுராணம் தெரிவிக்கிறது.

இதே கருத்தைத் திருஞானசம்பந்தர் தமது தேவாரத்தில்,

"சிலந்தி செங்கண் சோழன் ஆகச் செய்தான்"
(இரண்டாம் திருமுறை, அரிசில்கரைப்புத்தூர்: 7)

என்று குறிப்பிட்டுள்ளார்.

"சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழல் பந்தர் செய்து
உலந்து அவண் இறந்த போதே கோச் செங்கணானும் ஆகக்
கலந்த நீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனில் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனாரே"
(நான்காம் திருமுறை: குறுக்கை: 4)

என்று திருநாவுக்கரசர் பாடியுள்ளார்.

"திருவும் வண்மையும் திண்திறல் அரசும்
சிலந்தியார் செய்த செய்பணி கண்டு
மருவுகோச் செங்கணான் தனக்களித்த
வார்த்தை கேட்டு நின்மலரடி அடைந்தேன்"
(ஏழாம் திருமுறை, திருநின்றவூர்: 1)

என்று சுந்தரர் பாடிய பாடலாலும் முற்பிறவியில் சோழன் செங்கணான் சிலந்தியாக இருந்தான் என்பதை அறிய இயலும் என்று பண்டாரத்தார் சுட்டிக் காட்டியுள்ளார்.

சோழன் செங்கணான் பெருவீரத்துடன் விளங்கிச் சேர பாண்டிய நாடுகளைக் கைப்பற்றியுள்ளான் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

"களவழிக் கவிதை பொய்கை உரைசெய்ய உதியன்
கால்வழித் தளையை வெட்டி அரசிட்ட அவனும்"
(இராச: 196)

என்னும் கலிங்கத்துப் பரணிப் பாடல், செங்கணான் கழுமலம் என்னும் இடத்தில் நடைபெற்ற போரில் சேரன் கணைக்கால் இரும்பொறையை வெற்றி கொண்டதையும், பொய்கையார் என்னும் புலவர் பாடிய களவழி நாற்பது என்னும் நூலுக்காக அவனை விடுதலை செய்ததையும் அறிய முடிகிறது. இதன் மூலம் சேரனைச் செங்கணான் வென்றதைத் தெரிவித்துள்ள பண்டாரத்தார், பாண்டியனைச் செங்கணான் வென்றதற்குப் பின்வரும் சான்றுகளைத் தந்துள்ளார்.

"மின்னாடு வேலேந்து விளந்தை வேளை
விண்ணேறத் தனிவேல் உய்த்து உலகமாண்ட
தென்னாடன் குடகொங்கன் சோழன்"
(பெரியதிருமொழி 6:6:5)

என்னும் பாடல் அடிகள் தென்னாட்டை ஆண்ட பாண்டியனை வென்று தென்னாடன் என்னும் பெயரைப் பெற்றதைத் திருமங்கை ஆழ்வார் பாசுரத்தின் துணையுடன் சதாசிவ பண்டாரத்தார் விளக்கியுள்ளார்.

கோச்செங்கணான் வடநாட்டையும் வென்றவன் என்பதை விளக்குவதற்கு,

"தென்தமிழன் வடபுலக் கோன் சோழன்"
(பெரியதிருமொழி 6:6:5)

என்னும் அடியைச் சான்றாகக் காட்டியுள்ளார்.

சோழன் செங்கணான் உறையூரில் காவிரியில் நீராடிக் கொண்டிருந்தபோது அவனது முத்துமாலை ஆற்றில் விழுந்தது. உடனே அவன், 'ஆனைக் காவுடை அண்ணலே! தாங்கள் என் முத்தாரத்தை ஏற்றுக் கொள்வீர்களாக' என்று வேண்டினான். அந்த முத்துமாலை, காவிரியிலிருந்து திருவானைக்காவுக்குக் கொண்டு சென்ற மஞ்சனக் குடத்துடன் சென்றது. மஞ்சன நீராட்டும் போது அந்த முத்துமாலை, சிவனின் திருமேனியில் ஆரமாக விழுந்தது.

"தாரமாகிய பொன்னித் தண்துறை ஆடி விழுத்தும்
நீரின் நின்றடி போற்றி நின்மலா கொள் என ஆங்கே
ஆரம் கொண்ட எம்மானைக்காவுடை ஆதியை"
(ஏழாம் திருமுறை, திருவானைக்கா, 7)

என்னும் சுந்தரமூர்த்தி தேவாரத்தால் இச்செய்தி உறுதிப்படுத்தப் படுவதைப் பண்டாரத்தார் தெரிவித்துள்ளார்.

சோழன் கோச்செங்கணான், சோழர் குலத்தில் தோன்றியதையும் அவனது சிவபக்தியையும் வெளிப்படுத்திய பண்டாரத்தார் அவனது காலம் பற்றிய தமது கருத்தையும் இலக்கிய ஆய்வின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

திருஞானசம்பந்தர் தேவாரத்தில் செங்கணான் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளதால் இவர் ஏழாம் நூற்றாண்டுக்கும் முற்பட்டவர் என அறியலாம். கி.பி. நான்காம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரை பல்லவர்கள் சிறப்புற்று விளங்கியிருக்கிறார்கள். சேரரையும் பாண்டியரையும் வென்று பெருவேந்தராகத் திகழ்ந்த செங்கணான் இந்தப் பல்லவர்களின் காலத்திற்கு முன்பே சோழநாட்டை ஆட்சி செய்திருப்பார் என அறிய முடியும். முதல் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த கரிகாலனுக்குப் பின்னர்தான்

செங்கணான் ஆட்சி செய்திருக்க முடியும். கரிகாலனுக்குப் பின்னர் நான்கு சோழ மன்னர்களின் ஆட்சி நடந்திருக்கிறது. ஒவ்வொருவரின் ஆட்சிக் காலமும் 25 ஆண்டுகள் என்று வைத்துக் கொண்டால் 100 ஆண்டுகள் கழிந்த பிறகுதான் செங்கணான் ஆட்சி செய்திருக்க இயலும். மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சோழ நாட்டை ஆண்ட மன்னர்களைப் பற்றி அறிய இயலவில்லை. ஆனால் சோழன் செங்கணானின் வரலாறு தெளிவாகத் தெரிகிறது. எனவே சோழன் செங்கணானின் காலம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று பண்டாரத்தார் அறிவித்துள்ளார்.

## அதிகமான் நெடுமான் அஞ்சி

கடையெழு வள்ளல்களுள் ஒருவன் அதிகமான்நெடுமான் அஞ்சி. இவனை அதியமான் நெடுமான் அஞ்சி எனவும் நெடுமான் அஞ்சி எனவும் அஞ்சி எனவும் எழினி எனவும் கூறுவர். இவன் மழவர் குல மன்னனாக வாழ்ந்திருக்கிறான் என்பதை,

**". . . . . . . . .ஓங்குதிறல்**
**ஒளிறு இலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்"** (புறம்: 88)

**"வழுவில் வண்கை மழவர் பெரும"** (புறம்: 90)

என்னும் புறநானூற்று வரிகள் தெரிவிக்கின்றன என்கிறார்.

அதியமான் ஒளவைக்கு அரிய நெல்லிக்கனியைக் கொடுத்ததைப் புறநானூற்றின் 91ஆம் பாடல் தெரிவிக்கிறது.

**". . . . . . . . . மால்வரைக்**
**கமழ் பூஞ்சாரல் கவினிய நெல்லி**
**அமிழ்து விளைதீங்கனி ஒளவைக்கு ஈந்த**
**உரவுச் சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**
**அரவக் கடல் தானை அதிகனும்"** (99–103)

என்னும் சிறுபாணாற்றுப்படை அடிகளும் தெரிவிக்கின்றன.

தகடூரில் சேரனுக்கும் அதியனுக்கும் நடைபெற்ற பெரும்போரில் அதியன் இறந்திருக்கிறான் என்னும் செய்தியைப் பின்வரும் இலக்கியச் சான்றுகள் வாயிலாகப் பண்டாரத்தார் தெரிவித்துள்ளார்.

பதிற்றுப்பத்தின் எட்டாம் பத்தின் பதிகத்தில் தகடூரில் நடைபெற்ற போர் சேரமானுக்கும் அதியமானுக்கும் இடையே நிகழ்ந்ததாகவும் அப்போரில் சேரமானே வெற்றி பெற்றதாகவும்

செய்திகள் உள்ளன. மேலும் பெருஞ்சேரல் இரும்பொறையின் பெயருக்குமுன் உள்ள 'தகடூர் எறிந்த' என்னும் சொற்றொடர் அவனது வெற்றியைக் குறிப்பிடுவதையும் நாம் அறிய இயலும்.

தகடூரில் நடைபெற்ற போரில் அதியமான் இறந்தான் என்னும் செய்தியை ஔவையார் பாடிய புறநானூற்றுப் பாடல் வாயிலாக எடுத்துக் காட்டியுள்ளார் பண்டாரத்தார்.

> "கடல் கிளர்ந்தன்ன கட்டூர் நாப்பண்
> வெந்து வாய்மடித்து வேல்தலைப் பெயரி
> தோடு உகைத்து எழுதரூஉ துரந்து எறிஞாட்பின்
> வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி
> இடைப்படை அழுவத்துச் சிதைந்து வேறாகிய
> சிறப்புடையாளன் . . . . . . . . ." (புறம். 295)

என்பதே அப்பாடல்.

## ஓரி

ஆதன் ஓரி, வல்வில் ஓரி என்னும் பெயர்களால் அழைக்கப்படும் ஓரி, கடையெழு வள்ளல்களுள் ஒருவன். இவனும் மழவர் குலத்தில் தோன்றிய மன்னன் என்பதை,

> "வெம்போர் மழவர் பெருமகன் மாவள் ஓரி" (52)

என்னும் நற்றிணைப் பாடல் தெரிவிக்கிறது.

கொல்லி மலையை ஆண்ட மன்னன் ஓரி என்பதை,

> "ஓரி பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகம் 208)

> "வல்வில் ஓரி கொல்லிக் குடவரை" (குறுந் 100)

> "கொல்லி ஆண்ட வல்வில் ஓரியும்" (புறம் 158)

என்பன தெரிவிக்கின்றன.

அதியமானின் தாயத்தானாக விளங்கியவன் ஓரி. அதியமான், திருக்கோவலூர் மீது படையெடுத்துக் காரியைத் தோற்கடித்து அவன் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். தோற்ற காரி தனது நட்பு நாடாகிய சேரநாட்டை ஆண்ட மன்னன் பெருஞ்சேரல் இரும்பொறையிடம் தனது இன்னலைத் தீர்க்குமாறு வேண்டிக் கொண்டான். அதற்கு உடன்பட்ட இரும்பொறை முதலில் ஓரியின் மீது போர்தொடுத்து அவனை வென்றபின் அதியனை வெல்வது

எளிது என்று திட்டம் தீட்டினான். அதன்படி முதலில் ஓரியின் மீது போர் தொடுத்து அவனைப் போரில் கொன்றான்.

> 'குறும்பொறை நன்னாடு கோடியர்க்கு ஈந்த
> காரிக்குதிரை காரியொடு மலைந்த
> ஓரிக் குதிரை ஓரியும்" (சிறுபாண்: 109-111)

> "ஓரிக் கொன்ற ஒரு பெருந்தெருவில்
> காரி புக்க நேரார் புலம் போல்
> கல்லென் றன்றால் ஊரே" (நற். 320)

> "முள்ளூர் மன்னன் கழல்தொடிக்காரி
> செல்லா நல்இசை நிறுத்த வல்வில்
> ஓரிக்கொன்று சேரலர்க்கு ஈத்த
> செவ்வேர்ப் பலவின் பயம் கெழு கொல்லி" (அகம் 209)

என்னும் பகுதிகள் இதைத் தெரிவிக்கின்றன என்று ஓரி பற்றிய வரலாற்றுச் செய்திகளை இலக்கிய ஆய்வின் வழியாக வெளிப்படுத்தியுள்ளார் பண்டாரத்தார்.

கொல்லிமலையைப் பற்றியும் கொல்லிமலையை ஆண்ட ஓரியைப் பற்றியும் தெரிவித்த பின்னர் அங்கே அமைக்கப் பெற்ற கொல்லிப் பாவையைப் பற்றித் தெரிவிக்கவில்லை என்றால் அச்செய்தி முழுமைஅடையாது. எனவே பண்டாரத்தார், கொல்லிப்பாவை பற்றிய செய்தியையும் தமது ஆய்வில் சேர்த்துள்ளார்.

> ". . . . . . . . . கொல்லித்
> தெய்வம் காக்கும் தீதுதீர் நெடுங்கோட்டு
> அவ்வெள் அருவிக் குடவரையகத்து,
> கால்பொருது இடிப்பினும் கதழ்உறைகடுகினும்
> உரும் உடன்று எறியினும் ஊறுபல தோன்றினும்
> பெருநிலம் கிளரினும் திருநல உருவின்
> மாயா இயற்கைப் பாவை"

என்னும் நற்றிணைப் பாடலில் (201) பெருங்காற்று, பெருமழை, இடி முதலான இடையூறுகளால் கொல்லிப் பாவைக்கு எந்த ஊறும் ஏற்படாது என்னும் செய்தி தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்தக் கொல்லிப் பாவை கடவுளால் உருவாக்கப்பட்டது என்பதை,

*". . . . . . . . . கொல்லி*
*நிலைபெறு கடவுள் ஆக்கிய*
*பலர்புகழ் பாவை . . . . . . . . ." (அகம் 209)*

*"பெரும்பூண் பொறையன் பேஎம் முதிர் கொல்லிக்*
*கருங்கண் தெய்வம் குடவரை எழுதிய*
*நல்லியல் பாவை" (குறுந். 89)*

*". . . . . . . . . கொல்லிக் குடவரைப்*
*பூதம் புணர்ந்த புதிதியல் பாவை" (நறுந். 192)*

என்பன தெரிவிக்கின்றன என்று பண்டாரத்தார் குறிப்பிட்டுள்ளார்.

## மழவர் வரலாறு

அதியமான் நெடுமான் அஞ்சியையும் வல்வில் ஓரியையும் மழவர் குல மன்னர்கள் என்று குறிப்பிட்ட பண்டாரத்தார் மழவர் என்போர் யார் என்பதையும் தமது ஆய்வின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

மழவர்கள் சிறந்த வள்ளல்களாகவும் மூவேந்தர்க்கும் துணைப்படை உதவும் துணையாளர்களாகவும் விளங்கியுள்ளனர். இந்த மழவர்கள் தமிழ்க்குடியினரா அல்லது புலம் பெயர்ந்து வந்து தமிழ்நாட்டில் ஆட்சி நிறுவியவர்களா என்ற ஐயம் எழுகிறது. இந்த ஐயத்திற்கு, ஐயந்திரிபறுமாறு பண்டாரத்தார் விளக்கம் அளித்துள்ளார்.

பழங்காலத்தில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்று பொதுப்படையாக மக்களைப் பிரித்திருந்தனர். குறவர், ஆயர், உழவர், வேட்டுவர், பரதவர் என்று திணைப்பாகுபாட்டிற்கு ஏற்பவும் குடிகள் பிரிக்கப்பட்டிருந்தன. இத்தகைய பிரிவுகள் எதிலும் 'மழவர்' என்னும் குலப்பிரிவு இடம் பெறவில்லை. மேலே கூறப்பட்ட குடிகளில் ஏதேனும் ஒன்றைச் சார்ந்தவர்களாக மழவர்கள் இருந்திருக்க வேண்டும் அல்லது புலம் பெயர்ந்து வந்திருக்க வேண்டும்.

சேரநாட்டைச் சேர்ந்தவர்களைச் சேரர்கள் என்றும் சோழ நாட்டைச் சேர்ந்தவர்களைச் சோழர்கள் என்றும் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர்களைப் பாண்டியர்கள் என்றும் கூறுவது போல் மழ நாட்டைச் சேர்ந்தவர்களை மழவர்கள் என்கிறோம் என்று தமது கருதுகோளை நிறுவிய பண்டாரத்தார் அதை நோக்கி ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

மழவர்கள் பற்றிய செய்திகளை அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து முதலான நூல்கள்தெரிவிக்கின்றன.

"வண்டுபடத் ததைந்த கண்ணி ஒண்கழல்
உருவக் குதிரை மழவர் ஓட்டிய" (அகம் 1)

"நுழைநுதி நெடுவேல் குறும்படை மழவர்
முனைஆத்தந்து முரம்பின் வீழ்த்த" (அகம் 35)

"கடுங்கண் மழவர் களவு உழவு எழுந்த" (அகம் 91)

"சுவல்மாய் பித்தை செங்கண் மழவர்
வாய்ப்பகை கடியும்" (அகம் 101)

"உமண்சாத்து இறந்த ஒழிகல் அடுப்பில்
நோன்சிலை மழவர் ஊன் புழுக்கு அயரும்" (அகம் 119)

"உறுகண் மழவர் உருள் கீண்டிட்ட" (அகம். 121)

". . . . . . . . . செங்கோல்
கருங்கால் மராத்து வாஅல் மெல்இணர்
சுரிந்து வணர்பித்தை பொலியச்சூடி
கல்லா மழவர் வில்இடம் தழீஇ" (அகம். 127)

"கொழுப்பு ஆதின்ற கூர்ம்படை மழவர்" (அகம். 129)

"வீளை அம்பின் விழுத் தொடை மழவர்" (அகம்.131)

"வார்கழல் பொலிந்த வன்கண் மழவர்" (அகம் 187)

"செறிசுரை வெள்வேல் மழவர் தாங்கிய" (அகம். 269)

"பயம்நிரை தழீஇய கடுங்கண் மழவர்" (அகம். 309)

"தடிந்து உடன் வீழ்த்த கடுங்கண் மழவர்" (அகம். 337)

என்னும் அகநானூற்று அடிகளும்,

"எழுமரம் கடுக்கும் தாள்தோய் தடக்கை
வழுஇல் வண்கை மழவர் பெரும"

என்னும் புறநானூற்றுப் (90) பாடலும்,

"குவியர் கண்ணி மழவர் மெய்ம்மறை" (21)

"வால் ஊன் வல்சி மழவர் மெய்ம்மறை" (55)

"ஏனை மழவரைச் செருவில் சுருக்கி" (ஆறாம்பத்து, பதிகம்)

என்னும் பதிற்றுப்பத்து அடிகளும் மழவர்கள் பற்றிய செய்திகளைத் தருகின்றன.

மழவர்கள் வாழ்ந்த பகுதியை மழபுலம் என்றும் குறிப்பிடுவர்.

"கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம்"

என்னும் அகநானூற்று (61) அடிகள் இதைத் தெரிவிக்கின்றன.

தமிழ்நாட்டின் எந்தப் பகுதியில் இந்த மழநாடு உள்ளது என்பதை அறிய வேண்டியுள்ளது. தொல்காப்பிய உரையாசிரியர் யாரும் மழநாடு என்று ஒன்றைக் குறிப்பிடவில்லை. கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டு என்று குறிப்பிடப்பட்டுள்ள தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி, பன்றி, அருவா, அருவாவடதலை, சீதம், மலாடு, புனல்நாடு ஆகியவற்றில் மழநாடு இடம்பெறவில்லை.

"தாயவன் யாவுக்கும் தாள்சடை மேல்
தனித்திங்கள் வைத்த
தூயவன் பாதம் தொடர்ந்து
தொல்சீர்துளையால் பரவும்
வேயவன் மேல்மழநாட்டு
விரிபுனல் மங்கலக் கோன்
ஆயவன் ஆயனென்னை உவந்து
ஆண்டு அருளினனே"

என்னும் திருத்தொண்டர் திருவந்தாதி (15) மழநாட்டைக் குறிப்பிட்டுள்ளதைப் பண்டாரத்தார் தெரிவித்துள்ளார்.

"அங்கண் அகன்று அம்மருங்கில்
அங்கணர் தம்பதி பிறவும் அணைந்து போற்றிச்
செங்கமலப் பொதி அவிழச் சேல்பாயும்
வயல்மதுவால் சேறு மாறாப்
பொங்கொலி நீர் மழநாட்டுப் பொன்னி வடகரை
மிசைப் போய்ப் புகலி வேந்தர்
நங்கள் பிரான் திருப்பாச்சில் ஆச்சிரமம்
பணிய நண்ணும் போ"

(திருஞானசம்பந்த : 310)

என்னும் பெரியபுராணப் பாடலும் மழநாட்டைக் குறிப்பிடுகிறது. பெரியபுராணத்தின் ஆனாய நாயனார் புராணத்தின் முதலாம், ஏழாம் பாடல்களிலும் மழநாடு பற்றிய குறிப்பு உள்ளது. இக்குறிப்புகளால் சோழநாட்டில் மழநாடு என்னும் ஒரு பகுதி இருந்ததை அறியமுடிகிறது. ஆனால் சங்க இலக்கியங்களில் மழவர் பற்றிய குறிப்பு, சேரநாட்டுடன் இணைந்தே இடம் பெற்றுள்ளது. எனவே மழநாடு என்பது சேரநாட்டின் ஒரு பகுதியையும் சோழநாட்டின் ஒரு பகுதியையும் கொண்டதாக இருந்திருக்கும் என எண்ணுவதற்கு இடமுண்டு என்று பண்டாரத்தார் குறிப்பிட்டுள்ளார். இவற்றால் மழவர்கள், தமிழ்நாட்டின் பழங்குடியினர்தாம் எனத் தெளியலாம்.

### காளமேகப் புலவரது காலம்

இரட்டுற மொழிதலில் இணையிலாப் புலவராய் விளங்கியவர் காளமேகப் புலவர். அவரது வரலாறு தெளிவாக இதுவரை விளக்கப்படவில்லை என்னும் குறையைப் போக்கும் வகையில் அவரது காலம் பற்றிய ஆராய்ச்சியைப் பண்டாரத்தார் மேற்கொண்டுள்ளார். காளமேகப் புலவர் பாடல்களில் திருமலைராயன் என்னும் மன்னனின் பெயர் இடம் பெற்றுள்ளது. அவன் செய்த உதவியைப் பாராட்டிக் காளமேகப் புலவர் பாடிய பாடல் ஒன்று தமிழ்நாவலர் சரிதையிலும் உள்ளது.

திருமலைராயன் என்பானின் கல்வெட்டுகள் சோழ நாட்டில் உள்ள பாபநாசம், தஞ்சாவூர், திருவானைக்கா முதலான பகுதிகளில் காணப்படுகின்றன. மேலும் திருமலைராயன் ஆறு என்னும் ஆறும் இப்பகுதியில் ஓடுகிற காரைக்காலுக்குத் தெற்கே திருமலைராயன் பட்டினம் என்னும் ஊரும் உள்ளன. எனவே திருமலைராயன் இப்பகுதியில் ஆட்சி செலுத்தியிருக்க வேண்டும் எனத் துணியலாம்.

தஞ்சை இராசராசேச்சுரத் திருக்கோயில் கல்வெட்டு, திருமலைராயன் காலத்தைத் தெரிவிக்கிறது. இக்கல்வெட்டின் படி இவன் சாளுவ மன்னன் என்பதையும் அறிய முடிகிறது. திருமலைராயனால் ஆதரிக்கப்பெற்றவர் காளமேகப் புலவர். எனவே இவரது காலமும் பதினான்காம் நூற்றாண்டே என்று பண்டாரத்தார் தெளிவுபடுத்தியுள்ளார்.

பண்டாரத்தார் எழுதிய ஒன்பது ஆய்வுக் கட்டுரைகள் பற்றிய விளக்கம் இந்தக் கட்டுரையில் தரப்பட்டுள்ளது. இந்த ஆய்வுக் கட்டுரைகள் வாயிலாக அவர் வெளிப்படுத்திய செய்திகள் பின்வருமாறு:

'திருவிளையாடல் புராண அறுபத்து நான்காவது படல ஆராய்ச்சி' என்னும் கட்டுரையில் பெரியபுராணத்திலும் திருவிளையாடல் புராணத்திலும் தெரிவிக்கப்பட்டுள்ள வாணிகன் பற்றிய வரலாறு வேறு வேறானவை என்று தெரிவித்துள்ளார்; திருவிளையாடல் புராணத்தில் வணிகனை உயிர்ப்பித்தது திருஞானசம்பந்தர் அல்லர்; சிவபெருமானே என்று வெளிப் படுத்தியுள்ளார். வணிகனின் இளைய மனைவி சாட்சியாக நான்கு பொருள்களை இறைவன் அருளால் வரவழைத்துள்ளாள். கடற்கரைப்பட்டினம் என்று குறிப்பிடப்படும் நகரம் காவிரிப்பூம்பட்டினமே என்று தமது ஆய்வின் முடிவைத் தெரிவித்துள்ளார்.

திருக்குறள் எழுதிய திருவள்ளுவரும் ஞானவெட்டி எழுதிய திருவள்ளுவரும் ஒருவர் அல்லர் என்பதைத் 'திருவள்ளுவரும் ஞானவெட்டியும்' என்னும் ஆய்வின் வாயிலாகத் தெரிவித்துள்ளார்.

'கல்லாடமும் அதன் காலமும்' என்னும் ஆய்வின் வாயிலாகச் சங்ககாலக் கல்லாடரும் கல்லாடம் என்னும் நூலை இயற்றிய கல்லாடரும் வேறு என்று நிறுவியுள்ளார். கல்லாடம் எழுதப்பட்ட காலம் 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பதையும் அறிவித்துள்ளார்.

'சோழன் கரிகாலன்' என்னும் கட்டுரையின் வாயிலாகக் கரிகாலன் பற்றிய செய்திகளைத் திரட்டித் தந்துள்ளார்.

'சோழன் செங்கணான்' என்னும் கட்டுரையில் செங்கணான் பற்றிய அரிய செய்திகளுடன் செங்கணானின் காலம் மூன்றாம் நூற்றாண்டு என்றும் ஆய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.

'அதியமான் நெடுமான் அஞ்சி' பற்றிய கட்டுரையில் அவன் மழவர் குல மன்னன் என்பதை நிறுவியதுடன் அவன் தகடூரில் நடைபெற்ற போரில் மடிந்ததையும் இலக்கியச் சான்றுகளுடன் நிலைநாட்டியுள்ளார்.

'ஓரி' என்னும் கட்டுரையில் அவனும் மழவர் குல மன்னன் என்று கூறி அவனைப் பற்றிய தகவல்கள் அனைத்தையும் தந்துள்ளார்.

'மழவர் வரலாறு' என்னும் கட்டுரையின் வாயிலாக மழவர்கள் என்போர் தமிழ்க்குடியினர் என்பதையும் அவர்கள் ஆண்ட பகுதி சோழ நாட்டிலும் சேரநாட்டிலும் உள்ள நிலப்பகுதியின் ஒரு பகுதி என்றும் நிறுவியுள்ளார்.

காளமேகப் புலவரது காலத்தைப் பதினைந்தாம் நூற்றாண்டு என்று தமது ஆய்வின் முடிவாகத் தந்துள்ளார்.

இந்த ஒன்பது ஆய்வுக் கட்டுரைகளும் வெளியான இதழ்களின் பட்டியல்.

1. திருவிளையாடல் புராண அறுபத்து நான்காவது படல ஆராய்ச்சி: செந்தமிழ்: தொகுதி 12: 1914.
2. திருவள்ளுவரும் ஞானவெட்டியும்: செந்தமிழ்: தொகுதி 14: பகுதி 4: 1916.
3. கல்லாடமும் அதன் காலமும்: செந்தமிழ்: தொகுதி 15: பகுதி 3: 1917.
4. சோழன் கரிகாலன்: செந்தமிழ்: தொகுதி 12: பகுதி 5: 1914.
5. சோழன் செங்கணான்: செந்தமிழ்: தொகுதி 12: பகுதி 5: 1914.
6. அதிகமான் நெடுமான்அஞ்சி: செந்தமிழ்: தொகுதி 41: பகுதி 6, 7, 8: 1944.
7. ஓரி: தமிழ்ப்பொழில்: துணர்: 1: மலர்: 10.
8. மழவர் வரலாறு: தமிழ்ப் பொழில்: துணர்: 1: மலர்: 1.
9. காளமேகப் புலவரது காலம்: தமிழ்ப் பொழில்: துணர்: 7: மலர்:12.

## பயன் கொண்ட நூல்

சதாசிவ பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள்: அ. ம. சத்தியமூர்த்தி (தொகு), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

****

# ஊராய்வில் பண்டாரத்தாரின் பங்களிப்பு

அ.ம. சத்தியமூர்த்தி

வரலாற்றுப் பேரறிஞர் என்று தமிழுலகில் அனைவராலும் அன்போடு அழைக்கப்பெறும் பெருமைக்குரியவர் தி.வை. சதாசிவபண்டாரத்தார். இவர் கல்வெட்டு மற்றும் இலக்கிய ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டு சோழர் வரலாற்றைத் தேடி எழுதும் பணியைத் தமது வாழ்நாள் பணியாக ஏற்றுக் கொண்டவர். சோழ மண்டல ஊர்கள் பற்றிய ஆய்வில் பண்டாரத்தார்க்குப் பெரும் பங்கு உண்டு.

**வரலாற்று ஆர்வம்**

பண்டாரத்தாருக்கு முன்பாகவே கல்வெட்டுச் சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு சோழர் வரலாற்றை எழுதியவர் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார். அவருக்கும் முன்பாக து.அ.கோபிநாத ராயர் என்பவர் எழுதிய சோழ வமிச சரித்திரச் சுருக்கம் என்ற நூல் சோழர் வரலாறு பற்றிய சுருக்கமான நூலாகும். இந்த நூல், சோழர் வரலாற்றை விரிவாக எழுத வேண்டும் என்ற ஆர்வத்தைப் பண்டாரத்தார் மனத்தில் ஏற்படுத்தியது.

கும்பகோணம் நகர உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர்களாகப் பணியாற்றிக்கொண்டிருந்த வலம்புரி அ. பாலசுப்பிரமணிய பிள்ளை, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் ஆகியோர் கல்வெட்டுகளின் அருமை பெருமைகள் குறித்து வகுப்புகளில் கூறிவந்த செய்திகளால் அவர்களிடம் படித்த பண்டாரத்தாருக்குக் கல்வெட்டுகளைப் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது.

இக்காரணங்களால் தாமே தனியாகக் கல்வெட்டுகளைப் படித்துப் பயிற்சி பெற்ற இவர், அவ்வப்போது ஆய்வுக் கட்டுரைகளை எழுத ஆரம்பித்தார். இவரது ஆய்விற்கு இலக்கியங்களும் கல்வெட்டுகளும் சான்றுகளாக அமைந்தன. செந்தமிழ் இதழில் 1914இல் இவரெழுதி வெளியிட்ட 'சோழன் கரிகாலன்' என்னும் கட்டுரை இவரது முதல் கட்டுரையாகக் கருதப்படுகிறது. இக்கட்டுரையானது இவரது இருபத்திரண்டாம் வயதில் வெளிவந்ததாகும். இதனைத் தொடர்ந்து இவர், சோழ அரசர்கள் குறித்தும், சோழநாடு குறித்தும் தகவல்களைத் திரட்டி அவற்றின்

அடிப்படையில் தாம் ஆய்ந்து கண்ட முடிவுகளை இடைவிடாமல் பதிவு செய்யும் பணியையும் செய்து வந்தார்.

பண்டாரத்தார் தமிழக வரலாற்றின் பெரும் பகுதியைப் பதிவு செய்த போதும், இவரது 'பிற்காலச் சோழர் வரலாறு' என்னும் நூல் இவரது ஒட்டு மொத்த ஆய்வுகள் அனைத்திற்கும் மகுடம் சூட்டியது போன்று அமைந்த ஒன்றாகும். இவர் பிறந்த சோழ மண்ணில் பார்த்த இடமெல்லாம் வரலாற்றுக் குறிப்புகள் காணப்பட்டதன் காரணமாகவே சோழர் வரலாற்றை இவரால் சுவைத்துச் சுவைத்து எழுத முடிந்தது. தங்கள் 'ஊருக்கும் இவ்வளவு வரலாற்றுச் சிறப்பு இருக்கிறதே! என்று சோழநாட்டு மக்கள் வியக்கின்ற வகையில் ஊர்கள் பற்றிய ஆய்விலும் இவர் ஆழ்ந்த கவனம் செலுத்தியிருக்கிறார்.

## ஆய்வு எல்லை

முதலாம் இராசராசனது பதினேழாம் ஆட்சியாண்டில் சோழ நாடானது சோழ மண்டலம், இராசராசப் பாண்டி மண்டலம், சயங்கொண்ட சோழ மண்டலம், மும்முடிச் சோழ மண்டலம், முடிகொண்ட சோழ மண்டலம், நிகரிலிச் சோழமண்டலம், அதிராசராச மண்டலம், மலை மண்டலம், வேங்கை மண்டலம் என ஒன்பது மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. (பி.சோ.வ.* ப. 472)

சோழ மண்டலமானது முதலாம் இராசராசனின் பதினெட்டாம் ஆட்சியாண்டில் இராசேந்திர சிங்க வளநாடு, இராசாச்ரய வளநாடு, நித்த விநோத வளநாடு, க்ஷத்திரிய சிகாமணி வளநாடு, உய்யக்கொண்டார் வளநாடு, அருண்மொழிதேவ வளநாடு, கேரளாந்தக வளநாடு, இராசராச வளநாடு, பாண்டி குலாசனி வளநாடு என்று ஒன்பது வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. (ச.ப.ஆ.க.* ப. 73)

இந்தச் சோழ மண்டலத்தை இன்றைய நிலையில் குறிப்பிட வேண்டுமானால், ஒருங்கிணைந்த தஞ்சை மாவட்டத்தையும், ஒருங்கிணைந்த திருச்சிராப்பள்ளி, தென்னார்க்காடு மாவட்டங்களின் சில பகுதிகளையும் புதுக்கோட்டை மாவட்டத்தின் ஒரு பகுதியையும் தன்னகத்துக் கொண்ட ஒரு பெருநிலப் பரப்பாகும் எனலாம். இந்த நிலப்பரப்பே இக்கட்டுரைக்குரிய ஆய்வு எல்லையாகும்.

## ஊர்கள் பற்றிய ஆய்வு வரலாறு

தமிழகத்தின் ஊர்களைப் பற்றி விரிவான ஓர் ஆய்வினை மேற்கொண்டு 'தமிழகம் ஊரும் பேரும்' என்ற நூலை உருவாக்கிய

---

பி.சோ.வ: பிற்காலச் சோழர் வரலாறு.

ச.ப.ஆ.க: சதாசிவ பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள்.

பெருமைக்குரியவர் ரா.பி. சேதுப்பிள்ளை ஆவார். இவரது இந்தநூல் தமிழக ஊர்கள் பற்றிய ஒரு சிறந்த அறிமுக நூலாகும். இந்நூலின்கண் சோழ நாட்டு ஊர்கள் பற்றிய செய்திகளும் உண்டு. ஆயினும், பண்டாரத்தார்தான் சோழநாட்டு ஊர்களைப் பற்றிய விரிவான ஆய்வினை மேற்கொண்டவர் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

தனி நூல்கள் என்னும் வகையில் திருப்புறம்பயம், செம்பியன்மாதேவி, காவிரிப்பூம்பட்டினம் என்னும் ஊர்களைப் பற்றி முறையே இவரெழுதியுள்ள **திருப்புறம்பயத் தலவரலாறு, செம்பியன்மாதேவித் தலவரலாறு, காவிரிப்பூம்பட்டினம்** என்னும் நூல்கள் அமைகின்றன.

சோழநாட்டு ஊர்கள் பற்றிய கட்டுரைகள் என்னும் வகையில் இவரெழுதியுள்ள மிழலை நாடும் மிழலைக் கூற்றமும், பழையாறை நகர், நந்தனாரது ஆதனூர், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, கோவிந்தபுத்தூரிலுள்ள திருவிசயமங்கைக் கல்வெட்டுகள், பெருமிழலைக் குறும்ப நாயனாரது திருப்பதி, ஏர் என்னும் வைப்புத் தலம், செருத்துணையாரும் புகழ்த்துணையாரும் அவதரித்த திருப்பதிகள், அகநானூற்றின் உரையாசிரியரது ஊர், இடவையும் இடைமருதும் என்னும் கட்டுரைகளைச் சுட்டலாம்.

மேலும் இவர், பிற்காலச் சோழர் வரலாறு என்னும் நூலிலும் தமது பிற எழுத்துகளிலும் தேவைக்கேற்பச் சோழ நாட்டு ஊர்கள் குறித்து விரிவாக எழுதியுள்ளார்.

## பண்டாரத்தாரின் ஆய்வு பற்றிய ஆய்வுகள்

சோழநாட்டு ஊர்கள் பற்றிய பண்டாரத்தாரின் ஆய்வு முடிவுகள் இதுவரை மக்களிடம் சென்று சேரவில்லை என்றுதான் கூறவேண்டியுள்ளது. இப்பொழுது ஆய்வாளர்கள் பண்டாரத்தாரின் ஆய்வுகள் குறித்து விரிவான ஆய்வினை மேற்கொண்டுள்ளமை யினைக் காணலாம். அவ்வகையில் பேராசிரியர் அரங்க. மாயவன் என்பவர் 'தி.வை. சதாசிவ பண்டாரத்தாரின் தமிழாய்வு' என்னும் தலைப்பில் 1999இல் பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு அளித்த முனைவர் பட்ட ஆய்வேட்டின் ஓர் இயலாகப் 'பண்டாரத்தாரின் இடப்பெயராய்வு' என்னும் இயல் அமைந்துள்ளது.[1] அதன்கண், இடப்பெயர்கள் பற்றிய பண்டாரத்தாரின் ஒட்டுமொத்த ஆய்வானது பொதுநிலையில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. தற்பொழுது பாரதிதாசன் பல்கலைக் கழக எல்லையில் சோழநாட்டு ஊர்கள் பற்றிய பண்டாரத்தாரின் ஆய்வு குறித்து விரிவான முனைவர் பட்ட ஆய்வினைச் ச. செல்வசேகர் என்பவர் நிகழ்த்தி வருகிறார். இந்த ஆய்வு நிறைவுறும்போது மேலும் பல வரலாற்று உண்மைகள் தெளிவுபட வாய்ப்புகள் உண்டு.

## திருப்புறம்பயம் பற்றிய ஆய்வு

பண்டாரத்தாரது கல்வெட்டு ஆய்விற்குத் தொடக்கக் காலத்துக் களமாக அமைந்தது திருப்புறம்பயக் கோயிலாகும். அக்கோயில் தேவாரப் பாடல் பெற்ற தலமாக இருப்பதால் அதன் தொன்மையை விளங்கிக் கொள்ள முடிகிறது. ஆதித்த சோழனால் அக்கோயில் கற்றளியாக்கப்பட்டது. இவ்வாறு காலந்தோறும் விரிவடைந்து வந்த காரணத்தினால் அக்கோயிலில் பல கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

திருப்புறம்பயம் வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊராக இருந்ததோடு, அது பண்டாரத்தாரின் சொந்த ஊராக இருந்த காரணத்தாலும் திருப்புறம்பயத் தலவரலாற்றைத் தனி ஒரு நூலாக அவரெழுதினார். திருப்புறம்பயத்துக்கு அண்மையில் ஓடும் மண்ணியாற்றிற்குக் 'குஞ்சரமல்லன்' என்ற பெயர் வழங்கிற்று என்பது அக்கோயில் கல்வெட்டுச் செய்தியாகும் என்று பண்டாரத்தார் குறிப்பிடுகிறார். (தி.த.வ.* ப. 21)

மேலும், 'திருப்புறம்பயம் என்னும் கிராமம் சோழ மண்டலத்தில் இராஜேந்திர சிங்க வளநாட்டில் அண்டாட்டுக் கூற்றத்தில் நின்று நீங்கிய தேவதானம் என்பது கல்வெட்டுச் செய்தியாகும் என்பது போன்ற திருப்புறம்பயம் தொடர்பான பல வரலாற்றுச் செய்திகளை இவர் ஆய்ந்து உரைத்துள்ளார். (மேற்படி ப. 22).

## காவிரிப்பூம்பட்டினம்

பட்டினப்பாலையையும் சிலம்பையும் பெற்ற காவிரிப் பூம்பட்டினம் சோழர்களின் தலைநகராக இருந்து அடைந்த பெருமைகள் ஏராளம். எனவேதான் கடியலூர் உருத்திரங்கண்ணனார் அந்நகரைத் தமது பட்டினப்பாலையில் 'முட்டாச்சிறப்பின் பட்டினம்' எனக் குறிப்பிடுகிறார். அத்தகைய சிறப்பு வாய்ந்த காவிரிப் பூம்பட்டினம் குறித்து வரலாற்று நோக்கில் தமிழில் நூல்கள் எதுவும் காணப்படாத நிலையில் பூம்புகார் மாதவி மன்றத்தினரின் வேண்டுகோளுக்கிணங்கப் பண்டாரத்தாரால் எழுதப்பட்டதுதான் 'காவிரிப்பூம்பட்டினம்' என்னும் நூலாகும்.

காவிரிப்பூம்பட்டினம் குறித்த அவரது ஆய்வின் விளைவாக அம்மாநகரம் குறித்து அவர், 'பத்தொன்பதாம் நூற்றாண்டில் இலண்டன் மாநகரம் எப்படி விளங்கியதோ அதைவிட ஆயிரம்

---

1. அரங்க. மாயவன், தி.வை. சதாசிவ பண்டாரத்தாரின் தமிழாய்வு, பக். 89 - 116.

* தி.த.வ.: திருப்புறம்பயத் தல வரலாறு.

மடங்கு சிறப்பாகப் பூம்புகார் நகரம் விளங்கியதாக நாம் கூறலாம்' என எழுதுகிறார் (காவிரிப்பூம்பட்டினம் ப. 2).

## செம்பியன்மாதேவி

ஒருங்கிணைந்த தஞ்சை மாவட்டம், நாகப்பட்டினம் வட்டத்திலுள்ள ஒரு சிவத்தலம். செம்பியன்மாதேவி என்னும் ஊராகும். கண்டராதித்தன் மனைவியும் சோழப் பேரரசியுமான செம்பியன்மாதேவியின் பெயரில் வழங்கப்படும் இவ்வூருக்கும் வரலாற்றுச் சிறப்பு உண்டு. அச்சிறப்புகளையெல்லாம் பண்டாரத்தாரால்தான் சரியாக எழுத இயலும் என்று அக்கோவில் நிர்வாகத்தினர் முடிவு செய்து, அதனைப் பண்டாரத்தாரிடம் வேண்டுகோளாக விடுத்தபோது, அதனையேற்றுச் 'செம்பியன் மாதேவித் தலவரலாறு' என்னும் நூலை இவர் எழுதித் தந்தார்.

அந்த நூலின் செறிவினைக் கண்டு வியந்து போன கோயில் நிர்வாகத்தினர், நூல் பதிப்புரையில் 'இதுகாறும் வெளிவந்துள்ள தலவரலாறுகள் பல ஆராய்ச்சியுரை ஏதுமின்றிப் புராணத்தை அடிப்படையாகக் கொண்டு அப்படியே எழுதப்பட்டன. அக்குறையை நீக்கவே அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறை விரிவுரையாளரும் ஆராய்ச்சிப் பேரறிஞருமாகிய டி.வி. சதாசிவ பண்டாரத்தாரவர்கள் நுண்மாண் பொருள் மிக்க இவ்வரலாற்றை வரலாற்று அடிப்படையில் செந்தமிழ்ச்சுவை விஞ்சும்படி எழுதியுதவினார்கள்' என்று குறிப்பிடக் காணலாம். (செ.மா.த.* ப. 6).

இதுபோன்றே பலராலும் பேசப்படுகின்ற தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி முதலான ஊர்கள் குறித்தும் இவர் கட்டுரைகள் எழுதியுள்ளார். ஆயினும் வெளியில் தெரியாத ஊர்கள் பற்றிய இவரது ஆய்வுக் குறிப்புகளே மிகுதியாக உள்ளன.

## பழையாறை

கும்பகோணத்திற்குத் தென்மேற்கே மூன்று மைல் தூரத்தில் பழையாறு என்னும் பெயரில் இன்று ஒரு சிற்றூர் உள்ளது. அது முற்காலத்தில் பரந்துபட்ட ஒரு மாநகராக இருந்திருக்கிறது. காலப்போக்கில் அந்நகர் சிதைந்து, இன்று பல சிற்றூர்களாகக் காணப்படுகிறது. பிற்காலச் சோழர்கள் காலத்தில் ஒரு தலைநகராக விளங்கிய இந்தப் பழையாறை நகர் குறித்து ஆய்வாளர்கள் எவரும் விளக்கி எழுதாத நிலையில், எழுதத் தலைப்பட்டவர் பண்டாரத்தார்.

இந்தப் பழையாறை நகர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே சிறந்து விளங்கியது எனவும். கி.பி. எட்டாம் நூற்றாண்டில் நந்திவர்ம

---

* செ. மா. த. : செம்பியன் மாதேவித் தலவரலாறு.

பல்லவன் இந்நகரில் ஓர் அரண்மனையையும் நந்திபுர விண்ணகரம் என்னும் ஒரு திருமால் கோயிலையும் கட்டினான் எனவும் இவர் குறிப்பிடுகிறார். (க. அ. உ.* பக். 46 - 47).

பழையாறை நகரைத் தலைமையிடமாகக் கொண்டு அரசாட்சி செய்தவன் சுந்தரசோழன் என்பதனைக் கல்வெட்டுச் சான்றுகளுடன் விளக்கும் பண்டாரத்தார், 'அந்நகர், கும்பகோணத்திற்குத் தென்மேற்கே மூன்று மைல் தூரத்தில் பழையாறை என்னும் பெயருடன் இந்நாளில் ஒரு சிற்றூராக உள்ளது. அச்சிற்றூரையும் அதனைச் சூழ்ந்துள்ள முழையூர், பட்டீச்சரம், திருச்சத்திமுற்றம், சோழமாளிகை, அரிச்சந்திரபுரம், ஆரியப்படையூர், பம்பைப்படையூர், புதுப்படையூர், மணப்படையூர், கோணப் பெருமாள் கோயில், திருமேற்றளி, தாராசுரம், நாதன்கோயில் என்று வழங்கும் நந்திபுர விண்ணகரம் ஆகிய ஊர்களையும் தன்னகத்துக் கொண்டு முற்காலத்தில் பெரிய நகராக அஃது அமைந்திருந்தது என்பதைத் தேவாரப் பதிகங்களாலும் அவ்விடங்களில் காணப்படும் கல்வெட்டுக்களாலும் அறியலாம்' என எழுதுகிறார். (பி. சோ. வ. பக். 82 - 83).

மேலும், அவ்வூர்களின் பழைய பெயர்களையும் அவற்றின் இன்றைய வழக்கையும் ஒப்பிட்டு நோக்கிய பண்டாரத்தார் திருமத்தடி என்பது திருமேற்றளி என்பதன் மரூஉ எனவும், சோழமாளிகை என்பது சோழமன்னர்களின் அரண்மனை இருந்த இடம் எனவும், தாராசுரம் என்பது இராசராசபுரம் என்பதன் மரூஉ எனவும், நாதன்கோயில் என்பது நந்திபுர விண்ணகரம் அமைந்துள்ள இடம் எனவும், இராசேந்திரப்பேட்டையில் சோழர்களின் நாணயங்கள் அச்சடிக்கப்பட்டன எனவும், கோணப்பெருமாள் கோயில் என்பது கோபிநாதப்பெருமாள் கோயில் என்பதன் மரூஉ எனவும், பம்பைப்படை, ஆரியப்படை, புதுப்படை, மணப்படை என்னும் நான்கு படைவீடுகள் இருந்த இடங்கள் அப்பெயர்களோடு நான்கு சிற்றூர்களாக இன்றும் உள்ளன எனவும் ஆய்ந்து உரைக்கிறார் (க. அ. உ. ப. 53).

மேலும் அவர், அம்மாநகர் வெவ்வேறு அரசர் காலங்களில் வெவ்வேறு பெயர்களை எய்திச் சிறப்புற்றிருந்தது என்பது வெறும் புனைந்துரையன்று. அது கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பழையாறை நகர் எனவும், எட்டாம் நூற்றாண்டில் நந்திபுரம் எனவும், பதினொன்றாம் நூற்றாண்டில் முடிகொண்டசோழபுரம் எனவும், பன்னிரண்டாம் நூற்றாண்டில் இராசராசபுரம் எனவும் வழங்கப்பெற்றது என்பதைப் பண்டைத் தமிழ் நூல்களும்

---

* க. அ. உ: கல்வெட்டுக்களால் அறியப்படும் உண்மைகள்.

கல்வெட்டுக்களும் நன்கு உணர்த்துகின்றன என எழுதுகிறார். (பி. சோ. வ. பக். 82-83).

பழையாறை பற்றிய இதுபோன்ற வரலாற்றுச் செய்திகளைப் பண்டாரத்தார் ஆய்ந்து உரைத்திராவிட்டால் அம்மாநகரின் பெருமை வெளியுலகிற்குத் தெரிந்திருக்குமா என்பது ஐயம். பழையாறை பற்றிய இவரது இந்த விரிவான ஆய்விற்கு இவரது களப்பணியானது பேருதவியாக அமைந்தது.

## மண்ணி நாடு

சோழ மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் சோழ நாடானது பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதும், சோழ மண்டலம் பல வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதும், வளநாடுகளின் உட்பிரிவு நாடு அல்லது கூற்றம் என வழங்கப்பட்டது என்பதும் வரலாற்றுச் செய்தியாகும்.

இராசேந்திர சிங்க வளநாட்டின் உள்நாடுகளுள் ஒன்றான மண்ணி நாடு எனப்படுவது தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணம் காவிரியாற்றிற்கு வடக்கே மண்ணியாற்றிற்குத் தெற்கே அமைந்த ஒரு நிலப்பகுதியாகும் என்பதனைப் பண்டாரத்தார் ஆய்வின் மூலம் விளங்கிக் கொள்ள முடிகிறது.

இது குறித்து அவர், 'கும்பகோணத்திற்கு வடகிழக்கேயுள்ள திருவியலூர், வேப்பத்தூர், திரைலோக்கி, திருக்குடித்திட்டை, இடையாநல்லூர், திருப்பனந்தாள் முதலான ஊர்கள் மண்ணி நாட்டில் உள்ளவை என்பது கல்வெட்டுக்களால் புலப்படுகிறது' எனக் குறிப்பிடும் பகுதியால் விளங்கிக் கொள்ளலாம் (மேற்படி ப. 20).

## இடவை

ஆய்வுலகில் பலராலும் தவறாக மேற்கொண்ட முடிவுகள் பலவற்றைத் தமது ஆய்வின் மூலம் தெளிவுபடுத்தியவர் பண்டாரத்தார். இதற்குச் சான்றாக அமைவது தான் 'இடவையும் இடைமருதும்' என்னும் இவரது கட்டுரையாகும். (ச. ப. ஆ. க. பக். 100-102).

இடவை எனப்படுவது மண்ணி நாட்டில் இருந்த ஓர் ஊராகும். ஆயினும், திருவாசகத்தின் திருவார்த்தை என்ற பதிகத்திற்கு உரை எழுதிய ஒருவரும் திருப்பதியிலிருந்து வெளிவரும் கீழ்த்திசைக் கலைக் கழகப் பத்திரிகையில் மணிவாசகர் காலம் பற்றிக் கட்டுரை எழுதிய மற்றொருவரும் இடவை என்பது சோழ நாட்டிலுள்ள திருவிடைமருதூரே என்று எழுதியுள்ளதைக் கண்ட பண்டாரத்தார், இடவையும் இடைமருதும் ஒன்றா அல்லது வெவ்வேறு ஊர்களா என்ற ஆராய்ச்சியை மேற்கொண்டார்.

அதன் விளைவாக, இடவை எனப்படுவது காவிரியாற்றின் வடக்கே இராசேந்திர சிங்க வளநாட்டில் மண்ணி நாட்டிலுள்ள ஓர் ஊர் என்பதும் அப்பேராற்றிற்குத் தெற்கே உய்யக் கொண்டார் வளநாட்டில் திரைமூர் நாட்டிலுள்ள ஓர் ஊர் இடைமருது என்பதும் இவரது ஆய்வு முடிவாக அமைந்தது. இடைமருது எனப்படுவது திருவிடைமருதூராகும்.

மேலும், இடவை என்ற ஊர் எங்கு உள்ளது என்று ஆய்வு செய்யும் முயற்சியையும் இவ்வறிஞர் மேற்கொண்டார். இறுதியாக அவ்வூர் இருந்து அழிந்து போயிருக்க வேண்டும் அல்லது அஃது இன்று வேறு பெயரில் வழங்கிக்கொண்டிருத்தல் வேண்டும் என்ற முடிவிற்கு அவர் வந்தார். திருப்பனந்தாளுக்கு அண்மையில் மண்ணியாற்றிலிருந்து பிரிந்து சென்ற வாய்க்கால் ஒன்று 'இடவை வாய்க்கால்' என்ற பெயரைப் பெற்றிருந்ததாக அவ்வூர்க் கல்வெட்டு குறிப்பிடுவதாகவும் இவர் எடுத்துக்காட்டுகிறார்.[2]

## மிழலை நாடு

சோழர் காலக் கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் மிழலை நாடு, மிழலைக் கூற்றம் என்னும் இரண்டு தொடர்கள் காணப்படுகின்றன. ஆராய்ச்சி வல்லுநர்கள் சிலர் இவ்விரண்டும் ஒன்றே என்று கருதிய நிலையில் பண்டாரத்தார் இது குறித்த ஆய்வினை மேற்கொண்டார். அதன் விளைவாக இவர், மிழலை நாடு எனப்படுவது சோழ மண்டலத்தில் இருந்த ஒன்பது வளநாடுகளுள் ஒன்றாகிய இராசேந்திர சிங்க வளநாட்டின் உள்நாடுகளுள் ஒன்று என்று விளக்குகிறார்.

மேலும், இவர், இராசேந்திர சிங்க வளநாடு என்பது காவிரியாற்றின் வடகரையிலிருந்த ஒரு பெரு நிலப்பரப்பாகும் எனவும் குறிப்பிடுகிறார். இந்த வளநாடு இருபத்திரண்டு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதனை இவரது கல்வெட்டு ஆராய்ச்சி வெளிப்படுத்துகிறது (ச. ப. ஆ. க. ப. 85). அவற்றுள் ஒன்றே மிழலை நாடு எனவும் இவர் ஆய்ந்துரைக்கிறார்.

மிழலை நாடு எனப்படுவது சோழகேரளபுரம், சேய்ஞலூர், திருவாப்பாடி, மிழலை, திருந்துதேவன்குடி முதலான ஊர்களைத் தன்னகத்துக் கொண்டதாகும் எனக் குறிப்பிடும் பண்டாரத்தார், இந்த மிழலை நாட்டின் வரலாற்றுச் சிறப்பை உணர்த்தியதோடு நின்று விடாமல் மிழலை நாட்டு ஊர்களின் சிறப்பையும் விளக்குகிறார். அவ்வகையில், மிழலை நாட்டில் உள்ளதாகக் கல்வெட்டில் உணர்த்தப்படும் சோழ கேரளபுரம் என்பது இக்காலத்தில் சோழபுரம்

2. அ.ம. சத்தியமூர்த்தி (பதி.), ஆய்வுலகில் பண்டாரத்தார் பணிகள், ப. 77.

என வழங்குவதாகவும், சண்டேசுவரநாயனார் தோன்றிய சேய்ஞலூர் என்பது இன்று சேங்கனூர் என வழங்குவதாகவும் இவர் குறிப்பிடுகிறார் (க. அ. உ. ப. 39).

மேலும், சேங்கனூருக்கு அண்மையிலுள்ள திருவாப்பாடி எனப்படுவது சண்டேசுவரர் பூசித்த சிவலிங்கப் பெருமான் உள்ள தலமாகும் என்று இவர் சுட்டுகிறார். மிழலை எனப்படுவது சோழபுரத்திற்குத் தெற்கே ஒன்றரை மைலில் உள்ள ஓர் ஊர் எனவும், அது மிழலை நாட்டின் தலைநகரம் எனவும் இவர் அடையாளம் காட்டியுள்ளார்.

இந்த மிழலையானது பழங்காலத்தில் பெருமிழலை என வழங்கப்பெற்றது. அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான பெருமிழலைக் குறும்ப நாயனார் வாழ்ந்து வீடெய்தியது நன்னிலத்திற்கு அண்மையிலுள்ள திருவீழிமிழலை என்று பலர் கருதி வந்தனர். ஆயினும் சுந்தரர் மிழலை நாட்டு மிழலை, வெண்ணி நாட்டு மிழலை என்று இருவிதமான மிழலையைக் குறிப்பிடுவதையும், சேக்கிழார் தமது பெரியபுராணத்தில் குறும்ப நாயனாரது ஊர் 'மிழலை நாட்டு மிழலை' எனக் குறிப்பிடுவதையும் கண்ட இவ்வறிஞர் குறும்பநாயனாரது மிழலை திருவீழிமிழலையிலிருந்து வேறுபட்டது என்று முடிவிற்கு வந்தார்.

இது குறித்த ஆய்வினை மேற்கொள்வதற்காக மிழலைக்குச் சென்ற அவர், 'யாம் நேரிற் சென்று அதனைப் பார்த்தபோது அழிவுற்ற நிலையிலுள்ள ஒரு பழைய சிவாலயம் அங்கே காணப்பட்டது. எக்காரணத்தாலோ அச்சிவாலயமும் அதனைச் சூழ்ந்துள்ள ஊரும் அழிந்து போய்விட்டன. அவ்வூரினர் அதற்கருகிலுள்ள களம்பரம் என்ற ஊரில் குடியேறியுள்ளனர். மிழலையும் அதிலுள்ள சிவாலயமும் பழைய நாளில் நல்ல நிலையில் இருந்திருத்தல் வேண்டும். அழிவுற்ற அவ்வாலயத்திலுள்ள படிமங்கள் அதில் ஒரு புறத்தில் புதிதாக அமைக்கப் பெற்றுள்ள ஒரு சில அறையுள் வைக்கப் பெற்று வழிபாடு செய்யப்பட்டு வருகின்றன. அவ்விடத்தில் பெருமிழலைக் குறும்ப நாயனாரது படிமம் இன்றும் உள்ளது. ஆகவே, புலவர் பெருமானாகிய சேக்கிழார், குறும்பநாயனாரது திருப்பதியாகக் கூறியுள்ள பெருமிழலை மிழலை நாட்டிலுள்ள இம்மிழலையேயாதல் அறிந்து கொள்க' என எழுதுகிறார் (ச. ப. ஆ. க. ப. 85).

இதற்கு ஆதாரமாகப் பல கல்வெட்டுச் சான்றுகளையும் அவர் எடுத்துக் காட்டியுள்ளார். மிழலைக்கு அண்மையிலுள்ள திருந்துதேவன்குடி என்னும் ஊர் பாடல் பெற்ற தலமாகும்.

மிழலைக் கூற்றம் எனப்படுவது பாண்டி மண்டலத்தில் இருந்த உள்நாடுகளுள் ஒன்று என்பது இவரது ஆய்வு முடிவாகும் (க. அ. உ. ப. 44).

### சேங்கனூர்

முற்காலத்தில் சேய்நல்லூர் எனப்படுவது சேய்ஞலூர் என வழங்கப் பெற்றிருக்கிறது. இங்குள்ள மாடக்கோயில் கோச்செங்கட் சோழனால் எடுப்பிக்கப் பெற்றது எனவும் இக்கோயிலில் வரையப் பெற்றுள்ள மூன்றாம் இராசராச சோழன் காலத்துக் கல்வெட்டொன்று "மிழலை நாட்டுச் சேய்ஞலூ ருடையார் விசுவேசுவர தேவர் கோயில்" என்று கூறுவதால் இவ்வூர் மிழலை நாட்டிலுள்ளது என்பது உறுதியாதல் காண்க' எனவும் பண்டாரத்தார் குறிப்பிடுகிறார். (மேற்படி. பக். 40-41). இந்தச் சேங்கனூர் குடந்தையிலிருந்து திருப்பனந்தாள் செல்லும் சாலையில் அமைந்துள்ள ஊராகும்.

சேங்கனூரில் தான் அறுபத்து-மூன்று நாயன்மார்களுள் ஒருவரான சண்டேசுவர நாயனார் பிறந்து வாழ்ந்தார். மேலும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திற்கு இருபத்து நாலாயிரப்படி என்னும் உரையெழுதிய பெரியவாச்சான் பிள்ளை பிறந்தது இவ்வூரேயாகும் எனவும் இவர் எழுதுகிறார்.

பிற்காலச் சோழர்களின் உயிர்நாடியாக விளங்கியது அவர்களது கிராம ஆட்சி முறையாகும். அது குறித்து விரிவாகப் பேசும் கல்வெட்டுகளுள் குறிப்பிடத்தக்க ஒன்று சேய்ஞலூரில் காணப்படும் கல்வெட்டாகும். அக்கல்வெட்டை அப்படியே தமது பிற்காலச் சோழர் வரலாற்றில் படியெடுத்துத் தந்ததோடு, கல்வெட்டுச் செய்திகளைப் பற்றியும் விரிவாக ஆராய்ந்த பண்டாரத்தார், சேய்ஞலூரில் காணப்படும் கல்வெட்டானது, 'அவ்வூரில் வாரியம் அமைப்பது பற்றியும் கடமை முதலியவற்றை வசூலிப்பது பற்றியும் சபா விநியோகம் என்னும் வரி வாங்கிச் செலவிடுவது பற்றியும் அவ்வூர்க் கோயில் சபையோர் செய்த முடிவுகளைத் தெரிவிக்கிறது - - - ' என எழுதுகிறார் (பி. சோ. வ. ப. 507).

பண்டாரத்தார் எடுத்துக் காட்டிய இந்த ஆய்வுக் குறிப்புகள் அவ்வூரிலுள்ள படித்த மக்களுக்கே தெரியுமா என்பது கேள்விக் குறியாகும்.

### கடம்பங்குடி

சேங்கனூருக்கு வடக்கே கொள்ளிடக்கரையை ஒட்டி அமைந்த ஊர் கடம்பங்குடி எனப்படுவதாகும். அவ்வூர் இப்பொழுது கடமங்குடி என மருவி வழங்குகிறது. அவ்வூரானது சோழமண்டலம்

விருதராச பயங்கர வளநாட்டு மண்ணி நாட்டைச் சேர்ந்தது என்பதும், அவ்வூரைச் சேர்ந்த வேளாண்மாதவனாகிய இராச வல்லபப் பல்லவரையன் என்பவன் முதற் குலோத்துங்கனின் அமைச்சரவையில் ஒருவனாக இருந்திருத்தல் வேண்டும் என்பதும் பண்டாரத்தாரின் ஆய்வு முடிவாகும். (மேற்படி ப. 314).

இராசராசன் ஆட்சிக் காலத்தில் மண்ணி நாடு இடம் பெற்ற வளநாடு இராசேந்திர சிங்க வளநாடு எனக் குறிப்பிடப்பெறுகிறது. ஆயினும் மேற்கண்ட பகுதியில் கடம்பங்குடியானது விருதராச பயங்கர வளநாட்டில் இடம் பெற்ற ஓர் ஊர் எனச் சுட்டப்படுகிறது. ஆளுகின்ற அரசர்களுக்கேற்ப வளநாடு, நாடு, ஊர் முதலானவற்றின் பெயர்கள் அவ்வப்போது மாறி மாறி வழங்கி வந்திருப்பதை வரலாறு உணர்த்துகிறது. அதனடிப்படையில்தான் இராசேந்திர சிங்க வளநாடு காலப்போக்கில் விருதராச பயங்கர வளநாடு என மாற்றம் பெற்றிருக்கிறது.

## சூரியனார் கோயில்

தஞ்சை மாவட்டம், ஆடுதுறைக்கு வடகிழக்கே அமைந்திருப்பது சூரியனார் கோயில் என்னும் ஊராகும். முதற் குலோத்துங்க சோழன் சூரியனுக்குக் கோயில் கட்டி வழிபட்ட இவ்விடமே சூரியனார்கோயில் என வழங்கப் பெறுகிறது. இந்த வழிபாட்டு நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு கன்னோசி நாட்டுத் தொடர்பு குலோத்துங்கனுக்கு இருந்ததை ஆய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். இதைப் பண்டாரத்தாரும் ஏற்கிறார்.

ஆயினும் சூரியனுக்குத் தனிக்கோயில் கடைச்சங்க காலத்திலேயே நம் தமிழகத்தில் இருந்தது என்று குறிப்பிடும் பண்டாரத்தார், அவ்வழிபாடு தொன்மை வாய்ந்தது என்பது சிலப்பதிகாரத்திலுள்ள மங்கல வாழ்த்துப்பாடலாலும் கனாத்திறமுரைத்த காதையாலும் நன்கறியக் கிடத்தல் உணரத்தக்கது என்றும் குறிப்பிடக் காணலாம். இதனால் தமிழகத்தில் சூரிய வழிபாட்டின் தொன்மையை உணர்ந்து கொள்ள முடிகிறது (மேற்படி. ப. 308). இவ்வூர் அக்காலத்தில் சோழமார்த்தாண்டாலயம் என வழங்கப் பெற்றது எனவும் இவர் சுட்டுகிறார்.

## திருமணஞ்சேரி

மயிலாடுதுறைக்கு மேற்கே குற்றாலத்திற்கு வடக்கே அமைந்துள்ள திருமணஞ்சேரி என்னும் ஊர் அசல் உட்கிராமமாகும். அவ்வூர் அக்காலத்தில் 'கரிகால் சோழ சதுர்வேதி மங்கலம்' என வழங்கப்பட்டதெனவும் கி.பி. 1138இல் அவ்வூர்ச் சபையார் மேற்கொண்ட செயல்கள் சிலவற்றை அவ்வூர்க் கோயிலிலிலுள்ள

கல்வெட்டு உணர்த்துகிறது எனவும் பண்டாரத்தார் சுட்டுகிறார் (மேற்படி பக். 531 - 532).

இதன்மூலம் திருமணத்திற்கான தெய்வ வழிபாட்டோடு மட்டும் தொடர்புடையதாக மக்களால் இன்று கருதப்பட்டு வரும் அந்த ஊருக்குரிய வரலாற்றுச் சிறப்பு வெளிப்படுவதற்குக் காரணமானவர் பண்டாரத்தார் என்பதனை விளங்கிக் கொள்ள முடிகிறது.

### நடார்

திருவிடைமருதூர் வட்டம் திருநாகேஸ்வரத்திற்குத் தென்கிழக்கே உள்ளது நடார் என்னும் சிற்றூராகும். இவ்வூரில் வாழ்ந்த ஓர் அரசியல் தலைவனாகச் சேனாபதி இராசராசன் பருநிருப இராக்கத வீரசோழ இளங்கோ வேளான் என்பவனைப் பண்டாரத்தார் குறிப்பிடுகிறார். கல்வெட்டு ஆதாரத்தை அடிப்படையாகக் கொண்டு இவனை அதிராசேந்திர சோழனின் படைத்தலைவர்களுள் ஒருவனாக இவர் குறிப்பிடக் காணலாம். இவன் காஞ்சி மாநகரத்திலிருந்து கோயில் கணக்குகளை ஆராய்ந்த அதிகாரிகளுள் ஒருவன் என்ற குறிப்புக் காணப்படுகிறது (மேற்படி ப. 265).

இந்த வரலாற்றுக் குறிப்பு எதுவும் நடார் மக்களுக்கே தெரியவில்லை என்பதுதான் எனது கள ஆய்வின் போது அறிந்த செய்தியாகும்.

### வண்ணக்குடி

திருவிடைமருதூருக்குக் கிழக்கே கோவிந்தபுரத்திற்குத் தெற்கே அமைந்திருப்பது வண்ணக்குடி என்னும் ஊராகும். விக்கிரம சோழன் என்பவன் தனது ஆட்சியின் ஏழாம் ஆண்டில் திருவிடைமருதூருக்குச் சென்றிருந்த போது, அவ்வூரைச் சேர்ந்த திருவண்ணக்குடி என்ற ஊரினைத் 'தியாகசமுத்திர சதுர்வேதி மங்கலம்' என்று பெயர் மாற்றித் திருவிடைமருதூர்க் கோயிலுக்கு இறையிலி தேவதானமாக அளித்தான் என்று திருவிடைமருதூர்க் கோயில் கல்வெட்டு குறிப்பிடுவதாகப் பண்டாரத்தார் சுட்டுகிறார் (மேற்படி. ப. 331). இந்த வரலாற்றுச் சுவடு கொஞ்சம் கூடத் தெரியாமல் சாதாரணமாக ஒரு குக்கிராமமாக இன்று வண்ணக்குடி காணப்படுகிறது என்பதுதான் வேதனைக்குரிய செய்தியாகும்.

கதிராமங்கலத்திற்கு மேற்கேயுள்ள திருக்கோடிகா சிவாலயத்திலுள்ள சண்டேசுவர நாயனார் கோயில் அக்காலத்தில் தியாகசமுத்திரம் என்றும், சுவாமிமலைக்கு நேர் மேற்கே உள்ள ஓர்

ஊர் தியாகசமுத்திரம் என்றும் குறிக்கப்பெறுவது ஆய்விற் குரியதாகும்.

## நாலூர்

திருவிடைமருதூர் ஒன்றியம் திருச்சேறைக்குத் தெற்கே அமைந்துள்ளது நாலூர் என்னும் ஊராகும். இந்த நாலூரைச் சேர்ந்தவனாக முதற்குலோத்துங்க சோழனின் படைத்தளபதிகளுள் ஒருவனான சேனாதிபதி ஞானமூர்த்திப் பண்டிதன் ஆகிய மதுராந்தக பிரமாதிராஜன் என்பவனைப் பண்டாரத்தார் குறிப்பிடுகிறார் (மேற்படி ப.331).

'கிராமசபைப் பெருமக்கள் கூடிக் காரியங்களை நடத்துவதற்குப் பல ஊர்களில் தனியாக மாளிகைகள் அமைக்கப் பட்டிருந்தன. எனினும் இவர்கள் கோயில் மண்டபங்களிலும் மன்றங்களிலும் கூடுவதும் உண்டு. தஞ்சாவூர் ஜில்லாவில் குடவாசலுக்குப் பக்கத்தே உள்ள நாலூர் சபை முதல் இராசராசசோழன் ஆட்சிக்காலத்தில் அவ்வூர்க் கோயிலில் கண்டராதித்தன் மண்டபத்திலும், இராசராசன் மண்டபத்திலும், வண்ணக்கனார் அம்பலத்திலும் கூட்டம் நடத்தியுள்ளமை அங்குக் காணப்படும் கல்வெட்டுகளால் அறியப்படுகின்றது (மேற்படி ப.500) என்று பண்டாரத்தார் குறிப்பிடுவதனை நோக்க, கிராம ஆட்சியானது சோழர் காலத்தில் நன்கு வேரோடியிருந்தமையினை அறிந்துகொள்ள முடிகிறது.

## சாத்தனூரும் திருவாவடுதுறையும்

சோழ மண்டலத்தில் ஆடுதுறைக்குக் கிழக்கே வீரசோழன் ஆற்றின் கரையில் அமைந்துள்ளது சாத்தனூர் என்னும் ஊராகும். இவ்வூருக்குப் பக்கத்தில் உள்ளது திருவாவடுதுறை என்னும் ஊர். ஆயினும் பழங்காலத்தில் சாத்தனூரில் இருந்த சிவன்கோயிலே திருவாவடுதுறை என்று வழங்கப் பெற்றது என்பதனைக் கல்வெட்டு மற்றும் இலக்கியச் சான்று கொண்டு பண்டாரத்தார் நிறுவியுள்ளார்.

காலப்போக்கில் கோயிலின் பெயர் அதனைச் சூழ்ந்துள்ள இடங்களுக்கு ஊர்ப்பெயராக மாறிய நிலையையும் இவர் எடுத்துக் காட்டுகிறார். இவ்வாறு மாறுவதால் ஊரின் எஞ்சிய பகுதி மட்டும் பழைய பெயருடன் வழங்கும் நிலை உருவாகும். இதனை அவர், பழையாறை நகரிலிருந்த பட்டீச்சரமும் திருச்சத்திமுற்றமும் திருமேற்றளியும் வேறுவேறு ஊர்களாயினமைபோலச் சாத்தனூரி லிருந்த திருக்கோயிலாகிய திருவாவடுதுறை என்பதும் ஒரு தனி ஊராகப் பிற்காலத்தில் வழங்கி வருதல் அறியத்தக்கது. திருவாவடுதுறை என்னும் பெயரும் இத்திருக்கோயிலைச் சூழந்துள்ள

சாத்தனூரின் ஒரு பகுதிக்கு மாத்திரம் வழங்கப்பெற்றுள்ளமையின், எஞ்சிய பகுதி சாத்தனூர் என்னும் பழைய பெயருடன் இதற்கு அண்மையில் இன்றும் நிலைபெற்றிருத்தல் அறியற் பாலதாகும்' எனக் குறிப்பிடும் பகுதியால் அறிந்து கொள்ளலாம் (ச.ப.ஆ.க.ப.181).

இதுகுறித்து, அவர் விரிவாகச் 'சாத்தனூரும் திருவாவடு துறையும்' என்னும் தலைப்பில் எழுதியுள்ளார் (மேற்படி பக்.179-181).

## கோனேரிராசபுரம்

தஞ்சை மாவட்டம் ஆடுதுறைக்குத் தென்கிழக்கே அமைந்துள்ள கோனேரிராசபுரம் என்ற ஊர் பழங்காலத்தில் திருநல்லம் என வழங்கப்பெற்றிருக்கிறது. அவ்வூரிலுள்ள சிவபெருமானுக்குச் செம்பியன்மாதேவி என்னும் அரசமாதேவி தமது கணவர் கண்டராதித்தரின் நினைவாகக் 'கண்டராதித்தம்' என்னும் கற்றளியை அமைத்ததோடு, அக்கோயில் வழிபாட்டிற்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தார் என்பதனை அக்கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஆதாரத்தைக் கொண்டு பண்டாரத்தார் தெளிவுபடுத்தியுள்ளார். (பி.சோ.வ.ப.65). சோழர் வரலாற்றில் கோனேரிராசபுரம் சிறப்பிடம் பெற்றிருந்தது என்பதனை இவரது இந்த ஆய்வு தெளிவுபடுத்துகிறது.

## வண்டுவாஞ்சேரி

முதற்குலோத்துங்க சோழனின் படைத் தளபதியும் கலிங்கப் போரை முன்னின்று நடத்தியவனுமான கருணாகரத் தொண்டைமான் வாழ்ந்த ஊர் வண்டை நகர் எனப்படுவதாகும். அது திருநறையூர் நாட்டு வண்டாழஞ்சேரி எனவும், அதுவே இன்று வண்டுவாஞ்சேரி என மருவி வழங்குகிறது எனவும் பண்டாரத்தார் எடுத்துக்காட்டுகிறார் (மேற்படி ப.314. சி). இது வண்டையம்பதி எனவும், வண்டு உலவும் சேரி எனவும், வண்டுலாஞ்சேரி எனவும் பழங்காலத்தில் வழங்கப்பட்டிருக்கிறது. இந்த வண்டுவாஞ்சேரியானது தஞ்சை மாவட்டம் நாச்சியார்கோயிலில் இருந்து திருச்சேறை செல்லும் வழியில் அமைந்துள்ளது.

## ஏரகூரம்

கும்பகோணத்திற்கு வடமேற்கே இரண்டு கல் தொலைவில் அமைந்துள்ளது ஏரகூரம் என்னும் ஊர். அவ்வூரானது இன்று ஏராரம் என்று பாமர மக்களால் வழங்கப்பெறுகிறது. அவ்வூரின் தென்மேற்கு மூலையில் வயல்களுக்கு இடையில் அழிந்து போன நிலையில் ஒரு சிவாலயம் உள்ளது. அங்குப் புதையுண்டு கிடந்த ஒரு கல்வெட்டைத் தோண்டி எடுத்ததன் மூலம் மிகப்பெரிய வரலாற்று

உண்மைகளை முதன்முதலாகக் கண்டுபிடித்து உரைத்த பெருமை பண்டாரத்தாரைச் சாரும் (ச.ப.ஆ.க: ஏர் என்னும் வைப்புத்தலம்).

அவர் மேற்குறிப்பிட்ட கல்வெட்டை ஆராய்ந்து பார்த்தபோது, அது கிபி.1120 முதல் 1136 வரை சோழ மண்டலத்தில் ஆட்சி செய்த விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டாகும் என்ற முடிவிற்கு வந்தார். மேலும், அக்கல்வெட்டின் ஒருபகுதியாகிய 'இன்னம்பர் நாட்டு ஏராகிய மும்மடி சோழ மங்கலம்' என்ற தொடரைக் கண்டு அக்கோயில் அமைந்துள்ள அவ்வூரின் பெயர் யாது எனப் புரிந்துகொண்டமையால் அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அத்தொடரைக் கொண்டு அப்பர் க்ஷேத்திரக் கோவையில் குறிக்கப் பெற்ற 'ஏர்' என்னும் தலம் இன்னம்பர் நாட்டு ஏர்தான் என்ற முடிவிற்கு அவர் வந்தார்.

அக்கல்வெட்டின் அடிப்படையில் இன்னம்பர் நாடு, ஏர் என்னும் பகுதிகளின் சிறப்புகளைத் தேடி வெளியிடும் முயற்சிகளையும் பண்டாரத்தார் மேற்கொண்டார். இன்னம்பர்நாடு பழங்காலத்தில் சோழ மண்டலத்தில் காவிரிக்கு வட கரையிலிருந்த நாடுகளுள் ஒன்றாகும். இன்னம்பர் அதன் தலைநகராகும். அவ்வூர் இன்று இன்னம்பூர் என வழங்கப்படுகிறது.

கல்வெட்டுகளின் சான்றுகளைக் கொண்டு நோக்குமிடத்து, கும்பகோணம் வட்டத்திலுள்ள கொட்டையூர், மேலக்காவேரி, கருப்பூர், அசுகூர், ஏரகம் முதலான ஊர்களையும், பாவநாசம் வட்டத்திலுள்ள ஆதனூர், மருத்துவக்குடி முதலான ஊர்களையும் தன்னகத்துக் கொண்டு விளங்கியது இன்னம்பர் நாடு என இவர் எடுத்துரைக்கிறார் (மேற்படி ப.89).

மேலும் இவர், அவ்வூர் முதலாம் இராசராசன் காலத்திலிருந்து 'மும்மடி சோழ மங்கலம்' என்ற பெயரில் வழங்கப்பட்டது எனவும் தெளிவுபடுத்துகிறார்.

## ஆவூர்

செங்கற்பட்டு மாவட்டம் உக்கல் என்னும் ஊரிலுள்ளது 'இராசராசன்கிணறு' என்னும் கிணறு. இக்கிணற்றின் வரலாற்றை அவ்வூரிலுள்ள கோயில் ஒன்றில் காணப்படும் ஒரு கல்வெட்டு விளக்குகிறது. அதன் ஒரு பகுதியில் இராசராசன் கிணற்றைத் தோண்டியவன், 'ஸ்ரீராஜராஜ தேவர் பணி மகன் சோழ மண்டலத்துத் தென்கரை நாட்டு நித்த விநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்து ஆவூருடையான் கண்ணனாரூரான்' என்னும் குறிப்புக் காணப் படுவதாக இவர் எடுத்துக்காட்டுகிறார்.

இந்த ஆவூர் குறித்து ஆய்வு செய்த பண்டாரத்தார், 'ஆவூர்க் கூற்றத்து ஆவூர் என்பது தற்காலத்தில் தஞ்சை ஜில்லா பாவநாசந் தாலுக்காவில் உள்ளதும் சைவ சமயாச்சாரியார்களால் பாடப்பெற்ற சிறப்புடையதும் பசுபதீச்சரம் என்னும் திருக்கோயிலைத் தன்னகத்துக் கொண்டு விளங்குவதுமாகிய ஆவூரேயாகும். ஆவூர்க் கூற்றம் என்பது இவ்வாவூரைத் தலைநகராகக் கொண்டு இதனைச் சூழ்ந்திருந்த ஒரு சிறு நாடாகும். இரும்புதலை, விளத்தூர் முதலான ஊர்கள் இக்கூற்றத்திலிருந்தன எனக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன என எழுதுகிறார் (மேற்படி, ப. 74). இந்த ஆவூர் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தரால் சிறப்பித்துப் பாடப்பெற்றுள்ளது.

## இராசகிரி

தஞ்சை மாவட்டம் பாவநாசத்திற்கு மேற்கே உள்ளது இராசகிரி என்னும் ஊர். அவ்வூரில் இப்பொழுது முகம்மதியர்கள் மிகுதியாக வாழ்கின்றனர். அவ்வூரானது ஆதித்த சோழன் பெயரால் 'இராசகேசரிச்சதுர்வேதி மங்கலம்' என்று அக்காலத்தில் வழங்கப்பெற்று வந்தது என்பதனைக் கோயில் தேவராயன்பேட்டை என்னும் ஊரில் காணப்படும் கல்வெட்டுகளைக் கொண்டு பண்டாரத்தார் ஆய்ந்துரைக்கிறார் (பி.சே. வ. ப.31).

## கருந்தட்டான்குடி

தஞ்சையிலிருந்து குடந்தைக்குச் செல்லும் சாலையில் தஞ்சையை ஒட்டி அமைந்துள்ளது கருந்திட்டைக்குடி என்னும் ஊர். அஃது இன்று கருந்தட்டான்குடி என வழங்கப்படுகின்றது. முதற் குலோத்துங்க சோழன் முதன்முதலாகச் சோழநாடு முழுமையும் சுங்கவரியை நீக்கினான். அதன் காரணமாகச் சோழ நாடு, 'சுங்கமில்லாச் சோழ நாடு' என்னும் பெயரைப் பெற்றது. சுங்கம் வசூலிக்கப்பட்ட இடங்களுள் ஒன்றான கருந்திட்டைக்குடியானது 'சுங்கந் தவிர்த்த சோழ நல்லூர்' என்னும் பெயரைப் பெற்றது என்று பண்டாரத்தார் ஆய்ந்துரைக்கிறார் (மேற்படி ப. 311).

## செந்தலை

தஞ்சைக்கு வடமேற்கே அமைந்து இன்று செந்தலை என வழங்கும் ஊர் முத்தரையர்களின் ஆட்சிக்காலத்தில் 'சந்திரலேகை சதுர்வேதி மங்கலம்' என வழங்கப்பட்டதெனவும், அதனைத் தலைநகராகக் கொண்டே அக்காலத்தில் முத்தரையர்கள் அதனைச் சுற்றியுள்ள பகுதியை அரசாண்டனர் எனவும் பண்டாரத்தார் எடுத்துக் காட்டுகிறார் (மேற்படி ப.14). இவ்வூர் ஓர் அரச வம்சத்தினருக்குத் தலைநகராக அக்காலத்தில் (மேற்படி பக். 14)

இருந்திருக்கிறது என்பது ஊர் மக்களுக்குப் பெருமை சேர்க்கும் செய்தியாகும்.

### நாகபட்டினம்

சோழ மண்டலத்தைச் சேர்ந்த நாகபட்டினத்திற்குச் சோழ குலவல்லிப் பட்டினம் என்னும் மற்றொரு பெயர் உண்டு என்பது லெய்டன்சிறு செப்பேடுகளால் அறியப்படுகின்றது என்பதும், அவ்வூரிலிருந்த இராசராசப் பெரும்பள்ளி, சோழர்கள் காலத்தில் கடாரத்து அரசனால் எடுப்பிக்கப்பெற்றது என்பதும் பண்டாரத்தார் தரும் செய்தியாகும் (மேற்படி ப. 305).

### மணக்குடி

மணக்குடி என்னும் ஊர் திருவாரூரில் இருந்து திருத்துறைப் பூண்டிக்குச் செல்லும் இருப்புப் பாதையிலுள்ள பொன்னறை என்னும் புகைவண்டி நிலையத்திலிருந்து எட்டுக்கல் தொலைவில் உள்ளது. அகநானூற்றின் உரையாசிரியரான வில்லவதரையன் என்பவரது ஊர் இடையள நாட்டு மணக்குடி என்ற ஒரு குறிப்புக் கிடைக்கிறது.

அந்த மணக்குடி எங்கு உள்ளது என்ற ஆய்வினை மேற்கொண்ட பண்டாரத்தார் இடையள நாடு குறித்தும், அந்நாட்டைச் சேர்ந்த ஊர்கள் குறித்தும் தமது ஆய்வில் விரிவாக விளக்குகிறார் (ச.ப. ஆ.க. பக். 97-99). அவ்வகையில் மணக்குடியானது சோழ மண்டலத்திலுள்ள தொன்மையான ஊர்களுள் ஒன்று என்பதும், இராசேந்திர சோழன் காலத்தில் அவனது அரசியல் தலைவன் ஒருவன் அவ்வூரில் வசித்துவந்தான் என்பதும், சோழர்கள் காலத்தில் அவ்வூர் பெருமை மிக்க ஒன்றாக இருந்தது என்பதும் இவர் தரும் ஆய்வுச் செய்தியாகும்.

மேலும் இவர், ஐங்குறுநூற்றில் (56) குறிக்கப்பெறும் சோழரது ஆமூர் இந்த மணக்குடிக்கு அண்மையில் உள்ள ஓர் ஊர் என்ற குறிப்பினையும் தருகிறார்.

### கங்கை கொண்ட சோழபுரம்

கங்கை கொண்ட சோழனாகிய முதலாம் இராசேந்திரனால் அமைக்கப்பட்டது கங்கை கொண்ட சோழபுரம் என்னும் பெருநகராகும். இம்மாநகரமானது 'கங்காபுரி' என்று கலிங்கத்துப்பரணி, விக்கிரம சோழன் உலா ஆகிய நூல்களிலும், 'கங்க மாநகர்' என்றும் வீர ராசேந்திர சோழன் மெய்க்கீர்த்தியிலும், 'கங்காபுரம்' என்று தண்டியலங்கார மேற்கோள் பாடலிலும் கூறப்பட்டுள்ளமையினையும் பண்டாரத்தார் எடுத்துக் காட்டுகிறார் (பி.சோ. வ. ப.182).

மேலும் இவர், கங்கை கொண்ட சோழபுரத்தின் பகுதிகள் இப்போது உட்கோட்டை, மாளிகைமேடு, ஆரிக்கலம், வாணதரையன்குப்பம், கொல்லாபுரம், வீரசோழநல்லூர், சுண்ணாம்புக்குழி, குருகை பாலப்பன் கோயில் என்னும் சிற்றூர்களாகக் காணப்படுகின்றன என்ற ஆய்வுக் குறிப்பை முன் வைக்கக் காணலாம் (மேற்படி ப.183).

இராசேந்திரசோழன் வெட்டிய ஏரிக்குச் 'சோழகங்கம்' என்னும் பெயர் வழங்கப்பட்டதைத் திருவாலங்காட்டுச் செப்பேட்டின் துணைகொண்டு இவர் விளக்குகிறார். மலைகளே இல்லாத சோழநாட்டுப் பகுதியில் உருவாக்கப்பட்ட இந்த ஏரியின் பெருமையினை வியந்து பேசும் பண்டாரத்தார், 'அரசியலார் இவ்வேரியைச் சீர்படுத்தினால் உணவுப் பஞ்சம் ஏற்பட்டுள்ள இக்காலத்தில் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் விளைந்து பயன் தருமென்பது திண்ணம்' என்ற ஆதங்கத்தையும் முன் வைக்கிறார் (மேற்படி, ப.185).

## கண்டி ரகசியம்

உடையார்பாளையம் வட்டம், கொள்ளிடப் பேராற்றின் வடகரையில் திருமழபாடிக்கு மேற்கே ஒரு மைல் தூரத்தில் அமைந்துள்ளது கண்டிராச்சியம் என்னும் சிற்றூராகும். இவ்வூரானது கண்டராதித்தன் என்னும் சோழ மன்னனால் கண்டராதித்த சதுர்வேதி மங்கலம் என்னும் பெயரில் அமைக்கப்பட்டது என்று ஆனைமங்கலச் செப்பேட்டைச் சான்றாகக் கொண்டு பண்டாரத்தார் விளக்குகிறார் (மேற்படி, ப.60).

## கோவிந்தபுத்தூர்

கோவிந்தபுத்தூர் என்னும் ஊர் பழைய திருச்சிராப்பள்ளி மாவட்டம் உடையார்பாளையம் வட்டத்திலுள்ள ஒரு சிவத் தலமாகும். திருப்புறம்பயத்திற்கு வடமேற்கே மூன்று கல் தொலைவில் கொள்ளிடப் பேராற்றின் வடகரையில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரிலுள்ள சிவாலயம் திருவிசயமங்கை என அழைக்கப்படுகிறது. இக்கோயில் சம்பந்தராலும் நாவுக்கரசராலும் பாடப்பெற்ற பழமையுடையதாகும்.

கோவிந்தபுத்தூர் எனப்பெயர் பெற்ற இவ்வூர் இன்று அதே பெயரிலேயே வழங்கப்பெறுகின்றது. ஆயினும் கோவிந்தபுத்தூரும் அவ்வூரிலுள்ள சிவாலயமாகிய திருவிசய மங்கையும் வெவ்வேறு தலங்கள் என்னும் கருத்து உருவாகியுள்ளது. கோவிந்தபுத்தூர் என்பது வைப்புத்தலம் என்றும் திருவிசய மங்கை பாடல் பெற்ற தலம் என்றும் கருதி வந்தனர்.

இச்சூழலில் ஒரு சிவராத்திரியின்போது கோவிந்த புத்தூரி லுள்ள சிவபெருமானை வணங்கும் பொருட்டு அவ்வூருக்குச் சென்ற பண்டாரத்தார், அவ்வூர்க் கோயிலிலுள்ள இரண்டு கல்வெட்டுகளை காணலுற்றார். அவற்றைப் படித்த பிறகு அக்கோயிலுக்கு விசயமங்கலம் எனவும் விசயமங்கை எனவும் பெயர் வழங்கப்பட்டதை அறிந்து மகிழ்ந்ததோடு தமது ஆய்வை விரிவு படுத்தவும் செய்தார்.

அதன் அடிப்படையில் கோவிந்தபுத்தூரிலுள்ள அத்திருக் கோயிலே திருவிசயமங்கை என்னும் பெயருடையதென்று முடிவிற்கு வந்தார். அவரது அந்த முடிவிற்குத் தேவாரப் பதிகங்கள், பெரியபுராணம், அவ்வூர்க் கோயில் கல்வெட்டுகள் ஆகியன மூலச் சான்றுகளாக அமைந்தன (ச.ப.ஆ.க.ப.57).

மதுராந்தக சோழன் காலத்தில் அமைக்கப்பெற்ற இக்கற்றளி யானது இராசராசனின் தஞ்சை இராசராசேச்சுரத்தைக் காட்டிலும் பழமையானது என்பதனையும் இவர் எடுத்துக் காட்டுகிறார்.

ஆயினும், இந்தத் திருவிசயமங்கை எனப்படுவது ஓர் ஊரின் பெயராகத் தஞ்சை மாவட்டம் திருவைகாவூருக்குக் கிழக்கே கொள்ளிடப் பேராற்றின் தென்கரையில் விசயமங்கை என்று வழங்கிப் பின்னர் அதுவே மருவி 'வெசமூங்கி' என இன்று வழங்குகிறது. இது தவறான வழக்காகும்.

## மழநாடு

'பழந்தமிழகத்தில் வீரம் செறிந்த அரச வம்சத்தவர்களாய் விளங்கியவர்கள் மழவர்கள். அவர்கள் வாழ்ந்த நாடு மழநாடு எனச் சுட்டப்படுகிறது. அதனை ஆண்ட அரசர்கள் வரலாற்றை ஆராய்ந்த பண்டாரத்தார், இம்மழநாடு கொள்ளிடத்தின் வடகரையைச் சார்ந்ததாய், ஐயன் வாய்க்கால், பெருவள வாய்க்கால் முதலிய கால்வாய்களாற் பாயப் பெற்றுத் திருச்சிராப்பள்ளி சில்லாவில் கீழ்மேல் பலகாத தூரம் நீண்டு கிடந்ததொரு நாடாதல் வேண்டும். இஃது ஆசிரியர் சேக்கிழார் காலத்தில் சோழநாட்டின் உள்நாடுகளில் ஒன்றாக இருந்ததென்பதை அப்பெரியாரின் செந்தமிழ்ப் பாடல்கள் கொண்டு இனிது விளக்கினோம்' என எழுதுகிறார் (மேற்படி ப.38). இதன்மூலம் மழநாட்டின் எல்லையை விளங்கிக்கொள்ள முடிகிறது.

## ஆலம்பாக்கம்

மாற்பிடுகு பெருங்கிணறு பற்றிய ஆய்வினை மேற்கொண்ட பண்டாரத்தார் அதனைத் தோண்டுவித்தவன் பற்றிய ஆய்வினையும் மேற்கொண்டார். அவ்வாறு தோண்டுவித்தவன், 'ஆலம்பாக்க விசய நல்லூழான் என்பவனது தம்பி' என்ற கல்வெட்டுக் குறிப்பு அவருக்குக் கிடைத்தது. அதனைத் தொடர்ந்து ஆலம்பாக்கம் பற்றி விளக்க வந்த

அவர், 'இவ்வாலம்பாக்கம் லால்குடி என்று தற்காலத்தில் வழங்கும் திருத்தவத்துறையிலிருந்து அரியலூர்க்குச் செல்லும் பெருவழியில் 12ஆவது மைலில் உள்ளது. இது பல்லவர்களது ஆட்சிக் காலங்களில் தந்திவர்ம மங்கலம் என்னும் பெயரை எய்தியிருந்தது; சோழ மன்னர்களது ஆட்சிக்காலங்களில் மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம் என வழங்கிற்று; அந்நாளில் சோழ மண்டலத்திலிருந்து ஒன்பது வளநாடுகளில் இராசேந்திரசிங்க வளநாட்டின் உண்ணாடுகளுள் ஒன்றான பொய்கை நாட்டிலுள்ள ஊராகஇருந்தது. . . . . . திருவெள்ளறையிலுள்ள மாற்பிடுகு பெருங்கிணற்றைப்போல இவ்வாலம்பாக்கத்திலும் மாற்பிடுகு ஏரி ஒன்றும் இருந்ததென்று கல்வெட்டுகளால் புலப்படுகின்றது' என ஆய்ந்துரைத்தார் (மேற்படி, பக். 70-71). இப்பகுதியின் மூலம் ஆலம்பாக்கம் பற்றிய பழைய வரலாற்றுச் செய்திகள் தெளிவாகின்றன.

## திருவரம்பூர்

திருச்சிராப்பள்ளிக்குக் கிழக்கே அமைந்துள்ள திருவரம்பூர் என்னும் ஊர் பழங்காலத்தில் 'மலரி' என்று வழங்கப் பெற்றமையினை அவ்வூர்க் கோயில் கல்வெட்டுச் சான்று கொண்டு இவர் விளக்கக் காணலாம் (மேற்படி, ப.160). இந்த மலரியில் பிறந்தவர்தான் ஒட்டக்கூத்தர் என்பதும் இவர் தரும் ஆய்வுக் குறிப்பாகும்.

## காட்டுமன்னார் கோயில்

காட்டுமன்னார் கோயிலின் பழைய பெயர் வீரநாராயணச் சதுர்வேதிமங்கலம் என்பதும் அவ்வூரை அமைத்தவன் பராந்தகன் என்பதும் இவர் தரும் வரலாற்றுக் குறிப்பாகும் (பி.சோ.வ. ப.55).

## ஆதனூர்

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான நந்தனார் பிறந்த ஊர் ஆதனூர் என்ற குறிப்பு திருத்தொண்டர் திருவந்தாதி, திருத்தொண்டர் புராணம் ஆகிய நூல்களில் காணப்படுகிறது. இந்த ஆதனூரின் இருப்பிடம் குறித்துக் கருத்து வேறுபாடுகள் நிலவி வந்தன. இச்சூழலில் அதுகுறித்த ஆய்வினை மேற்கொண்ட பண்டாரத்தார், 'மேற்கா நாட்டிலுள்ள பாடல் பெற்ற தலங்களாகிய ஓமாம்புலியூருக்கும் கடம்பூருக்கும் இடையிலுள்ள ஆதனூரே நந்தனாரது ஊர் என்பது நன்கு துணியப்படும். இனித் திருப்பனந்தாளுக்கு வடக்கேயுள்ள கீழை அணைக்கட்டுக்குக் கிழக்கே, ஏழு மைல் தூரத்தில், கொள்ளிடத்தின் வடகரையிலுள்ளது இவ்வாதனூர் என்று முடிவு செய்கிறார். (க.அ.உ. ப.56)

மேற்கா நாடு எனப்படுவது கொள்ளிடத்தின் வடகரையில் சோழ மண்டலத்திலிருந்த உள் நாடுகளுள் ஒன்றாகும்.

## முடிவுரை

இதுகாறும் கண்ட செய்திகளையெல்லாம் தொகுத்து நோக்குமிடத்து, வரலாற்றில் பலராலும் அறியப்பட்ட ஊர்களான காவிரிப்பூம்பட்டினம், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி முதலான ஊர்களைப் பற்றிப் பலரும் அறிந்திராத செய்திகளை ஆய்ந்துரைத்த பெருமைக்குரியவர் பண்டாரத்தார் என்பதனை விளங்கிக் கொள்ள முடிந்தது. இதற்கும் மேலாக, வரலாற்றில் பலரும் அறிந்திராத சோழ மண்டல ஊர்கள் பலவற்றின் வரலாற்றுச் சிறப்புகளையெல்லாம் வெளிக்கொணர வேண்டும் என்ற நோக்கோடு உழைத்து வெற்றி கண்டவர் பண்டாரத்தார் என்பது புலனாகின்றது. அத்தகைய வரலாற்றுச் சிறப்புகளை அவர் விளக்கியுள்ள காரணத்தினால் அவ்வூர்களுக்கான சிறப்பு மேலும் கூடுவதோடு ஊர் மக்கள் பெருமை கொள்ளவும் அவர் வழிவகுத்துத் தந்தவர் என்பதும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இதுபோன்று அவர் ஆய்ந்து கண்ட தமிழகத்தின் பிற மண்டலங்களைச் சேர்ந்த ஊர்கள் குறித்தும் விரிவான ஆய்வு மேற்கொள்ளப்படுதல் வேண்டும்.

## துணைநூற் பட்டியல்


சதாசிவ பண்டாரத்தார், தி.வை., கல்வெட்டுக்களால் அறியப் பெறும் உண்மைகள், தொல்காப்பியர் நூலகம், சிதம்பரம், இ. ப. 1963.

சதாசிவ பண்டாரத்தார், தி.வை., காவிரிப்பூம்பட்டினம், மாதவி மன்றம், மேலப் பெரும்பள்ளம், 1959.

சதாசிவ பண்டாரத்தார், தி.வை., சதாசிவ பண்டாரத்தார் ஆய்வுக் கட்டுரைகள், (தொகு. - அம. சத்தியமூர்த்தி), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

சதாசிவ பண்டாரத்தார், தி.வை., செம்பியன் மாதேவித் தல வரலாறு, ஸ்ரீகயிலாசநாத சுவாமி தேவஸ்தானம், செம்பியன்மாதேவி, 1958.

சதாசிவ பண்டாரத்தார், தி.வை., திருப்புறம்பயத் தல வரலாறு, ஸ்ரீ சாட்சிநாத சுவாமி தேவஸ்தான வெளியீடு, திருப்புறம்பயம், மூ. ப. 1972.

சதாசிவ பண்டாரத்தார், தி.வை., பிற்காலச் சோழர் வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1974.

சத்தியமூர்த்தி, அ.ம., தி.வை. சதாசிவ பண்டாரத்தார் வாழ்வும் பணியும், மகேந்திரன் பதிப்பகம், அம்மாசத்திரம், 1992.

சத்தியமூர்த்தி, அ.ம., ஆய்வுலகில் பண்டாரத்தார் பணிகள், மகேந்திரன் பதிப்பகம், அம்மாசத்திரம், 1992.

சேதுப்பிள்ளை, ரா.பி., தமிழகம் ஊரும் பேரும், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, ஆ.ப. 1987.

நீலகண்ட சாஸ்திரி, கே.ஏ., சோழர்கள் புத்தகம் 1. (தமிழாக்கம் - கே.வி. ராமன்), இந்தியன் கவுன்சில் ஆப் ஹிஸ்டாரிக்கல் ரிசர்ச், நியூ தில்லி, 1989.

மாயவன், அரங்க., தி.வை. சதாசிவ பண்டாரத்தாரின் தமிழாய்வு, முனைவர் பட்ட ஆய்வேடு (அச்சிடப் பெறாதது), பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி, 1999.


****

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தட்சிணாமூர்த்தி குருமுகம் - 100 | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| Agreement in Dravidian Languages | 100.00 |
| நாடகவியல் | 70.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்க பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| பெரியாரின் பண்பாட்டுப்புரட்சி | 25.00 |
| வ. உ. சி. வளர்த்த தமிழ் | 20.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| கருவூரார் பல திரட்டு | 70.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| சங்ககாலக் காசு இயல் | 30.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழில் மருத்துவ இதழ்கள் | 50.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

Pub.No. 491 ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் 45.00